# தத்துவமும் பக்தியும்

அ. ச. ஞானசம்பந்தன்



கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-600 017.

# பதிப்புரை

அறிவு வேறு; உணர்வு வேறு. அறிவில் மலர்வது தத்துவம்; உணர்வில் கனிவது பக்தி. ஒன்று மூளை என்றால் மற்றொன்று இதயம். இரண்டில் ஏதேனும் ஒன்று போதும் என்று எவர்தாம் சொல்வார்? பக்திக் கலப்பற்ற தத்துவம் வறட்டு வேதாந்தமாகக் கருதப்படும். அறிவுத் தொடர்பற்ற பக்தியோ வெறும் குருட்டு நம்பிக்கையாக எண்ணப்படும். இரண்டும் இணைந்தால் அங்கே வறட்டுத் தன்மை மாயும், குருட்டுத் தன்மை மாளும்; நிறைவு அல்லது பூரண நிலை தோன்றும்; வாழ்விற்கான—குறிக்கோள் கொண்ட வாழ்விற்கான வழி பிறக்கும்.

''தத்துவமும் பக்தியும்'' என்ற தலைப்பு தமிழில் ஒரு சோதனை முயற்சி. தத்துவ ஞானிகள் மட்டுமே ஆராயக் கூடிய துறை. தமிழகத்தில் திறனாய்வுத் தந்தையெனப் போற்றப்படும் பேராசிரியர் **அ. ச. ஞானசம்பந்தன்** அவர்கள் இந்தத் துறையில் துணிந்து முயன்று பெருவெற்றி பெற்றுள்ளார்கள். பேராசிரியர் அவர்களின் நூல் வெளியீடு உயர்ந்த நோக்கமும் புதிய சிந்தனைத் தூண்டலும் கொண்டதாக அமைய வேண்டும் என்ற கொள்கை கொண்டவர்கள். இக்கூற்றுக்கு இந்த நூலும் ஒரு சான்றாகும். இந்நூலை வெளியிடும் உரிமை தந்த அவர்களுக்கு எங்களுடைய நன்றி.

இவ்வண்ணம்,

**கங்கை புத்தக நிலையத்தார்**

# முன்னுரை

தத்துவமும் பக்தியும் என்ற தலைப்பில் வெளிவரும் இந்நூல் நான்கு கட்டுரைகளைக் கொண்டுள்ளது. 'சைவ சமயம்', ஒன்பது பதினொன்றாம் திருமுறைகள் என்ற இரு கட்டுரைகள் தவிர ஏனைய கட்டுரைகள் சொற் பொழிவை ஒலிப்பதிவு செய்து பின்னர் எழுதப்பெற்றவை யாகும். எனவே அவற்றின் நடை ஓரளவு சொற்பொழிவு நடையாகவே அமைந்திருக்கும் முதல் சொற்பொழிவு பூ.சா. கோ கலைக்கல்லூரியில் நிகழ்த்தப்பெற்றது. முதல் கட்டுரை தமிழாசிரியனாகிய என்னுடைய எல்லைக்கு அப்பாற்பட்டது. ஆனால், தத்துவம் பக்தி என்பவை பற்றி **தத்துவ இயலார்தாம் பேச உரிமையுடையவர்கள் என்ற கொள்கையின் எதிராக** ஒரு தமிழ் மாணவன் அது பற்றி என்ன நினைக்கின்றான் என்பதைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அத் தலைப்பைத் தந்து பேசு மாறு பணித்தார்கள் கலைக்கல்லூரியார். எந்த அளவு என் கடமையில் வெற்றி ஏற்பட்டுள்ளது என்பதைக் கணிக்கும் பொறுப்பைக் கற்பாரிடம் விட்டுவிடுகிறேன்.

'திருமந்திரப் பொருள் நிலை' என்ற சொற்பொழிவு திருமந்திர மாநாட்டில் செய்யப்பெற்றது. பிறர் ஒருவர் பேசவேண்டிய தலைப்பை அவர் வராத காரணத்தால் திடீரென்று பேச நேர்ந்தது. எனவே **இயல்பான குறைகள்** அதில் காணப்படலாம். 'சைவ சமயம்' என்பது சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் திருநெல்வேலியில் நிகழ்த்திய தலைமையுரையாகும். **காலத்துக்கேற்ற முறையில் சமயக் கருத்துக்களை வழங்கினாலொழிய சைவ சமயம் அணு**

யுகத்தில் புறக்கணிக்கப்படும் என்ற என்னுடைய அச்சத்தை வெளிப்படுத்துகிறது அக்கட்டுரை.

ஒன்பது பதினொன்றாம் திருமுறைகள் சென்னைப் பல்கலைக் கழகத் "திருமுறைக் கருத்தரங்கில்" பேசப் பெற்றது. காலங்காலமாக இருந்துவரும் சிலகருத்துக்கள் எவ்வளவு உள்ளீடற்றவை என்பதைத் தருக்க முறையில் நிறுவ முயன்றுள்ளேன். கருத்து வேற்றுமைக்கு மிகுதியும் இடந்தரும். இதுபற்றி அறிஞர்கள் கருத்து வழங்குவரா யின் ஏற்றுக்கொள்ளத் தயாராக உள்ளேன்.

பற்பல காலங்களில் பேசப்பெற்ற இவை இன்று ஒரு தொகுப்பாக வெளிவருகின்றன. கங்கை புத்தக நிலையத் தார் இதனைத் துணிவுடன் வெளியிட முன்வந்துள்ளனர், தமிழ் நூல்கள் கதைகளாகவோ நாவல்களாகவோ இல்லாதிருப்பின் எவ்வாறு வரவேற்கப்படும் என்பதை நன்கு அறிந்தவன் நான். என்றாலும் கங்கை உரிமை யாளர் துணிவுடன் வெளியிட முன் வந்தமைக்கு என்னுடைய வாழ்த்துக்கள் உரியன.

சென்னை
31-3-1994

அ. ச. ஞானசம்பந்தன்

# உள்ளே...

# தத்துவமும் பக்தியும்

## 1

**முதல் தோற்றம் :**

தத்துவமும் பக்தியும் என்ற இந்தத் தலைப்பு மிகமிகச் சிக்கலான்தாகும். எது தத்துவம் எது பக்தி என்ற ஆராய்ச்சியில் இறங்கினாலொழிய இவை இரண்டிற்கும் இடையே உள்ள ஒறறுமை வேற்றுமைகளைக் காண்பது கடினம். இவை இரண்டும் மனிதர்களிடம் மட்டுமே காணப்படுகின்ற கொள்கைகளாகும் அவ்வாறாயின் மனித சமுதாயத்தில் முதன் முதலில் தோன்றியது பக்தியா தத்துவமா என்ற வினாவை எழுப்பினால் உறுதியாக பக்திதான் என்ற விடை கிடைக்கும்.

மிகமிகப் பழைய காலத்தில் வாழ்ந்த கற்கால மனிதன் அச்சங் காரணமாகவே தெய்வ வழிபாட்டில் ஈடுபட்டிருக்கலாம். காடுகளில் தலை நிமிர்ந்து நடந்து சென்ற மனிதனை மரக்கொம்புகள் நெற்றியில் இடித்து அவன், நெற்றியிலிருந்து இரத்தம் பெருகச் செய்திருக்க லாம். தன்னுடைய உடம்பிலிருந்து இரத்தம் கொட்டுவது ஆதிமனிதனுக்குப் புதிய அனுபவம்; அதிலும் ஒரு மரக் கொம்பு குத்தி அவனுடைய உடம்பிலிருந்து இரத்தம்

பெருகுமாறு செய்தது அதைவிட வியப்புத் தருகின்ற ஒன்றாகும். ஏன் விலங்குகளை வேட்டையாடும் பழக்க முடைய அவன் கருவிகளைக் கொண்டு விலங்குகளைக் குத்தி அவற்றின் உடம்பிலிருந்து குருதி பெருகுமாறு செய்திருக்கிறான். அதனால் விலங்குகளைவிடத் தான் சக்தி வாய்ந்தவன் என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றி இருக்கலாம்.

இப்பொழுது மரங்கள் தன் உடம்பைக் குத்திஇரத்தம் பெருகுமாறு செய்து விட்டன எனின் மரங்கள் தன்னை விடச் சக்தி வாய்ந்தவை என எண்ணத் தொடங்கினான் போலும் ஆதிமனிதன்! அதன் பயனாக மரத்தை வணங் கினான்! காட்டுப் பாதையில் நடந்து சென்ற அவன் கால் களை அங்கு கிடந்த கல் பதம் பார்த்துவிட்டது! அப்பொழுது ஆதிமனிதன் குனிந்து அக்கல்லை வணங்கினான்.

மரங்களில் எல்லாம் சங்கிலிக் கறுப்பனையும், தெரு வில் கிடக்கின்ற கற்களில் எல்லாம் முனியனையும் கண்டு வழிபடும் பழக்கம் இப்படித்தான் ஆதிநாளில் தோன்றி இருத்தல் வேண்டும். தமிழ்நாட்டுக் கிராமங்களில் எப் பகுதியில் சென்றாலும் மரங்களில் கட்டிய சங்கிலிகளுடன் 'சங்கிலிக்கறுப்பனையும்' தெருச்சந்துகளில் பாதி புதைந்த கற்கள் எண்ணெய் முழுக்குப் பெற்று மலர்களுடன் முனீஸ்வரன்களாக விளங்குவதையும் காணலாம். இதில் ஒரு வியப்பு என்ன எனில், மிகப் பிற்காலத்தில், மனித அறிவும் தத்துவமும் வளர்ந்துவிட்ட காலத்தில்தான், இறைவனுடைய தத்துவம் நன்கு அறியப்பட்ட காலத்தில் தான் யாண்டும், எதிலும் இறைவனே உள்ளான் என்ற கருத்துப் பரவியது. 'சர்வம் பிரம மயம் ஜகத்' என்ற வாக்கியம் தோன்றுதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்பே கற்கால மனிதன் மரத்திலும், தெருக் கல்லிலும் கடவுளைக் காண முற்பட்டது ஒரு புதுமைதான்.

**அச்சமே ஆதி காரணம் :**

மிகப் பழைய காலத்தில் கடவுள் பற்றிய எண்ணம் மனிதனிடம் தோன்றக் காரணமாய் இருந்தது. 'அச்சமே' என்று கூறுவதில் தவறு இல்லை. ஆதியில் தெய்வ பக்திக்குக் காரணமாக இருந்த இவ்வச்சம் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகியும், மனிதனுடைய அறிவு மிகமிக வளர்ந்த நிலையிலுங்கூட அவனை விடவில்லை என்று நினைக்க வேண்டியுளது. இது கருதியே போலும் அனுபவத்தில் பழுத்தவரும், மனித இயல்பை நன்கு அறிந் தவருமாகிய நாவுக்கரசர் பெருமான்.

''அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி ஊரைநீ''
[திரு. 5-23-9]

என்று பாடிச் செல்கின்றார். மனித அறிவு முழு வளர்ச்சி பெறாத நிலையில் தெய்வபக்தி தோன்றுவதற்குக் காரண மாக அச்சம் இருப்பதை நம்மவர் மறுக்கவில்லை. ஆனால் நன்கு வளர்ச்சியடைந்த ஒருவன் அச்சங் காரணமாகப் பக்தி செய்வாரேயானால் அது விரும்பத் தகுந்ததன்று.

இளங் குழந்தை நடை பழகத் தள்ளுவண்டியின் உதவியை நாடல் சரியே; ஆனால் குமரப் பருவத்திலும் தள்ளுவண்டியை விரும்பினால் அது வெறுத்து ஒதுக்கப் பட வேண்டிய ஒன்றாகும்.

**அச்சமும் தேவை :**

பல சமயங்களில் அச்சம் என்பது மனிதனுக்குத் தேவைப்படுகின்ற ஒன்றாகும். காரணங் கூற முடியாத முறையில் அமைந்துள்ள ஒரு சிலவற்றை மனிதன் செய்தல் கூடாது என்று கண்ட நம் முன்னோர் அதன் காரண காரியங்களை எடுத்து விளக்கிக் கூறாமல் அதன் மாட்டு ஓர் அச்சத்தை உண்டாக்கி விட்டு விட்டனர். எத்துணைக் காலமாயினும் அதில் உள்ள உண்மை மாறுவதில்லை. மின்சாரம் செல்லும் கம்பிகளைத்

பெருகுமாறு செய்தது அதைவிட வியப்புத் தருகின்ற ஒன்றாகும். ஏன் விலங்குகளை வேட்டையாடும் பழக்கமுடைய அவன் கருவிகளைக் கொண்டு விலங்குகளைக் குத்தி அவற்றின் உடம்பிலிருந்து குருதி பெருகுமாறு செய்திருக்கிறான். அதனால் விலங்குகளைவிடத் தான் சக்தி வாய்ந்தவன் என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றி இருக்கலாம்.

இப்பொழுது மரங்கள் தன் உடம்பைக் குத்திஇரத்தம் பெருகுமாறு செய்து விட்டன எனின் மரங்கள் தன்னைவிடச் சக்தி வாய்ந்தவை என எண்ணத் தொடங்கினான் போலும் ஆதிமனிதன்! அதன் பயனாக மரத்தை வணங்கினான்! காட்டுப் பாதையில் நடந்து சென்ற அவன் கால்களை அங்கு கிடந்த கல் பதம் பார்த்துவிட்டது! அப்பொழுது ஆதிமனிதன் குனிந்து அக்கல்லை வணங்கினான்.

மரங்களில் எல்லாம் சங்கிலிக் கறுப்பனையும், தெருவில் கிடக்கின்ற கற்களில் எல்லாம் முனியனையும் கண்டு வழிபடும் பழக்கம் இப்படித்தான் ஆதிநாளில் தோன்றி இருத்தல் வேண்டும். தமிழ்நாட்டுக் கிராமங்களில் எப்பகுதியில் சென்றாலும் மரங்களில் கட்டிய சங்கிலிகளுடன் 'சங்கிலிக்கறுப்பனையும்' தெருச்சந்துகளில் பாதி புதைந்த கற்கள் எண்ணெய் முழுக்குப் பெற்று மலர்களுடன் முனீஸ்வரன்களாக விளங்குவதையும் காணலாம். இதில் ஒரு வியப்பு என்ன எனில், மிகப் பிற்காலத்தில், மனித அறிவும் தத்துவமும் வளர்ந்துவிட்ட காலத்தில்தான், இறைவனுடைய தத்துவம் நன்கு அறியப்பட்ட காலத்தில் தான் யாண்டும், எதிலும் இறைவனே உள்ளான் என்ற கருத்துப் பரவியது. 'சர்வம் பிரம மயம் ஜகத்' என்ற வாக்கியம் தோன்றுதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளின் முன்பே கற்கால மனிதன் மரத்திலும், தெருக் கல்லிலும் கடவுளைக் காண முற்பட்டது ஒரு புதுமைதான்.

**அச்சமே ஆதி காரணம் :**

மிகப் பழைய காலத்தில் கடவுள் பற்றிய எண்ணம் மனிதனிடம் தோன்றக் காரணமாய் இருந்தது. 'அச்சமே' என்று கூறுவதில் தவறு இல்லை. ஆதியில் தெய்வ பக்திக்குக் காரணமாக இருந்த இவ்வச்சம் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகியும், மனிதனுடைய அறிவு மிகமிக வளர்ந்த நிலையிலுங்கூட அவனை விடவில்லை என்று நினைக்க வேண்டியுளது. இது கருதியே போலும் அனுபவத்தில் பழுத்தவரும், மனித இயல்பை நன்கு அறிந் தவருமாகிய நாவுக்கரசர் பெருமான்.

''அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி ஊரை நீ''
[திரு. 5-23-9]

என்று பாடிச் செல்கின்றார். மனித அறிவு முழு வளர்ச்சி பெறாத நிலையில் தெய்வபக்தி தோன்றுவதற்குக் காரண மாக அச்சம் இருப்பதை நம்மவர் மறுக்கவில்லை. ஆனால் நன்கு வளர்ச்சியடைந்த ஒருவன் அச்சங் காரணமாகப் பக்தி செய்வாரேயானால் அது விரும்பத் தகுந்ததன்று.

இளங் குழந்தை நடை பழகத் தள்ளுவண்டியின் உதவியை நாடல் சரியே; ஆனால் குமரப் பருவத்திலும் தள்ளுவண்டியை விரும்பினால் அது வெறுத்து ஒதுக்கப் பட வேண்டிய ஒன்றாகும்.

**அச்சமும் தேவை :**

பல சமயங்களில் அச்சம் என்பது மனிதனுக்குத் தேவைப்படுகின்ற ஒன்றாகும். காரணங் கூற முடியாத முறையில் அமைந்துள்ள ஒரு சிலவற்றை மனிதன் செய்தல் கூடாது என்று கண்ட நம் முன்னோர் அதன் காரண காரியங்களை எடுத்து விளக்கிக் கூறாமல் அதன் மாட்டு ஓர் அச்சத்தை உண்டாக்கி விட்டு விட்டனர். எத்துணைக் காலமாயினும் அதில் உள்ள உண்மை மாறுவதில்லை. மின்சாரம் செல்லும் கம்பிகளைத்

தாங்கும் தூண்களில் 'அபாயம்' என்ற அறிவிப்பு மட்டுமே இருக்கும். அதனிடம் செல்பவர்கட்கு அச்சத்தை உண்டாக்கவே இச்சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது. சில காலத்திற்கு முன்பு இங்கிலாந்தில் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. கடல்மேல் செல்லும் மாலுமிகள் வெள்ளிக்கிழமை என்றால் மிகவும் அஞ்சுவார்களாம். காரணமற்ற அச்சம் இது என நினைத்த அரசின் கடற் படைத் துறையினர் ஒரு புதிய கப்பலைக் கட்ட வெள்ளிக் கிழமையன்று முடிவு செய்து, அதற்குக் கால்கோல் விழா முதல் அனைத்தையும் வெள்ளிக் கிழமைகளிலேயே முடித்தனர். ஒரு வெள்ளியன்று நிறைந்த பயணிகளுடன் கப்பலும் வெள்ளோட்டம் புறப்பட்டது. முட்டாள்தன மான நம்பிக்கை தகர்ந்தது என்று அனைவரும் பேசிக் கொண்டனராம். புறப்பட்ட கப்பலைப் பார்த்தவர்கள், அதன் பின்னர் அது என்ன ஆயிற்று என்பதைக்கூட அறிந்து கொள்ள முடியாதபடி அக்கப்பல் போன இடம் தெரியாமல், 'பொய்யாய்க் கனவாய்ப் பழங் கதை யாய்ப் போய்விட்டது. இது கருதியே போலும் நம் முன்னோர் 'அஞ்சுவதை அஞ்சாமை பேதமை' [குறள் 428] என்று கூறிப் போயினர்.

**அறிவும் உணர்வும் :**

அச்சத்தைத் தோற்றுவிப்பது மனிதனிடம் என்றுமே உள்ள உணர்வின் வேலையாகும். இதன் எதிராக அச்சத்தின் காரணத்தை ஆயத் தொடங்கி சில அச்சங்கள் அறியாமையால் விளைவன என்றும் அவை தவிர்க்கப்பட வேண்டியன என்றும் கூறுவது அறிவின் வேலையாகும். அறிவு, உணர்வு என்ற இரண்டும் மனிதனிடம் என்றுமே உள்ளன. வாழ்க்கையில் ஒவ்வொரு சமயம், ஒரே மனிதனுக்குக்கூட, அறிவு மேம்பட்டு உணர்வு குன்றி யிருத்தலையும், இதன் மறுதலையாக இருத்தலையும் காண்கிறோம். அறிவு தொழிற்படும்போது மனத்தில் அமைதி தோன்றும் என்று கூறுவதற்கில்லை. காரணம்

அறிவு பகுத்துக் கொண்டே செல்லும் இயல்புடையது! எதனை எடுத்துக் கொண்டாலும் அதன் தோற்றம், வளர்ச்சி என்றும் இயல்பு என்றும் அதனைப் பகுத்துக் காண்பது அறிவின் பணியாகும். இதன் எதிராக, விரிந்தும் பரந்தும் இருக்கின்றவற்றையெல்லாம் தாண்டி அவற்றின் இடையே ஓர் ஒருமைப்பாட்டைக் காணும் இயல்புடையதாகும் உணர்வு. அறிவைப் பிளந்து காணும் இயல்புடையது என்றும் (analytic) உணர்வை ஒருமைப்பாட்டைக் காணும் இயல்புடையது (synthetic) என்றும் கூறலாம்.

வாழ்க்கையின் புதிர்களில் ஒன்று என்னையெனின் பல சமயங்களில், இந்த அறிவு, உணர்விடம் சென்று அடங்கி விடுகிறது. எத்துணைத் தூரம் அறிவு சிறப்புடையதாயிருப்பினும் அது இறுதியில் உணர்வுடன் ஒன்றினாலொழிய நன்கு பயன்படுவதில்லை. உதாரணம் தேடி அதிக தூரம் செல்லத் தேவையில்லை. அறிவுக் கடலை நீந்திக் கரை கண்டவர் விவேகானந்தர். 'ஏக சந்தக்கிராகி' என்று கூறப்பெறுபவர். அவர் 'கல்லாத கலையும், வேதக் கடலுமே இல்லை என்னும் காட்சி அவர் சொல்லாலே தோன்றிற்று' என்று கூறத் தக்க பெருமையுடையவர் அத்தகைய அறிவுக் கடலாகிய அவர் எங்கே சென்று சங்கமமாயினார்? அவரை ஒத்த பேரறிவாளர் ஒருவரிடம் அடைக்கலமாயிருந்தால் அதில் ஒன்றும் வியப்பில்லை. ஆனால் கல்வி வாசனை என்பதே ஒரு சிறிதும் இல்லாத இராமகிருஷ்ண பரமஹம்சரிடம் அல்லவா சரணமடைந்தார்! நரேந்திரன் என்ற பிள்ளைத் திருநாமம் உடைய விவேகானந்தரை நண்பர்கள் அனைவரும் எள்ளி நகையாடுகின்றனர். ஏன்? கல்வி வாசனையற்ற ஒருவரிடம் அவர் ஈடுபாடு கொண்டதற்காகவேயாகும்.

'கல்வி யென்னும் பல்கடற் பிழைத்த' நரேந்திரன் 'தெய்வமென்பதோர் சித்த முண்டாகி முனிவிலாததோர் பொருளை'க் கருத முடிந்தது இராமகிருஷ்ணரிடம் சரணம் புகுந்த பிறகேயாம். எனவே மனிதனிடம் இயல்

பாக அமைந்துள்ள அறிவு, உணர்வு என்ற இவை இரண்டினிடையே போராட்டம் நிகழுமாயின் இறுதியில் அறிவு உணர்விடம் சரணடைந்து விடுதலைக் காண்கிறோம். இக்கொள்கைக்கு ஒப்பற்ற இலக்கியமாக விளங்குபவர் விவேகானந்தராவார். உலகம் தோன்றிய நாள் தொட்டே இவ்வுண்மை இருந்துதான் வருகிறது.

இது இவ்வாறு இருக்கிறது என்பதற்காக நம் முன்னோர் அறிவின் சிறப்பையும் இன்றியமையாமையையும் குறைத்து மதிப்பிட்டு விடவில்லை. உணர்வின் பெருமையை உணர்ந்து அதன் காரணமாகப் பக்திமான்களாக மாறிய நம் முன்னோர் பிரசாதத்தை மட்டும் உண்டு விட்டு இருந்து விடவில்லை. எனவே 'பக்திமான் கண்டது பிரசாதம்' என நம் அன்பர் சிலர் பேசுவது அறியாமையில் விளைந்த வாதமாகும்.

மிகச் சிறந்த பக்திமானாகிய மணிவாசகர் போன்றோர் உணர்வு உலகத்தில் முக்குளித்து எழுந்தவர்களாயினும் 'நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்? என்னை யார் அறிவார்? [கோத்து-2] என்ற வினாக்களை அறிவின் துணைகொண்டு எழுப்பி அதே அறிவின் துணைகொண்டு அவ்வினாக்கட்கு விடைகாணவும் முற்பட்டனர் யான் யார் என்ற வினாவும், அதற்கு விடை காண வேண்டும் என்ற முயற்சியும் உணர்வுலகத்தில் தோன்ற முடியாதவையாகும்; அவை அறிவுலகத்தில்தான் தோன்றும். பாண்டிப் பேரரசின் தலைமை அமைச்சராக இருந்த மணிவாசகப் பெருமான் அறிவுப் பேராற்றல் பெற்றிருந்தமையாலேயே தலைமை அமைச்சராக அரசனால் தேர்ந்தெடுக்கப் பெற்றார். எனவே உவர்கள் அறிவின் துணைகொண்டு ஆயும் இயல்புடையவர் அல்லரோ என்ற ஐயுற வேண்டிய தேவை இல்லை. இப்பெருமக்கள் அறிவின் துணைகொண்டு தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டாலும் இறுதியில் பக்தர்களாக மாறிவிட்டவர்களாவர்.

**மேலை நாடுகளில்**

மேலைநாடுகளைப் பொறுத்தவரை நிலைமை ஓரளவு மாறுதலடைந்துள்ளது.அங்கு மாபெரும் தத்துவஞானிகள் வாழ்ந்தனர். இந்திய நாட்டைப் பொறுத்தவரை உபநிடத காலத்தில் இருந்த தத்துவ ஞானிகளைப்போல் இவர்களும் ஓயாத வினாக்களை எழுப்பி விடைகாண முயன்றனர், காண்ட் [Kant], ஸ்பைனோஸா [Spinoza], மூர் [Moore] போன்றவர்கள் மாபெரும் அறிஞர்களாகவும், தத்துவ ஞானிகளாகவும் விளங்கினர். ஸ்பைனோஸா தவிர ஏனையோர் உணர்வைக் காட்டிலும் அறிவுக்கும் முக்கியத்துவம் கொடுத்ததே இவர்களிடம் உள்ள தனிச்சிறப்பாகும்.

இவர்கள் எல்லாவற்றையும் பரிசோதனை (empiri sisom) அடிப்படையிலேயே ஆராயவேண்டும் என்று நினைந்தனர். நம் நாட்டுப் பெரியோர்கள் கேட்ட அந்த வினாக்களையே அவர்களும் கேட்டனர். நான் யார் முதலான கேள்விகளையே அவர்களும் கேட்டார்களேனும் அவற்றிற்கு விடை காண அவர்கள் மேற்கொண்ட வழி வேறு; நம்மவர்கள் மேற்கொண்ட வழி வேறு.

மணிவாசகர் போன்றவர்கள் நான் யார் முதலான வினாக்களை எழுப்பிவிட்டு இறுதியில் 'வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்' இவற்றிற்கு விடை கிடைக்காமல் போயிருக்கும் என்ற முடிவுக்கு வந்தார். ஆனால் மேனாட்டுத் தத்துவ ஞானிகள் இத்தகைய முடிவுக்கு வரவில்லை. இவ்வாறு கூறுவதால் கடவுளைப் பற்றி அவர்கள் கவலைப்படவில்லையோ என்று நினைந்து இடர்ப்படவேண்டா அறிவின் துணைகொண்டே கடவுட் பொருளின் இருப்பை (Intellectul Perception of divinity) நிலைநாட்ட முயன்றனர் அவர்கள்.

இவர்களால் போற்றிப் பேசப்பெறும் அறிவு இரண்டு மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது. காலணி தைக்கின்

றவர் பெற்றிருப்பதும் அறிவுதான். மிகச்சிறந்த வேலைப் பாடுகளுடன் அது தைக்கப்பெறும்பொழுது கூர்ந்த அறிவைக் காட்டி நிற்கிறது. ஆனால் உடற்கூற்றை அறிந்துள்ள மருத்துவருடையதையும் அறிவென்றே கூறுகிறோம். இவை இரண்டும் அறிவு என்ற பொதுப் பெயருள் அடங்குமேனும் காலணி தைப்பவரின் அறிவை விட உடற்கூறு அறியும் மருத்துவரின் அறிவு சிறந்தது என்று கூறுவதில் தவறில்லையன்றோ? இவ்விரண்டு பணிகளில் எது முக்கியமானது என்ற வினாவிற்கு இங்கு இடமே இல்லை. காரணம், முக்கியம் அமுக்கியம் என்ற வேறுபாடு, சூழ்நிலை, சந்தர்ப்பம் என்பவற்றை அடிப் படையாகக் கொண்டுதான் தோன்றுகிறது. ஒரு சூழ்நிலையில் ஓரிடத்தில் மிக முக்கியமானதாகக் கருதப்படும் ஒன்று, இடமும் சூழ்நிலையும் மாறிவிட்டபொழுது முக்கியமாகக் கருதப் பெறுவதில்லை. இத்தகைய அறிவு நன்கு வளர்ந்த நிலையில் பல வினாக்களை எழுப்பி அவற் றிற்கு விடைகாண முற்படுகிறது.

## தத்துவ ஞானமும், விஞ்ஞானமும்

பிளேட்டோ காலத்தில் தோன்றிய இந்த அறிவு, தத்துவ ஆராய்ச்சியில் புகுந்து பணிசெய்யப் புறப்பட்டது ஆனால் அது தொடங்கியபொழுது எத்திசையில் செல்ல முனைந்ததோ அத் திசையை மாற்றி முற்றிலும் வேறு திசைக்கு இந்த ஆராய்ச்சி அறிவை மாற்றிய பெருமை விஞ்ஞானத்திற்கே உரியது. உதாரணமாக மிகச்சிறந்த தத்துவ ஞானியாகிய டேவிட் ஹியூம் (David Hume), காலத்தில்தான் மாபெரும் விஞ்ஞானியாகிய நியூட்டன் (Newton) வாழ்ந்தார் நியூட்டனின் உலகப் புகழ்படைத்த இயக்கச் சட்டங்கள் மூன்று (Three laws of motion) எத்துணைத்தூரம் ஹியூமின் தத்துவ ஆராய்ச்சியைப் பாதித்தது என்பதை விரிவாக ஆராய்ந்துள்ளனர். விஞ்ஞானஅறிவு வளர வளரத் தத்துவ ஞானிகளும்

தம்முடைய ஆராச்சியின் அடிப்படையை மாற்றிக் கொள்ளத் துணிந்தனர்.

இன்னும் கூறவேண்டுமாயின் அரிஸ்டாட்டிலின் கணிதத்தில் தொடங்கித் தத்துவ மேதைகள் பூமியின் எடையைக் கணிப்பதுபோல சுவர்க்கத்தின் எடை, கடவுளின் உயரம், அவர் எங்கிருத்து எங்கே தம்முடைய கால்களை நீட்டிக்கொண்டிருக்கிறார் என்றெல்லாம் அறிவின் துணைகொண்டே ஆய்ந்துவிடலாம் என்ற முடிவுக்கு வந்தனர் அவர்களுடைய முயற்சியிலோ உண்மை காண வேண்டும் என்ற எண்ணத்திலோ எவ்விதக் குறையும் கூகமுடியாது. ஆனால் இவற்றை அறிய அவர்கள் மேற்கொண்ட வழிதான் விந்தையானது

எதனையும் அறிவின் துணைகொண்டுதான் காண வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டமையின் மனத்தின் அடிப்படையில் தோன்றும் எதற்கும் மதிப்பீடு (Values) தராமல் விட்டுவிட்டனர். பரிசேதனைத் தத்துவ வாதம் பற்றி திரு எஸ். இராதாகிருஷ்ணன் தம்முடைய 'நம்பிக்கையின் மீட்சி' (Recovery of Faith) என்ற நூலில் கீழ்வருமாறு கூறுகிறார்.

**எம்பிரிசிசக் கொள்கை :**

'எம்பிரிசிசம்' (எதனையும் சோதனையின் அடிப்படையில் நம்புவது) என்பது கீழ் மேல் நாட்டுத் தத்துவ விசாரணையில் விடாபிடியான ஓர் இடத்தைப் பெற்றுள்ளது. சமீபகாலம்,வரை, உற்றறிவு, அனுமானம் என்பற்றின் அடிப்படையில் மனித அறிவுபற்றிய தீர்க்கமான ஒரு கருதுகோளைக் கொண்டிருந்தது. ஆன்மீகக் கருத்துகள் பற்றியவற்றில் ஓர் அலட்சியமும் விஞ்ஞான வழிகளிடத்து ஓர் அலாதியான மதிப்பும் கொண்டிருந்தது. அதன் அடிப்படையான கொள்கையில் மானிட இயல்புக்குப் பொருந்திய அறவொழுக்கம்

பற்றிய கொள்கையும், சமயத்தைப் பொறுத்தவரை நம்பிக்கையின்மையும் இருந்து வந்தது. இந்த வாதிகள் அனைத்துலகப் பார்வை பெற்றிருந்ததுடன் வாழ்க்கை, எண்ணவோட்டம் என்பவைபற்றியும் ஒரு குறிப்பிட்ட கொள்கை கொண்டிருந்தனர். அவர்களைப் பொருத்த மட்டில் மரபுவழித்தத்துவ வாதிகள் என்று கூறலாம். தனி மனிதன் உலகில் அவனுடைய இடம், அவன் எதிர்காலம் என்பவை பற்றியும் அவர்கள் குறிப்பிட்ட கொள்கை கொண்டிருந்தனர்.

புதிய எம்பிரிசிசக் கொள்கையாளர் ஆன்மீகம் பற்றிய எதனையும் ஏற்க மறுத்தனர். புலன் உணர்வுக்கோ அதன் நீட்சியாக உள்ள விஞ்ஞானக் கருவிகளுக்கோ கட்டுப் படாத எவற்றையும் உண்மை என்று இவர்கள் ஏற்ப தில்லை. ஜடத் தொடர்புடைய இந்த உலகம் பற்றிய விஞ்ஞான அறிவே உண்மையானது. உண்மையுடைய எதுவும் இந்தச் சடஉலகுடன் தொடர்பு கொண்ட தாகவே இருத்தல் வேண்டும். நாம் காணவும் தொடவும் கூடியது சடப்பொருள் ஒன்று மட்டுமேயாம். தனிப்பட்ட மதிப்பீடுகள் என்று கூறுவதும், அழகை அனுபவிப்பதும் உண்மைக்குத்(Truth) தொடர்புடையன அல்ல. அவற்றைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுவது கற்பனை உலகில் ஈடுபடுவதாகவும் மனப் பிராந்தியில் உலவுவதாகவும் கூறினர். கண்காணாத ஆன்மீக உண்மை என்பது முக்கூட்டுப் பரிமாணமுடைய (Three diamensional) நிலையிற் பொருள், காலத் தத்துவம் (Time) என்பவற் றின் போக்கில் தேவையற்று நுழையும் இடைப் பிறவர லாகும்.*

---

* Empiricism has been a persistent feature of philosophy, both in the East and in the west. Till recently it connoted a definite theory of human knowledge based on sensation and inference, a

டேவிட் ஹியூம்

ஆனால் நம்முடைய நாட்டிலும் சரி மேலை நாட்டிலும் சரி, உண்மையான சமயவாதிகள், ஒரு சிலவற்றிற்கு எல்லையற்ற மதிப்பீடு (Values) தந்துள்ளனர். அவற்றிற்கு ஏன் மதிப்புத் தர வேண்டும் என்று கேட்டுப் பயனில்லை. தத்துவவாதிகள் இவைபற்றிக் கவலைப்

---

contempt for metaphysical abstractions, a reverence for scientific method, a system of ethics which is humanist in character and an agnosticism in religion. These empiricists possessed a world outlook and adopted a definite attitude to life and thought. They may be said to be philosophers in the traditional sense of the term, with definite views on the nature of the individual, his place in the world and his destiny.

The new empiricists repudiate all metaphysics. Nothing that is not evident to the senses or to the extension of the senses provided by scientific instruments has any claim to truth. The world of matter that science explores is real and everything else that is real must be of the same nature as matter. Matter is all that we can see and touch. Whatever is capable of empirical verification is true.To apprehend values, to enjoy beauty is irrelevant to the question of truth. It is to wonder in a world of unrealities of shadows, of illusions. An unseen spiritual reality is an unnecessary intruder in the vast impersonal process of space-time.

— Recovery of Faith Page 20 & 21.

படாதது மட்டுமன்று; இவ்வாறு மனத்தால் மட்டும் உணரக்கூடியவற்றிற்கு மதிப்புத் தருதல் பொருளற்ற ஒரு செயலாகும் எனவே கூறினர். ஹியூம் என்ற தத்துவ வாதியின் கொள்கைப்படி, ''தத்துவ ஆராய்ச்சி என்பது இருப்பதை விரித்துக் கூறுதலேயாகும்.

இதற்குமேல் முயல்வது மனித மனக்குழப்பத்தில் தோன்றும் கருத்துகளுக்கு வடிவு கொடுப்பதாகும்.'' மூர் என்பவரின் கருத்துப்படி இவ்வாறு ஆராய முயல்வது மொழியைப் பயன்படுத்துவதனாலேயே விளைகிறது. எனவே ஏதாவதொரு தத்துவக் கொள்கை கூறப்பெற்றால் அது என்ன கூறுகிறது, எதைப்பற்றிக் கூறுகிறது என்பவற்றை அறிய முயல வேண்டும்.

ஒழுக்கம், சமயம் என்பவற்றின் கொள்கைகள் பற்றி ஆராய்வதோ அன்றி அவற்றிடையே தோன்றியுள்ள முரண்பாடுகளை ஆய்வதோ தத்துவவாதியின் வேலையன்று. தத்துவத்தின் பணி, இக்கொள்கைகள் உள்ளீடு அற்றவை, பைத்தியக்காரத்தனமானவை, பயனற்ற சொற்கள் என்று காட்டுவதேயாகும்.

தத்துவத்தின் கடமை ஆராய்வதும் விளக்கந் தருவதுமேயாகும் ஏனைய ஆராய்ச்சிகளைப்போலத் தத்துவ ஆராய்ச்சியும் காரண காரிய வழியையும், சோதனை வழியையும்,பகுத்துக் காண்கின்ற வழியையும் மேற்கொள்வதாகும். மனித அறிவின் எல்லை யாது என்று கூறுவதும் பல்வேறு துறைகளிற் செல்லும் அவ்வறிவுகளின் இடையே உள்ள வேறுபாடுகளை எடுத்துக் காட்டுவதுமட்டுமே தத்துவத்தின் பணியாகும்.

---

* According to Hume, philosophical theories which attempt more than description rest on confusions arising from the working of the human mind. Moore thinks that they are all traceable to the use

ஹியூம் முதலான தத்துவவாதிகளின் கொள்கைப்படி பார்த்தால் மணிவாசகர் போன்றோரின் 'நான் யார்' முதலான வினாக்கள் சோதனை மூலம் நிரூபிக்கப்பட முடியாதவை ஆதலின் தேவையற்ற ஒன்றாகும். இனி இந்த வினாவை எழுப்பிவிட்டு 'நான் என்பது இந்த உடம் பன்று, இருதயமும் அன்று, மூச்சுக்காற்றும் அன்று' என் றெல்லாம் பகுத்தறிந்து ஒதுக்கிக் கொண்டு செல்லும் முறையை இவர்கள் ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால் இவ்வாராய்ச்சியின் முடிவில் ஆராய்ச்சிக்குட்படாததும், அறிவின் துணைகொண்டு அறியப் படாததும். உணர்வின் துணைகொண்டு உணரப்படுவதுமாகிய ஒன்றுதான்' நான் யார்? என்பதன் விடை என்ற பகுதியை மட்டும் இவர்கள் ஏற்படுதில்லை.

**அறிவாராய்ச்சிக்கு அப்பாற்பட்ட ஒன்று:**

ஆனாலும் இத தத்துவவாதிகள் ஆராய்ச்சியில் அடங் காத சிலவற்றிற்கு இவ்வுலகம் என்றுமே மதிப்புத் தந்து

---

of language. So when any philosophical theory is suggested, Moore insists that we should try to know what exactly it means. It is not for philosopy to formulate theories of morality and religion or even decide between conflicting views of them. Its task is to show that these theories are without any content, nonsensical, empty words.

The function of philosophy is analysis, clarification. Like any form of inquiry, its method is empirical experimental, analytic. Its function is to define as clearly as possible the limits of human knowledg, and set down the distinctions between different kinds of knowledge.

— Recovery of Faith P. 18 & 19.

வந்துள்ளது. அன்பு என்றால் என்ன? என்ற வினாவை எடுத்துக்கொண்டு ஆராயத் தொடங்கினால் அது மனித மனதில் தோன்றுகிற ஓர் இயல்பூக்கம் (Instinct) என்று கூறுவர் போலும்! ஆனால் ஏன் அன்பு தோன்றவேண்டும் அது நம்மிடம் தரப்பெற்றதின் நோக்கம் யாது என்பன போன்ற வினாக்கள் இவர்களைப் பொறுத்தமட்டில் தேவையற்றவை யாகிவிடுகின்றன. அன்பு, அல்லது காதல் என்பது மனத்தில் நிகழும் ஒரு நுண்ணிய நிலை என்பதைத் திருவள்ளுவருங்கூடக் கூறுகிறார்.

''மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்
செவ்வி தலைப்படு வார்'' (1289)

என்பது போன்ற குறள்களில் அன்பின் இலக்கணம், இயல்பு என்பவை பேசப் பெறுகின்றன. இவ் வருங் குறளுக்கு உரையிட்ட பரிமேலழகருக்குக்கூட இக்குறளின் நுண்மை பிடிபடவில்லை. வள்ளுவன் காதல் பற்றிக் கொண்டிருந்த கருத்துகள் பரிமேலழகரின் பிடியுள் அகப் படவில்லை.

மலரினும் மெல்லிது என்று கூறும்பொழுது மலரின் நிறம், மணம், தன்மை,மென்மையான தன்மை என்பவற்றை ஆசிரியன் குறிப்பிடவில்லை என்பதை அடுத்த வரியில் தோன்றும் 'செவ்வி' என்ற சொல் காட்டி நிற்கிறது. அது ஒரு மனநிலையேயாகும். காதல் என்பது ஒரு மனநிலையே (mental status) என்பதைக் குறிக்க இதனைவிடச் சிறந்த உவமையைக் கையாளமுடியாது. காதல் ஒரு மன நிலை என்றால் அதனுடைய மிக உயர்ந்த வெளிப் பாட்டில் அது பற்றிப் படர்வதற்கு ஒருத்தனோ ஒருத்தியோ தேவையில்லை என்று கூடக்கூறிவிடலாம். காதலின் முதிர்ந்த நிலையாகிய அருள் யாவர் மாட்டும், இன்னார் இனியார் என்ற வேறுபாடு இன்றிப் பரவும்பொழுது இதனை உணரமுடியும். 'சிலர் அதன் செவ்வி தலைப்படு

வார்' என்று ஆசிரியன் கூறினமையால் 'கழி பெருங்காதல் கொண்டவர்கள்கூட உண்மையில் காதலின் தத்துவத்தை அறிந்திருந்தார்களா என்ற ஐயந் தோன்றுகிறது.

காண்ட் (Kant) போன்ற தத்துவ வாதிகள் அழகு பற்றிச் செய்த ஆராய்ச்சியில் அழகு என்பது மலரிடத்தில் உள்ளதா? மனத்திடத்தே உள்ளதா? அது நுண்பொருளா பருப்பொருளா என்பன போன்ற விடை காணமுடியாத புதிர்கள் எல்லாம் நிறைந்துள்ளன. ஒரு சிலவற்றை உணர்ந்து அனுபவிக்க முடியுமே தவிர அறிவின் துணை கொண்டு அறிந்துவிடுதல் முடியாத காரியம்.

இத்தகையவற்றை அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து கொண்டு செல்வதால் இறுதியில் என்ன எஞ்சும்? வெங்காயத்தின் தோலை உரித்துக் கொண்டே சென்றால் என்ன எஞ்சுமோ அதுவேதான்! வெங்காயம் என்பது தோலைத் தவிர வேறு இல்லை. அதேபோல அனுபவித்து உணரவேண்டியவற்றை துணைகொண்டு ஆராய முற்படுவது பயனற்ற செயலாய் முடிவதுடன் ஆராய்ச்சிக்கு உரிய பொருளையும் இல்லையாகச் செய்து விடும்.

**மூரின் கொள்கை :**

இனி ஜி.இ. மூர் என்ற தத்துவ வாதியின் கருத்து நல்லொழுக்கம் சமயம் என்பவை பற்றிய கொள்கைகளை வகுப்பது தத்துவத்தின் பணியன்று என்பதாகும். எக்காரணம் பற்றி மனித வாழ்க்கையோடு பெரிதும் தொடர்பு உடைய இவற்றை அவர்கள் தத்துவ ஆராய்ச்சி யினின்று விலக்கினார்கள் என்று கூறமுடியவில்லை.

தனிமனிதனாக வாழும்போது உள்ள மனநிலை, உரிமை முதலியவைகள், சமுதாயத்தில் கூடி வாழும்போது மாறுதலடைகின்றன. உதாரணமாக ஒன்றைக் காண லாம். தனிமனிதன் ஒருவன் ரூ. 500/- செலவழித்து ஒரு

வானொலிப் பெட்டியை அரிதின் முயன்று வாங்கி இருக்கலாம். அதைத் திருப்பிவிட்டு எதனை வேண்டுமானாலும் கேட்க அவனுக்கு உரிமையுண்டு. அதனை யாரும் தடை செய்யும் உரிமையைப் பெறவில்லை. ஆனால் அதன் சத்தம் அவனளவில் அனுபவிக்கப்படலாமே தவிர, அது எத்துணை உயர்ந்த இசையாயினும் தெருவில் போகின்றவர்களையும் அடுத்த வீட்டுக்காரரையும் தொல்லைப் படுத்துகின்ற அளவுக்கு அதனுடைய சத்தத்தை மிகுதிப் படுத்த வானொலிப் பெட்டிக்காரனுக்கு உரிமை இல்லை.

அவன் வாங்கிய வானொலிப் பெட்டியில் அவன் வேண்டும் அளவுக்குச் சத்தம் உண்டாக்க அவனுக்கு உரிமை இல்லையாயென்றால் சமுதாயத்தில் அவன் வாழுகின்றவரை அந்த உரிமை அவனுக்கு இல்லை என்றே கூறல் வேண்டும். சமுதாயத்தில் வாழும்பொழுது தனிமனித உரிமை எத்துணை தூரம் இடம் பெறும் என்பது யார் ஆராய்வது? தத்துவ ஞானியின் பணியன்றோ இது? தனி மனித உரிமைக்கும் சமுதாயத் தேவைக்கும் (individual liberty vs. Social conciousness) இடையே ஏற்படும் போட்டியில் ஒவ்வொன்றின் உரிமையும் எவ்வளவு என்பதைச் சமுதாயத் தத்துவ வாதி (Social Philosopher) ஆராயவேண்டிய கட்டுப்பாடுடையவன்.

அறிவின் துணைகொண்டு மட்டும் ஆராய்ந்தால் இத்தகைய வினாக்கட்கு விடை கிடைப்பது கடினம் கிடைத்தாலும் அது செம்மையான விடையாக இராது. சமுதாயத்தில் வாழும் தனிமனிதனுடைய உரிமை பிறன் ஒருவனுடைய உரிமையில் தலையிடுதல் தவிர்க்கப்பட வேண்டும் என்பதை அறிவுறுத்துவதே உள்ளுணர்வுதான். உன்னுடைய தேவை, வேட்கை இன்றியமையாமை என்பன எத்துணைப் பெரிதாக இருப்பினும் அது பிறருடைய உரிமையில் கைவைப்பதாக அமையக்கூடாது என்று உள்ளுணர்வு பேசுகிறது.

''கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்''— 112

என்பது அகநானூறு.

**தமிழன் கண்ட விடை :**

இத்தகைய வினாக்களுக்கு, அவை தத்துவத்தின் கீழ்ப்பட்டனவா, சமய உணர்வின் கீழ்ப்பட்டனவா என்பவைபற்றிக் கவலைப்படாமல் பழந்தமிழன் தன் உள்ளுணர்வு ஒன்றையே கொண்டு விடைகண்டான். உதாரணமாக ஒரு தலைவன் பொருள்தேடப் பிரிந்து செல்கிறான். அவன் தலைவிக்கு அது பெரு வருத்தத்தைச் செய்கின்ற ஒன்றுதான். என்றாலும் என்ன? அவளுடைய வருத்தத்தை வெளிகாட்ட அவளுக்கு உரிமை இல்லையா? உண்டுதான். ஆனால் அவள் துயரத்தை வெளியிடும் பொழுது அது பிறருடைய வாழ்க்கையைப் பாதிக்கக் கூடாது என்பதை நன்கு அறிந்திருந்தனர் இவர்கள். தலைவன் மாட்டு அன்புகொண்ட தலைவியின் துயரம் பெரிதாய் இருக்குமென்பதிலும், அது கண்ணீராகப் பெருகும் என்பதிலும் எவ்வித ஐயுறவும் இல்லை. என்றாலும் அத் துயரத்தையும் கண்ணீரையும் பிறர் பார்க்கும் அளவுக்குக் காட்டுதல் முறையா என்ற வினாத் தோன்றிற்றுப் போலும்! தன் துயரத்தைப் பிறர் அறியுமாறு காட்டுவதில் தவறில்லை எனினும் அடுத்த வீட்டில் உள்ளவர்கள் அந்த நேரத்தில் மகிழ்ச்சியான ஒரு செயலில் ஈடுபட்டிருப்பின் இவர்கள் துயரமும் கண்ணீரும் அவர்களுடைய மங்கலமாண விழாவிற்கு இடையூறு போல் காணப்படும் அன்றோ?எனவே இத் தமிழன் என்ன முடிவு செய்தான்? தன் துயரம் எத்துணை ஆழமானதாக இருப்பினும் அதனைப் பிறர் அறியுமாறு காட்டுதல் முறையன்று என்று கருதினான். ஆதலால் கண்ணில் நிறைந்த கண்ணீர் கீழே விழக்கூடாது என்று கூறினான். 'கண்ணிறை நீர் மல்க' என்பது சங்கப் பாடல். கண்ணின் இறைப்பை

யைத் தாண்டிக் கண்ணீர் சிந்தக்கூடாது எனச் சமுதாய வாழ்க்கைக்கு ஏற்ப ஒரு சட்டம் வகுத்தான். பிறருடைய உரிமை கட்கு மதிப்புத் தரல்வேண்டும் என்ற உணர்வால் தோன்றிய மரபாகும் இது.

இதனையடுத்து நல்லொழுக்கம் எது என்பதில் கிளைக்கும் கருத்து வேறுபாடுகளை ஆயவும் தேவை இல்லை என்று கூறுகிறார் 'ஹியூம்'. ஒரு கூட்டத்தார் நல்லது என்று மேற்கொள்ளுகிற ஒரு பழக்கத்தைத்தேவை இல்லாதது என்று நினைக்கிறதுமற்றொரு சமுதாயம். ஒரு மனைவிக்குமேல் மணப்பது தவறு என்று கூறுகிற சமுதாயமும், பலதாரமணத்தால் தவறில்லை என்று கூறுகிற சமுதாயமும் இங்கு உண்டு. ஆனால் இவற்றை எடுத்து ஆய்ந்து எது நலம்பயப்பது என்று கூறவேண்டிய கடமை தத்துவத்திற்கில்லை என்கிறார்கள் ஹியூம் போன்ற தத்துவவாதிகள். இதன் எதிராக, எந்த ஒன்றை யும் எடுத்து பகுத்துப் பார்த்து ஆராய்வதே தத்துவத்தின் பணி என்கிறார்கள் ஒரு சிலர். சோதனை மூலம் அதனை ஆய்ந்து மனித அறிவின் எல்லை எதுவரை என்பதை எடுத்துக் காட்டுவதுமட்டுமே தத்துவத்தின் பணியாம். மானிட வாழ்க்கையில் ஏற்படும் பிரச்னைகளை ஆய்வது அதன் பணியன்று என்றும் கூறிப் போயினர்!

**சமுதாயத் தொடர்பின்மை :**

இதனால் விளையும் பயனைப்பற்றி அவர்கள் கவலை யுற்றதாகவே தெரியவில்லை. உதாரணமாகப் பிளேட் டோ போன்ற மாபெரும் தத்துவவாதியின் வாழ்க்கை யைக் காணலாம். பிளேட்டோ என்ற தத்துவஞானி பிளேட்டோ என்ற மனிதனிடத்திலிருந்தும், அற்றைநாள் கிரேக்க சமுதாயத்திடமிருந்தும் தம்மை முற்றிலும் பிரித்துக்கொண்டு வாழ்ந்தார். சமுதாயத் தொடர்பில் லாத அவருடைய தத்துவ அறிவு இன்று கண்டு நம்மால்

வியப்பதற்குரியதாகின்றதே தவிர வேறு எப்பயனை விளைத்தது? அவர் 'குடியரசு' (Rebublic) என்ற நூலைத் தம் அறிவின் துணைகொண்டு மட்டுமே எழுதினார். ஆனால் அவர் எழுதுகின்ற அந்த நேரத்தில் கிரேக்க சமுதாயம் எவ்வாறு இருந்தது? பெரிய திறந்த அரங்கு களில் (amphitheatre) பசித்த சிங்கங்களிடையே அப்பாவி அடிமைகளைத் தூக்கிப்போட்டு அவ்விலங்குகள் அடிமை களைக் கொத்திக் குதறித் தின்கின்ற காட்சியை உயர்குடிப் பிறந்ததாகக் கூறிக்கொள்ளும் ஆண்களும் பெண்களும் கண்டு களித்தனர்.

அன்றைய சமுதாயம் இருந்த இந்த நிலைபற்றி அறிய முற்படாமல் பிளேட்டோ எழுதிய தத்துவஞானம் என்ன பயனை விளைத்தது?இன்று கிரேக்க நாகரிகத்திற்கு அவர் நூலோ சிந்தனையோ ஏதேனும் பயன் விளைத்ததா? உறுதியாக இல்லை. காரணம் யாது? தத்துவ ஆராய்ச்சி மனித வாழ்க்கையோடு ஒட்டி அமையவில்லை. மானிடச் சூழ்நிலை (Human situations) பற்றிக் கவலைப்படாமல் தத்துவ ஆராய்ச்சி நடைபெறவேண்டும் என்று பிற் காலத்தில் 'ஹியூம்' கூறியதைப் பிளேட்டோ அவருக்குப் பல்லாண்டு முன்னரே கடைப்பிடித்துவிட்டார்.

பிளேட்டோ, அரிஸ்டாட்டில், சாக்ரட்டீஸ் என்ற பெயர்களை நினைக்கும்பொழுதே உள்ளங் குளிருகின்ற அளவுக்கு மாபெரும் அறிஞர்களை, தத்துவஞானிகளைப் படைத்த கிரேக்க மக்களும், இலக்கியமும் இன்று என்ன ஆயின? ஏன் கிரேக்க நாகரிகத்திற்கு இந்நிலை வந்துள்ளது? எத்துணைப் பெரிய தத்துவ ஆராய்ச்சி யாயினும் அது மக்களோடு, உயிருள்ள, துடிப்புள்ள, கொள்கைகளோடு தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும். இன்றேல் அக் கொள்கைகள் கண்ணாடி அலமாரியில் வைத்து அழகு பார்க்கப்படும் செத்த பறவைகளாகவே முடியும்.

இத் தத்துவ வாதிகளின் ஆராய்ச்சியும் வளர்ச்சியும் மிகச் சிறந்த நிலையை அடைந்தன எனினும் மக்கள் வாழ்வோடு தொடர்பு கொள்ளாமையின் பனைமர வளர்ச்சி போல யாருக்கும் பயன்படாத வளர்ச்சியாக ஆயிற்று.

**இந் நாட்டு வளர்ச்சி :**

இனி இம்மாதிரியான தத்துவ ஆராய்ச்சியில் இந் நாட்டுப் பக்தர்கள் ஈடுபட்டார்களா என்று ஆய்வதும் பயனுடைய செயலேயாகும். பக்தர்கள் உணர்வைப் பெரி தாகப் போற்றுகின்றவர்கள் என்றமையால் அவர்கள் அறிவின் துணை கொண்டு செய்யப்பெறும் தத்துவ ஆராய்ச்சியில் இறங்கவில்லையோ என்று ஐயுறவேண்டா. அவர்களும் இத்தகைய தத்துவ ஆராய்ச்சியில் நிரம்ப இறங்கியதுண்டு. ஆனால் எத்துறையில் இறங்கினாலும் அவர்கள் மனித வாழ்க்கையோடு தமக்குள்ள தொடர்பை மறந்ததே இல்லை. தத்துவமாயினும் பக்தியாயினும் அது மனிதனுடைய செயல்களில் ஒன்றே. முதலது மனிதன் அறிவுகொண்டு செய்யப் பெறுவது; மற்றையது அவனு டைய உணர்வுகொண்டு செய்யப் பெறுவது. எனவே இரண்டிலும் ஈடுபடுபவன் மனிதனே. மனிதன் என்றால் அவன் சமுதாயத்தில் கூடிவாழும் (Gregarious nature) இயல்புடைய பிராணி தானே! எனவே அத் தொடர்பை மனத்துட் கொண்டே இவை இரண்டு பற்றியும் ஆய்ந் தனர் இந் நாட்டார்.

இதன் பயன் என்னையெனில் இச்சமுதாயம் எத் துணைத் தூரம் வளர்ந்தாலும் இவண் தோன்றிய தத்துவ ஞானம் பற்றிய ஆராய்ச்சியும் பக்திபற்றிய ஆராய்ச்சியும் சமுதாயத் தொடர்பை விடாமல் பற்றிநின்றன. திருவள்ளுவர் போன்ற ஒருவர் இரண்டாயிரம் ஆண்டு களின் முன்னர்க் கண்டு கூறிய சில உண்மைகள்

இன்றைக்கும் சமுதாயத்திற்குப் பொருத்தமுடையனவாக உள்ளன. மேலும் அத் தத்துவத்தை அவர் எடுத்துக் கூறிய மொழியுங்கூடத் தத்துவம் பேசிய கிரேக்க மொழி போல் மாறிவிடாமல் இன்றும் படித்துப் புரிந்து கொள்ளும் அளவிற்கு நின்று நிலவுகிறது. சாதாரணக் கல்வி அறிவுடைய ஒருவன்கூடக் குறளைப் படித்தால் நூற்றுக்கு ஐம்பது விழுக்காடு புரிந்து கொள்ளும் நிலையில் அந்நூல் அமைந்துள்ளது. தத்துவத்தின் நிலை இவ்வாறாகும் என்று ஓரளவு கண்ட பிறகு பக்தி என்பது பற்றியும் பக்தன் பற்றியும் அவன் செய்யும் பணிகள் பற்றியும் ஓரளவு காண்டல் வேண்டும். பக்தி, பக்தன் என்று கூறியவுடன் அது ஏதோ இந்த நாட்டிற்கே உரிமை என்று யாரும் கருதிவிடவேண்டா. உலகின் எல்லாப் பகுதி களிலும் பக்தர்கள் உண்டு: எல்லாக் காலத்தும் உண்டு. இது பற்றி விரிவாகக் காணலாம்.

**பக்தியாவது யாது?**

பக்தி என்றும் பக்தர்கள் என்றும் நான் இங்கே குறிப்பது மேனாட்டார் குறிக்கும் 'மிஸ்டிஸிசம்' (Mysticism) என்ற சொல்லுக்கும் 'மிஸ்டிக்ஸ்' (Mystics) என்ற சொல்லுக்கும் நேரான பொருளிலாகும். மிஸ்டிக்ஸ் என்ற சொல்லுக்குப் பொருள் கூறவந்த ஆகஸ்போர்ட் அகராதி இறைப்பொருளினிடம் தம்மையே அடைக்கல மாகத் தந்து பக்தி அல்லது தியானமூலம் இறை யனுபவத் தைப் பெறுபவர் என்றும் சாதாரண அறிவிற்கு அப்பாற் பட்டதாகிய ஆன்மீக உண்மைகளை உணரமுற்படுபவர்[1] என்றும் கூறிச்செல்கிறது. மிஸ்டிக்ஸ் என்ற சொல்லின்

---

1. One who seeks by contemplation or self-surrender to obtain union with or absorption into the Dietv, or who believes in spiritual apprehension of truths beyond the understanding.

Concise Oxford Dictionary 798.

இப்பொருளை நாம் பக்தர்கள் என்ற சொல்லுக்கு வழங்குகிறோம். தியானம் என்பதும் இறையனுபவத்தில் ஒன்றாவதும் மிஸ்டிஸிஸத்தில் முக்கியமான கூறுகள் எனில், பக்தியிலும் இவை இரண்டும் உயிர்நாடியான கூறுகள் என்பதையும் அறிவோம்.

**பக்தர்கள்**

நம் நாட்டில் பக்தர்கள் அல்லது அடியார்கள் என்பவர்கள் இருந்ததுபோலவே உலக முழுவதிலும் எல்லாச் சமயங்களிலும் பக்தர்கள் இருந்துள்ளனர். இவர்கள் எச்சமயத்தைச் சேர்ந்தவராயினும், தாம் கடைப்பிடிக்கும் சமயத்தைக் கடந்தவர்களாய், ஏனைய சமயிகள் கூறும் சடங்கு முதலியவற்றை ஏற்காதவர்களாய் இருப்பர். ப்ளூட்டினஸ் (Plutinous) அர்ச். பால் (St. Paul) போன்ற கிறித்துவ பக்தர்களும், கலீல் கிப்ரான் போன்ற சூபிகள்என்றழைக்கப்படும்இஸ்லாமியபக்தர்களும்உண்டு. இயற்கையை இறைவனாகக் கண்டு அதையே தியானம் செய்யும் வோர்ட்ஸ்வொர்த் (Words worth) போன்றவர்களும் இயற்கை போற்றும் பக்தர்கள் (Nature mystics) எனப்படுவர்.

மேனாட்டு பக்தர்களைப்பற்றி எழுத வந்த எப்.எச். பிராட்லி (F.H. Bradly) என்பார் கூற்றுக் கூர்ந்து நோக்கற்குரியது. "சமய வாழ்க்கையில் நாம் அனுபவிக்கும் அனுபவத்தைவிட உண்மையானது வேறு இருத்தல் முடியாது. பக்தி அனுபவத்தில் ஒருவன் உண்மைப் பொருளோடு தொடர்பு கொண்டுள்ளான் என்பதை மறுப்பவன், தான் பேசுவது இன்னது என்பதை அறியாதவனாவான்"[1]. டாக்டர் வில்லியம் பிரௌன்

---

1. Nothing can be more real than what we experience in religion. The person who says that man in his religious consciousness is not

(Dr. William Brown) என்ற மனவியல் மருத்துவர் பேசுவதையுங் காண்டல் பயனுடையது. "மனவியல் மருத்துவன் என்ற முறையில் அல்லாமல், சாதாரண மனிதன் என்ற முறையில் கூற வேண்டுமாயின், இதுவரை வாழ்க்கையில் பெற்ற அனுபவத்தினால் உறுதிப்பட்ட முடிபு யாதெனில் தனி மனிதர்கட்கும், இறைப்பொருளுக்கும் இடையே தொடர்பு இருக்கிறது என்று கூறுவது நம்பத் தகுந்ததேயாகும்."[2]

இந் நாட்டிற்றோன்றிய மணிவாசகர், சுந்தரர், நம்மாழ்வார் போன்றவர்கள் தாம் இறைவனைக் கண்டதாகவும் அவனுடன் தொடர்பு கொண்டிருப்பதாகவும் பாடுவது எத்துணை உண்மையுடையது என்பதனை நம்மில் சிலர் நம்ப மறுத்தாலும் மேலே காட்டியுள்ள சான்றுகள் அது முற்றிலும் உண்மை என்பதை அறிவிக்கின்றன. தியானம் (Contemplation) என்பது இவ்வழியின் அடிப்படை என்றால் பிளேட்டோ போன்றவர்களுங்கூட இப்பெயர் பெறத் தக்கவராகின்றனர்.

இறைப்பொருளின் இருப்பை உணர்ந்து அதன் மாட்டு பக்தி செய்கின்ற அடியார்கள் இவ்வுலகையும் அதிலுள்ளவற்றையும் உள் பொருளாகவே கருதினர். இவை அனைத்தும் மாயை என்கின்ற எண்ணம் பக்தர்

---

in touch with reality does not know what he is talking about.

—Mysticism in Religion P. 199.

2. If I may speak no longer as a psychologist but as a man, the experience of life confirm my belief that the possibility of some communion between that divine power and the individual is not an illusion.

—Ilid 199.

கட்கு வருவதில்லை. இல் பொருளாகிய மாயை என்று அனைத்தையும் நினைக்கத் தொடங்கிவிட்டால் அந்த எதிர்மறை வழி பக்தனுக்கு ஊக்கத்தைத் தருவதில்லை.

**கடவுள் :**

பக்தர்களைப் பொறுத்தமட்டில், இறைப்பொருளுக்குரிய பல்வேறு பெயர்களுள் 'கடவுள்' என்ற பெயரே முற்றிலும் விரும்பத்தகுந்ததாகும். வாக்கு, மனம் என்பவற்றைக் கடந்து நிற்றலின் 'கட' என்ற சொல்லையும், என்றாலும் எல்லாவற்றினுங் கலந்து நிற்றலின் 'உள்' என்ற சொல்லையும் சேர்த்துக் 'கடவுள்' என்று பெயர் சூட்டினான் தமிழன். எல்லாவற்றையும் கடந்தும் அவற்றின் உள்ளுமாகியும் நிற்கும் அப்பொருள் மாறுபாடு, வளர்ச்சி, தேய்வு முதலிய எதுவுமற்றது என்றும் இப்பக்தர்கள் கூறினர்.

**உண்மை விஞ்ஞானி :**

எத்துணைதான் அறிவும், விஞ்ஞானமும் வளர்ந்துள்ளன என்று கூறினாலும் உண்மையான விஞ்ஞானிகள் இத்துணை வளர்ச்சியையும் கண்ட பிறகு தாங்கள் காணாதது எத்துணை என்பதைத்தான் நினைக்கிறார்கள். பால்வெளி (Milky way) என்பது இப்பெரும் அண்டத்திலுள்ள பல கோடி உறுப்புகளில் ஒன்றாகும். அந்தப் பால்வெளியில் உள்ள கோடிக்கணக்கான குடும்பங்களில் சூரியன் குடும்பம் (Solar system) ஒன்று. இந்தச் சூரிய குடும்பத்தில் நாம் வாழும் பூமி ஒன்று. அதில் நாம் வாழுகிற நாடும் அதிலுள்ள ஒரு மூலையும் எத்துணைச் சிறியது? இதில் நாம் கண்டுபிடிக்கும் விஞ்ஞானப் புதுமைகள் எத்துணை நிலையற்றவை? அணுக்களின் இருப்பைக் கண்டு கூறிய டால்டன் (Dalton) சித்தாந்தம் போன்றவை எத்துணை நிலையற்றவை? இவற்றை வைத்துக்கொண்டு அண்டம் முழுவதற்கும் ஒரு பொது

இயல்பைக் கற்பிக்க முயல்வதும் எல்லாவற்றையும் கண்டு விட்டதுபோலப் பேசுவதும் எத்துணை அறியாமை? அறிதோறும் தம் அறியாமையைக் காண்பவனே உண்மையான விஞ்ஞானியாவான்

**மதிப்பீடுகள் :**

எத்துணைத் தூரம் அறிவின் துணைகொண்டு ஆராயினும் இறுதியில் நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றும் ஓர் உள்ளுணர்வு (Intution) ஏற்றுக்கொள்ளப் படுதலை அறிகிறோம். தத்துவ வாதத்திலும் நம்முடைய உள்ளுணர்வின் அடிப்படையில் தோன்றும் ஒரு சில முடிபுகளை ஏற்கும் நிலை ஏற்படுகின்றது. இவை அறிவின் துணைகொண்டு காரண காரிய முறையில் ஆராய்ந்து கண்ட முடிபுகள் அல்ல. எனினும் அவை மிக அடிப்படையான மெய்மைகளாய் (facts) இருத்தலின் அவற்றை ஏற்பது தவிர வேறு வழி இல்லை. உண்மை (சத்தியம்) நன்மை, அழகு என்பவை வேறு ஒன்றனாலும் அளந்து கண்டறியப்படாத மதிப்பீடுகள் (values) என்பதில் ஐயமில்லை.

இவ்வாறு அறிவினால் மட்டுமல்லாமல் உணர்வினால் உணரப்பெறும் முழுமுதற் பொருளைத் தியானம் செய்ய வேண்டும் என்பதிற்கூட இருமுறைகள் கையாளப் பெறுகின்றன அங்குங்கூட அறிவின் துணையுடன் தியானம் செய்வது ஒருமுறை. இரண்டாவது அனுபவ மூலம் சாதனை பெறுவதாம். அனுபவமூலம் அடையப்பெறும் இதில் அனுபவம் என்ற ஒன்றும் அனுபவிக்கப்பெறும் பொருள் ஒன்றுமாக இருப்பதில்லை. அறிவிப்பானும் அறிவிக்கப்படும் அறிவும் வெவ்வேறானவை அல்ல. அனுபவமும், அனுபவிக்கப்படும் பொருளும் அறிவிப்பானும் அறிவிக்கப்படும் அறிவும் ஒன்றேயாம்.[1] அம்

1. கீதை-விசுவரூப யோகம்—38; க்ஷேத்ரக்ஷேத்ரத்து விபாக யோகம்-17.

மூலப் பொருளை 'ஒன்று' என்பதன் நோக்கம் அதனை அடுத்த இரண்டாவது ஒன்று இல்லை என்ற அடிப்படையி லன்று. இரண்டு ஒன்றுகள் சேர்ந்தால் இரண்டாகும். இரண்டு என்ற எண்ணின் மூலப்பொருள்கள் ஒன்றும் மற்றோர் ஒன்றுமாகும் $(1+1)=2$. எண்ணிக்கையில் வரும் இந்த ஒன்று வேறு.

இறைவனை ஒன்று என்று கூறுவதில் பயன்படும் ஒன்று வேறு. இந்த ஒன்று இதனையல்லாமல் வேறு ஒரு பொருளும் இல்லை என்பதை அறிவிக்கும் அலகு (absolute unit) ''சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம் நின்ற நின் தன்மை நினைப்பற நினைந்தேன்; நீயலால் பிறிது மற்று இன்மை'' (கோயில்-7) என்று மணிவாசகர் கூறும்பொழுது பக்தி அனுபவத்தின் தலையாய அனுபவம் பெற்றவர் பேசுகிறார் என்பதை உணர முடிகிறது.

**கடந்து நிற்கும் பொருள்:**

கடந்து நிற்கும் ஒன்றை அறிதல் இயலாத காரியம். அறிதல் என்றாலே அளவுக்குட்பட்டதாக ஆக்குவதாகும். கடந்து நிற்பது என்றால் அதனை அறிய முற்படும் அறிவையும் கடந்து நிற்பது தானே பொருள். ஆனால் அறிய முயன்ற முயற்சியில் கிடைக்கும் பயன் ஒன்றுண்டு. அதுவே அது கடந்து நிற்பது; முற்றிலுமாக அறிய முடியாதது என்பதை அறிந்து கொள்ளுதலாகும்.[2] 'டீன் இஞ்ச்' கூறும் இக்கருத்தை மணிவாசகரும் தாயுமான வரும் என்றோ கூறிப் போயினர்.

---

2. We cannot know the Infinite, for to know is to limit; but we can know the fact of the infinite, for this is implied ih the act of knowing.

Mysticism & Religion 205

'கனவேயும் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்'

—தெள்ளே 10

'ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ்சோதி'

—எம்பா. 1

'உண்டுஓர் ஒண்பொருள் என்று உணர்வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்று அறியொண்கிலை'

சதக. 42

'போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறியோம் உனைக் கண்டு அறிவாரை'

—பள்ளி 5

'அருளால் எவையும் பார் என்றான்—அத்தை
அறியாதே சுட்டி என் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருள் கண்டதல்லால் கண்ட
என்னையும் கண்டிலேன் என்னேடி தோழி'

—தாயுமானார் ஆனந்தக்களிப்பு 13

இவ் வனுபவத்தைப் பெற இந்த பக்தர்கள் அறிவின் துணைக் கொண்டு புறப்படவில்லை. நம்பிக்கை (Faith) என்பதன் துணைக் கொண்டு புறப்பட்டு அகஒளி(Internal Illumination) யின் ஊடே புகுந்து சென்று, இறுதியில் அனுபவத்தைப் பெறுகின்றனர். இந்நிலையில் அறிவு தன் இயலாமையை உணர்ந்து கொள்வதால் அதற்கு எவ்விதக் குறைவும் இல்லை.

**அனுபவ வளர்ச்சி :**

பக்தனுடைய அனுபவம் வளர்கின்ற முறையே அலாதியானது. ஆன்மா என்பது பரம்பொருளின் ஒரு கூறாகும் என்றால் பரம்பொருள் யாண்டும் நிறைந்தி

ருக்கும் தன்மை பெற்றிருப்பதுபோல் இந்த ஆன்மாவும் அதில் ஒரு சிறு பகுதியைப் பெற்றிருக்கும் என்பதில் தவறு ஒன்றுமில்லை. அவ்வாறானால் உள்பொருள் (reality) என்பதன் பல்வேறு பகுதிகளோடும் ஆன்மா தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும். தருக்க முறையில் பார்த்தால் உள்பொருளின் தொடர்பு கொண்டுள்ள ஆன்மா, தேவை ஏற்படும் பொழுது நுண்மையான சூக்கும உலகையும் கடந்து உள்பொருள்கட்கெல்லாம் மூலமாகிய பரம் பொருளுடன் தொடர்பு கொள்வதில் வியப்பில்லை.

**மின் பாய்ச்சல் உதாரணம் :**

மின்சாரம் உடைய இரண்டு முனைகள் உள்ளன. ஒரு முனையில் குறைந்த வலுவுடைய மின் ஆற்றலும் மற்றொரு முனையில் நிறைந்த வலுவுடைய மின் ஆற்றலும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இவை இரண்டின் இடையே தடைப் பொருள்களாகிய (Insulations) காற்று, பீங்கான் முதலிய இருப்பதாகவும் கொள்வோம், இத்தடைப் பொருள்களின் இருமுனை களிலுள்ள இந்த இரண்டு மின் முனைகளும் எவ்விதத் தொடர்பும் கொள்வதாக இல்லை. ஆனால் இம் முனைகள் தம் இடத்தைவிட்டு ஒன்றை ஒன்று நெருங்கி வருவதானால் ஒரு குறிப்பிட்ட தூரம் ஒன்றை நோக்கி ஒன்று நெருங்கியவுடன் இடையே உள்ள தடைப்பொருள் களைக் (Insulation) தாண்டிக் கொண்டு மின் ஆற்றல் பாய்கிறது. அதேபோலத்தான் ஆன்மாவும் பரம்பொரு ளும் நெருங்க நெருங்க இடையே உள்ள தடைப்பொருக ளாகிய இவ்வுடம்பு, உலகம் முதலிய அனைத்தையும் தாண்டிக் கொண்டு ஆன்மா இறையனுபவத்தைப் பெறுகிறது.

மின் ஆற்றல் வலுவுடைய முனையிலிருந்து வலுக் குறைந்த முனைக்கு தாவும்பொழுது வலுக்குறைந்த முனைகூடப் பேராற்றலைப் பெறுகிறது. இன்னும் இது

பாயுங்கால் ஒளி கூட உண்டாகிறது. இவை இரண்டும் ஆன்ம அனுபவத்திலும் ஏற்படுகின்றன. மின் முனைகள் எந்த அளவு ஒன்றை ஒன்று நெருங்கும் பொழுது இந்த ஆற்றல் பாய்கிறது என்று கூறல் இயலாது. ஒன்றை ஒன்று நெருங்கிக் கொண்டே வந்தால் திடீரென்று எதிர் பாரா வகையில் ஆற்றல் பாய்ச்சல் ஏற்படுகிறது. அது போலவே பக்தர்கள் இறைப் பொருளை நெருங்கிச் செல் கையில் திடீரென்று யாரும் எதிர்பாரா நேரத்தில் இந்த ஆற்றல் பாய்ச்சல் ஏற்படுகிறது. ஆற்றல் பாயத் தொடங் கியதை உடன் தோன்றும் ஒளியாலேயே புறத்தே இருப்பவர்கள் அறிய முடியும். ஆனால் மின்முனை அதனை ஏற்றுக் கொள்வதால் அதிக சக்தியைப் பெறு கிறது என்பதை அக்கம்பிதான் அறிவிக்குமே தவிரப் புறத்தே இருப்பவர்கள் அறிய முடியாது.

அதே போல இந்த பக்தர்கள் அந்த அனுபவத்தைப் பெற்றுள்ளனர் என்பதைப் புறத்தே இருந்து பார்ப்பவர் கள் கூட அவர்கள் முகத்தில் தோன்றும் ஒளியால்தான் அறிந்து கொள்ள முடியும். ஆனால் அனுபவத்தைப் பெற்றுள்ள பக்தர்கள் பொறிபுலன் தொழில்கள் அனைத் தும் அடங்கப் பெற்றுத் தம் பூத உடம்பின் இயல்பு முற் றிலும் மறக்கப்பட்ட நிலையில் உள்ளனர் என்பதைப் புறத்தே இருப்பவர்கள் அறிய முடியாது.

**அனுபவம் எத்தகையது :**

இக்கருத்தை மேனாட்டுப் பக்தர்பற்றி எழுதிய பலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். மணிவாசகர் 'ஐம் புலன்கள்' ஆறவந்தனை, ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை மால் அமுதப் பெருங்கடலே! மலையே! உன்னைத் தந்தனை! (சதக-26) என்ற பாடலில் அத்தொடர்பு ஏற் பட்டவுடன் நடைபெற்ற நிகழ்ச்சிகளுள் ஒன்றைக் குறிப் பிடுகிறார். இனி பக்தர்கள் பெறும் அற்புதமான அனுப வம் பற்றிப் பேசும் அடிகள்,

''வாக்குஇறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுடல் அகத்தே
குரம்பை கொண்டு இன்தேன் பாயத்தி நிரம்பிய
**அற்புதமான அமுத தாரைகள்**
**எற்புத் துளைதொறும் ஏற்றினன்......''** (அண்டப் -170-171)

என்கிறார்.

இவர்கள் பெறும் அனுபவத்தின் அடிப்படையாக உள்ள மூலப் பொருள், உலகிலுள்ள பல்கோடி உயிர் களையுப் விட்டுவிட்டுத் தம்மாட்டு தனிப்பட்ட கருணை கொண்டு வந்து இந்த உதவியைச் செய்தது என்றும் இவர்கள் கருதுகின்றனர். திருவாசகத்தில் ஐம்பதிற்கும் மேற்பட்ட இடங்களில் பல அடியவரும் இருக்க இறைவன் தம்மைத் தேர்ந்தெடுத்து இந்த அனுபவத்தைப் பெறு மாறு செய்தது என் கருதி என்று மணிவாசகப் பெருந் தகை வியப்படைகின்றார்.

அறிவின் துணைகொண்டு அல்லாமல் உணர்வின் துணைகொண்டு பெறப்பட்ட இந்த அனுபவத்தைப் பெறாதவர்கள் இதனைப்பற்றிப் பேசுதலும், அது உண்டு இல்லை என்ற வாதத்தில் புகுதலும் அறியாமையுடைய தாகும். இவ்வாறு கூறுவதால், இன்று தாம் ஓர் உயர்ந்த நிலையை அடைந்துவிட்டதாகப் பறைசாற்றிக் கொண்டும் செப்பிடுவித்தைகள் காட்டிக் கொண்டும் திரிபவர்களையெல்லாம் பக்தர்கள் என்று ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொல்வதாக யாரும் நினைந்து இடர்ப் படவேண்டா.

பக்தர்களைப் பொறுத்தமட்டில் பலர் தம் பக்தி வாழ்க்கைக்கு முதற் படியாகக் குறிப்பிட்ட ஓர் உருவ வழிபாட்டை மேற்கொள்வர். நாளாவட்டத்தில் அவர்கள் வளர்ச்சியடையும் பொழுது தனிவடிவ வழிபாடு(Personal

God) மெல்ல மெல்ல மறைந்து உருவும் வடிவமுமற்ற பரம்பொருளுடன் நேரடித் தொடர்பு ஏற்படுகிறது. சிவபெருமானை மிக விரிவாக வருணித்துப் பாடிய மணிவாசகர், ஞானசம்பந்தர் போன்றவர்கள் செல்லச் செல்ல ''வண்ணந்தான் சேயதன்று வெளிதேயன்று'' (சத 25)என்றும்''பெண்டிர் ஆண் அலி என்று அறியொண் கிலை'' (சத. 42) என்றும்

''ஈறாய்முதல் ஒன்றாய் இருபெண் ஆண்குண
மூன்றாய்
மாறாமுறை நான்காய் வருபூதமவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோடிசை எட்டுத்திசை தானாய்
வேறாய்உடன் ஆனான் இடம் வீழிம்மிழ லையே''
—திருமுறை 1-11-2

என்றும் பாடுகையில் தம் விருப்பத்திற்கேற்ற ஓர் உருவ வழிபாட்டில் தொடங்கி இவர்கள் உருவ, வடிவு கடந்த உள்பொருளோடு நேரிடைத் தொடர்பு கொண்டுவிட்டனர் என்பதை அறியமுடிகிறது. இக்கருத்தை ஆல்டஸ் ஹக்ஸ்லி தாம் எழுதியுள்ள 'வழியும் பயனும்' (Ends and Means) என்ற நூலில் மிக அழகாக எடுத்து விளக்குகிறார்.[1]

பக்தி பற்றியும, பக்தர்கள் பற்றியும் மேனாட்டார் கூறும் பல கருத்துகள் நம் நாட்டுப் பக்தர்கள் கூறுவன வற்றோடு பெரிதும் ஒத்திருத்தலைக் கண்டோம். இனிப்

---

1. Those who take the trouble to train themselves in the arduous technique of mysticism always end, if they go far enough in their work of recollection and meditation, by losing their intutions of a personal God, and having direct experience of a reality that is impersonal.

- Endse and Means.

பக்தி பற்றித் தமிழ்நாட்டில் மிகப் பழங்காலத்திலிருந்து தோன்றி வளர்ந்த கருத்துகளை ஒருவாறு காணலாம்.

**தமிழர் கண்ட பக்தி நிலை :**

சங்ககால நூல்களில் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் என்ற இரண்டையும் தள்ளிவிட்டு ஏனையவற்றை எடுத்துப் பார்த்தால் பக்தி அந்நூல்களில் தனியே பேசப்படவில்லை என்பதை அறியலாம். ஆனாலும் பக்தியின் உயிர் நாடியான சில கருத்துகள் அங்கு இடம் பெறுவதையும் அறியமுடியும். உதாரணமாக, குணங்குறி கடந்துள்ள பரம்பொருளை 'முடிவிலாதது ஒரு பொருள்' என்று மணிவாசகர் போற்றித் திருஅகவலில் கூறுகிறார். இதே கருத்தை வள்ளுவப் பெருந்தகை 'வேண்டுதல் வேண்டாமை இலான்' (குறள் 4) என்று கூறுவர். எனவே முழுமுதற் பொருள் விருப்பு வெறுப்பு என்பவற்றைக் கடந்து நிற்கின்ற ஒன்று என்ற உண்மையை இருவரும் கூறக்கேட்கிறோம். இதே கருத்தைப் புறப்பாடல் ஒன்றும் கூறுகிறது. ஆனால் தத்துவமாக எடுத்து விளக்காமல் வேறுமுறையில் கூறுகிறது.

''நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்இலை எருக்கமாயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு'' - புறம். 106

இவ்வாறு புறநானூற்றுக் காலத்திலேயே இத்தகைய உயர்ந்த தத்துவத்தை நம்முன்னோர் அறிந்திருந்தனராதலின் பிற்காலத்தில் வந்த 'பாசவதைப் பரணி' என்ற நூலுடையார்,

''என்பாவம் ஆறுகடல் ஏழிருந்தும் என்னம்மை,
அன்பாளர் கண்ணருவி ஆடுவது திருவுள்ளம்''
- 184

என்று பாடுமுகமாக இறைத் தத்துவத்தின் மிக உயர்ந்த கூறு ஒன்றை எடுத்துக் கூறுகிறார். இதன் பொருள்

ஆழ்ந்து நோக்கற்குரியது. ஏழு கடல்களிலிருந்தும், சங்கல்ப சுலோகத்தில் பேசப்படும் ஆறுகளிலிருந்தும் நீரைக் கொணர்ந்து ஆட்டினாலும் இறைவி அவற்றை விரும்பாமல். அன்பர்களுடைய கண்ணிலிருந்து விழும் இரண்டு சொட்டுக் கண்ணீருக்காக ஏங்கி நிற்கிறாளாம்!

**முருகாற்றுப்படையில் :**

மிகப் பழையதாகிய திருமுருகாற்றுப்படை, மிகப் பெரிய மனிதத் தத்துவத்தையும் மிகப் பெரிய கடவுட் தத்துவத்தையும் மிக எளிமையாகப் பேசுகிறது. மனித மனத்தின் கூறுபாட்டை நன்கு அறிந்த கவிஞன் மானிடர் அனைவரையும் ஒரு சில கூறுகளாகப் பிரித்தான். கல்வி, கேள்வி என்ற வாசனை எதுவுமே இல்லாதார் ஒரு கூட்டம், உலக இன்பங்களை இல்லறம் உட்பட, விடாமல் அனுபவிக்க வேண்டும் என்று நினைப்பார் ஒரு புறம்; உடலை வளர்த்து நல்ல முறையில் போராடுவதே சிறப் பெனக் கருதுவார் ஒரு புறம்; மிக உயர்ந்த தத்துவ ஞானத்தின் மூலம் இறை இலக்கணத்தை அறிந்தார் ஒரு புறம்; வெறும் கிரியைகள் சடங்குகள் என்பவற்றையே பெரிதெனக் கருதுவார் ஒரு புறம் எனப் பல்வேறு குழுக் களாகப் பிரிந்து நிற்பார் அனைவரையும் வகைப்படுத்திய கவிஞன் இவர்கள் அனைவர் மாட்டும் ஒரு பொதுத் தன்மையைக் காண்கிறான். நாகரிகமற்ற கூட்டத்தார் ஆட்டை அறுத்து அதன் குருதியில் அரிசியைக் கலந்து சிதறி 'முருகா' என்று கத்துவதன் மூலம் அவனை அழைக் கின்றனர். இதன் மறுதலையாக மாபெரும் அறிஞர் களாகிய தத்துவவாதிகள் 'புலராக் காழகம் புலர உடீஇ, உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து ஆறு எழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி நாவியல் மருங்கில் நவிலப் பாடும்' (முருகு-184-87) இயல்பினர். அவர்களும் முருகன் சந்நிதியில் நின்று அவனை வழிபடுகின்றனர்.

அறிவு என்பதைப் பரம்பரையிலும் பெறாமல் உணர்வு ஒன்றுமட்டுமே நிற்கின்ற ஒரு கூட்டத்தாரும் ஒரே முருகனைத் தான் வழிபடுகின்றனர். இருவர்க்கும் பொதுவாகவே அவன் உள்ளான். கல்வியற்றவர் மாட்டு வெறுப்பும் கல்வியுடையார் மாட்டு விருப்பும் காட்டாதவன் இறைவன். இதுவே 'முனிவிலாத பொருட்டன்மை.'

**கம்பநாடனில் :**

திருமுருகாற்றுப்படை என்ற பழைய தமிழ்ப் பாடல் கண்ட இப்பேருண்மை தமிழ்நாட்டைப் பொறுத்தவரை தொடர்ந்து போற்றிப் பாதுகாக்கப் பெற்றே வந்ததாக அறிகின்றோம். வான்மீகக் கதையை எடுத்துப் பாடினாலும் அதனை முற்றிலும் மாற்றித் தனதாக ஆக்கிக் கொண்டான் கம்பநாடன் என்பதை நாம் அறிவோம். இதே கருத்தை, அதாவது அறிவும், உணர்வும் ஒரே பரம் பொருளில் சங்கமமாகின்றன என்பதையும், அப்பரம் பொருள் இவை இரண்டின் இடையேயும் எவ்வித வேறுபாட்டையும் பாராட்டுவதில்லை என்பதையும் மிக அழகாகவும் தெளிவாகவும் கவிச் சக்கரவர்த்தி வெளிப் படுத்துகிறான்.

உடன் பிறவாத் தம்பியராக இராமபிரான் ஏற்றுக் கொண்ட மூவரும் மூன்று நிலையைச் சேர்ந்தவர்கள். காப்பிய முறையில் இம்மூவரும் இராமபிரானை அடைந்த முறை வைப்பும் ஆராயத் தகுந்ததாகும். இராமனைக் கண்ட மாத்திரத்தில் அவன் பெருமை, சிறப்பு, பிறவி நோய்க்கு அவன் மருந்தாகும் தன்மை என்று எது பற்றியும் ஆராயமல், சிந்திக்காமல் அவனிடம் முற்றிலுமாகத் தன்னைச் சரணாகதியாகத் தந்துவிட்டான் கங்கை வேடனாகிய குகன், காளத்தி வேடனாகிய கண்ணப்பன் முழுமுதற் பொருளுக்கு மான் இறைச்சி கொண்டு

சென்றதுபோல் கங்கை வேடன் இராமனுக்கு 'தேனும் மீனும் திருத்திக்' கொணர்ந்தான். 'எதனையும் கடவுள் பேணும்' என்று கூறாது எனப் புறநானூறும் முருகாற்றுப் படையும் கூறியதுபோல் குகனின் மீனுணவை இராகவன் ஏற்றுக்கொள்கிறான்.

அடுத்துத்தம்பியின் இடத்தைப்பிடித்தவன் சுக்கிரீவன். இவன் அன்பாகிய உணர்வும் ஆராய்கின்ற அறிவும் சரி சமமாகப் பெற்றவன். பரம்பொருள் என்பதை உணர்ந்தும், அனுமனால் உணர்த்தப் பெற்றும், இராமனை முழுதும் நம்பாமல் மரா மரத்தில் அம்பு போட்டு இராமன் தன் ஆற்றலைக் காட்டிய பிறகே அவன் ஆற்றலை ஏற்றுக் கொள்கிறான். எனவே எத்துணை உணர்வு வசப்படினும் அறிவினால் ஆராய்ந்து பாராமல் எதனையும் ஏற்றுக் கொள்ளாத ஓர் இடை நிகர்த்த கூட்டத்தின் பிரதிநிதியாக விளங்குகிறான் சுக்கிரீவன். ஏறத்தாழ மனநிலை இது போன்றதேயாகும். அறிவுக்கும் உணர்வுக்கும் ஓயாது நடைபெறுகின்ற போராட்டத்தில் சில சமயம் அறிவும், பிற சமயங்களில் உணர்வும் வெற்றி பெறுவதுண்டு. என்றாலும் இவை இரண்டின் இடையே நடைபெறுகின்ற போராட்டத்தை நமக்கு அறிவுறுத்தவே சுக்கிரீவன் பாத்திரப் படைப்பைக் கம்பநாடன் இவ்வாறு படைத்துக் காட்டுகிறான் போலும்.

இனி மூன்றாவது தம்பியாகிய வீடணன் முற்றிலும் அறிவே வடிவானவன். 'உம்பரின் ஒரு முழம் உயர்ந்த ஞானத்தம்பி' என்று கவிஞனாலேயே பாராட்டப்படுபவன், இராகவனையும் அவன் வீரச் செயல்களையும், வாலியை ஒழித்த வரலாற்றையும் நன்கு அறிந்திருந்தும் இந்த அறிஞன்தானே நேரிற் கண்டு அறிவினால் ஆராய்ந்து சோதித்துப் பார்த்தாலொழிய இராகவனை முழுவதுமாக ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. 'பிறவியின் பகைஞன் போலுமால்' (வீட. அடை. 20) என்று பேசுகிறான். போலுமால் என்ற சொல்லால் ஒருவேளை இருக்குமோ

என்றுதான் கூறுகிறான். எனவே அறிவின் துணை கொண்டு உண்மை நாடுபவன் உணர்வு கொண்டு நாடுபவனைப் போல உடனே எந்த முடிவுக்கும் வருவதில்லை என்பதனையே கவிஞன் காட்டுகிறான்.

உணர்வே வடிவான (Pure emotion) குகன் இறைப் பொருளில் முதலில் ஆட்படுகிறான். உணர்வும் அறிவும் (partial intellect and partial emotion) உடைய சுக்ரீவன் இரண்டாவதாக ஆட்படுகிறான். அறிவே வடிவான (Pure intellect) வீடணன் இறுதியாக ஆட்படுகிறான். இதில் வியப்பு என்னையெனில் இம்மூவரையும் ஏற்றுக் கொள்ளும் பரம்பொருள் இம்மூவரிடையேயும் எத்தகைய வேறுபாடும் பாராட்டாமல் மூவரையும் தம்பியராக ஏற்றுக்கொள்கிறது. முருகாற்றுப்படை கண்ட இக் கருத்தைக் கம்பநாடன் விரித்துக் காப்பியத்தில் அமைத்துக் காட்டுகிறான். முற்றிலும் உணர்வே வடிவான குகனுக்கும், முற்றிலும் அறிவே வடிவான வீடணனுக்கும் வழி காட்டும் குரு தேவைப்படுவதில்லை. இடை நிகர்த்த சுக்கிரீவனுக்கு அனுமன் போன்ற ஒருவன் தேவைப் படுகிறான்.

மேலும் உணர்வு வடிவானவர் உடனடியாக ஈடுபடுவ துடன் விரைவில் அவ்வீடுபாட்டின் பயனையும் அடைவர் என்பதைக் கங்கைவேடன் (குகன்) வரலாறும் காளத்தி வேடன் (கண்ணப்பர்) வரலாறும் அறிவுறுத்தும். கண்ணப்பர் வரலாற்றில் காணப்படும் சிவகோசரியார் அறிவுவாதியாதலின் இறுதிவரை இறைவனை அவர் நேரே காணும் வாய்ப்பைப் பெறவில்லை என்பது நோக்கற்குரியது.

இனி இதனையடுத்துக் கடவுட் பொருளின் இலக்கணம் பேசும் திருமுருகாற்றுப்படை அப்பரம் பொருள்,

"ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்
வேலன் தைஇய வெறியயர் களனும்

காடும், காவும், கவின்பெறு துருத்தியும்
யாறும், குளனும், வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும், புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையினும்''
—முருகு 221-6.

உறைகின்றதென்ற தத்துவத்தையும் பேசுகிறது. இத்துணை உயர்ந்த தத்துவம் பேசிய அத்தத்துவ ஞானி இதனை அடுத்துப் பக்திபற்றிப் பேசுகிறார். யாண்டும் உள்ள இப்பரம் பொருளை அடையவேண்டிச் செல்வான் என்ன செய்தல் வேண்டும் என்ற வினாவுக்கு விடை தருகின்றார். இறப்ப உயர்ந்த இப்பொருளை அடைய மிகப்பெரிய தவம் முதலியன இயற்றவேண்டும் போலும் என ஐயுறுவாரை நோக்கி இதோ பேசுகிறார். ''நீ அவனை அடைய வேண்டும் என்ற ஒரு குறிக்கோளுடன் புறப்பட்டால் போதுமானது. எங்கும் தூரத்தில் அவனைத் தேடி அலையவேண்டா. காடு கா முதல் கந்துடை நிலைவரை வேண்டினர் வேண்டியபடி வழிபட அவற்றை ஏற்றுக்கொண்டு அங்கங்கு அவன் உறைகின்றான். உனக்கு வேண்டப்படுவது உறுதி மட்டுமேயாகலின் அந்த உறுதியுடன் நீ புறப்பட்டால் போதும். புறப்பட்ட உடனே நீ விரும்பியதை அடைந்துவிடலாம்'' என்ற கருத்தில் முருகாற்றுப்படை பேசிச் செல்கிறது.

''எய்யா நல்இசை, செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரிக் கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவு நீ நயந்தனை ஆயின், பலவுடன்,
நன்னர் நெஞ்சத்து இன் நசை வாய்ப்ப
இன்னே பெறுதி, நீ முன்னிய வினையே!''
—முருகு 61-66.

இத்துணைத் தூரம் தத்துவத்தையும் பக்தியையும் கலந்து பேசிய கவிஞன், தத்துவ விசாரணையில் ஈடுபட்ட மனம்,

சாதாரண நிலையில் நின்று உய்கதி அடைய மனம் ஆகிய இரண்டையும் நோக்கி ஒரே விடையை நல்குகிறான். புறப்படவேண்டும் என்ற நினைவு தோன்றினாற் போதுமானது. நினைத்த பயன் நினைத்த அந்தக் கணத்திலேயே, நினைத்த இடத்திலேயே கிடைக்கும் என்ற உறுதியை, நம்பிக்கையை நல்குகிறான்.

**தத்துவ, பக்தி வேறுபாடு:**

இங்கேதான் தத்துவத்திற்கும் பக்திக்கும் இடையே உள்ள வேறுபாட்டை அறிய முடிகிறது. 'நான் ஐயங் கொள்கிறேன் எனவே நான் என்ப தொன்றுண்டு' (I doubt therefore I am)என்று பேசிய டாக்கார்ட்டேயின் தத்துவஞானம் எங்கே? ஆராய்ச்சி என்ற பெயரில் அனைத்தையும் ஐயுற்றுத் தன்னையும் உட்பட அனைத்தையும் பிளந்து பார்த்து உண்மை காணப் புறப்படுகிறது தத்துவம். பொருள் இருக்கிறது என்ற மலை போன்ற நம்பிக்கை ஒன்றையே துணையாகக் கொண்டு வாழ முற்படுகிறது பக்தி. பொருள்களைச் சோதனை மூலம் ஆராய்ந்து அவற்றின் இயல்பை அறியவேண்டும் என்பதற்காக மட்டும், வேறு பயன் கருதாமல் ஆராய்வது தத்துவம். வாழ்க்கை என்றால் அதன் பயன் என்று ஒன்று இருக்கத்தானே வேண்டும் என்ற முடிவில் நம்பிக்கை கொண்டு தொழிற்படுவது பக்தி.

இத்தகைய பக்தி உலகில் ஈடுபடுபவன் ஒருவகை மனநிலையை (mystic state) அடைகின்றான். மேலை நாட்டுத் தத்துவவாதிகளுள் எம்பிரிசிசக் கொள்கை உடையாரல்லாதஸ்பினோஸா (Spinoza) போன்றதத்துவ ஞானிகள் அறிவு வழியில் சிந்தித்துக் கொண்டே சென்றும் அறிவு வழியிலேயே கடவுட் பற்றுக் கொண்டனர் என்பதையும் அறிதல் வேண்டும். மாறுபட்ட பொருள்களிடையே காணப்பெறும் ஒருமைப்பாடும்,முரண்பாடுகளின்

இடையே காணப்பெறும் ஒன்றல் தன்மை (Unity which underlies all diversity, harmony which reconciles all contradictions) என்பவற்றின் மூலம் கடவுள் வெளிப்பாட்டை அறிவு வாதிகள் சிலர் காணமுடிந்தது.

அறிவு வாதத்தால் அறியமுடியாத ஒன்றைக்கூட ஆழ்ந்த பக்தியின் மூலம் அறியமுடியும் என பிளேட்டோ கூறியதும் நோக்கற்குரியது. 'முற்றிலும் சத்திய வடிவான பொருள் முற்றிலும் அறியப்படத்தக்கதாகவே இருத்தல் வேண்டும்; நம்மால் முற்றிலும் இங்கே அதனை அறிய முடியாவிடினும் அது முற்றிலும் அறியக்கூடியதே.[1] என்பது அவரது வாதம்.

பிளேட்டோவின் இந்த வாதத்தில் நம் நாட்டவர் ஒரு பகுதியை மட்டும் ஏற்றுக்கொண்டு மற்றதை மறுப்பர். பொருள் முற்றிலும் சத்தியவடிவானது (fully real) என்பதை நம்மவர் ஏற்பர். அது அறியப்படத் தக்கது என்பதைக் கூட ஏற்பர் ஆனால் அது முற்றிலும் அறியக் கூடியது என்பதை இவர்கள் ஏற்பதில்லை. எந்த நிலையில் அது அறியக் கூடியதாக ஆகிறதோ அன்றே அது 'கடவுள்' என்ற தன் பெயர்த் தன்மையை இழந்துவிடும். வாக்கு மனம் முதலியவற்றைக்கடத்திருத்தலினால்தானே கடவுள் என்ற பெயர் அதற்கு வந்தது.[2] எனவே அது முற்றிலுமாக அறியக்கூடியது என்ற பிளேட்டோவின் கருத்து இந்நாட்டுப் பக்தர்கள் தத்துவவாதிகள் இருவரும் ஏற்க முடியாத ஒன்றாகும். கீழே உள்ள முருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியே இதனை வலியுறுத்தல் காணலாம்.

---

1. Plato's brave act of faith that the *fully real* is *fully knowable* - *not* full known to us here, but fully knowable - Mysticism in Religion.

   — W. R. Inge P. 17 (1969).

2. கீதை-விசுவரூப யோகம்-48, 53.

**முருகாற்றுப் படையில்-தொடர்ச்சி :**

பரம்பொருள் 'வேண்டுநர் வேண்டியாங்கு வழிபட ஆண்டாண்டு உறையினும்' அதனைக் கண்டவுடன் தன் ஆர்வங் காரணமாக பக்தன் அதனைப் புகழத் தொடங்கி விடுகிறான். பொருளைக் கண்டவுடன்,

''கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும் பெரும் இமையத்து நீலத் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ!
ஆல்கெழு கடவுட் புதல்வ! மால்வரை
மலைமகள் மகனே! மாற்றார் கூற்றே!
......... ......... ......... .............
......... ......... ......... .............
போர்மிகு பொருந! குரிசில்''

— முருகு 252லிருந்து 277.

என்ற முறையில் புகழத் தொடங்கிவிடுகிறான் பக்தன். ஆனால் இவ்வாறு புகழ்ந்து கொண்டுவரும் பொழுதே அவனுடைய அகமனம் சிந்திக்கத் தொடங்குகிறது. யாரை இப்பொழுது புகழ்கிறோம்? இவ்வாறு பல யுகயுங்களாகப் புகழ்ந்தாலும் அவனை முழுமையாக நாம் அறிந்து கூறி விட முடியுமா? சொல்லுக்கு அப்பாற்பட்டவனாய் இருத் தலினால் தானே 'கட' என்றும், சொல்லும் பொருளுமாய் இருத்தலினால்தானே 'உள்' என்றும் சேர்த்து 'கடவுள்' என்று கூறினர். அத்தகைய பொருளை எத்துணை அறி யாமை கொண்டு யான் புகழத் தொடங்கினேன்? என்று சிந்தித்தவுடன் புகழ்வதை உடன் நிறுத்திவிடுகிறான் பக்தன், உடனடியாகத் தன்னுடைய சிறுமையும் பொருளின் இறப்ப உயர்ந்த பெருமையும் நினைவுக்கு வரவே.

''நின்அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்
நின் அடி உள்ளி வந்தனன்......''

—முருகு 278, 9.

என்று கூறி முடித்துவிடுகிறான், தான் ஒருவன் மட்டும் இப்பிறவியில் மட்டுங் கூறப்புகுவது எத்துணை அறியாமை! 'மன் உயிர்க்கு' என்ற சொற்களால் உயிர்கள் தோன்றிய நாளிலிருந்து நிலைபேறுடைய அப் பல்வேறு உயிர்களும் அளந்து காணமுற்படினும் அவன் இயல்பு அளத்தற்கரியது என்பதையே இவ்வடி உணர்த்தி நிற்கின்றது.

இதனினும் சிறந்த ஒன்றையும் கவிஞன் இவண் காட்டுகின்றான். தான் என்ற ஒரு பொருளாகி நின்று பக்தன் பெருமானைப் புகழ்ந்து கொண்டிருக்கின்றவரை அவன் இவன் புகழக்கேட்டு மகிழ்ந்து வெளிப்படவில்லை. ஆனால் தன் சிறுமையையும் அவன் பெருமையையும் உணர்ந்து அவனைப் புகழுதல் ஆகாத காரியம் எனத் தெளிந்து 'நின்னடி உள்ளி வந்தனன்' என்று முற்றிலுமாகச் சரணாகிதி ஆகின்ற பொழுதுதான் இறைவன் வெளிப்படுகிறான் என்பதையும் கவிஞன் கூறுகிறான்.

'நின்னடி உள்ளி வந்தனன்' என்று கூறியவுடன் அவன் தோன்றி 'அஞ்சல் ஓம்புமதி அறிவன் நின் வரவு' எனக் கூறிப் 'பெறலரும் பரிசில் நல்குகின்றான்' என்கிறது கவிதை. அறிவு முதிர்ந்த நிலையில்தான், தத்துவத்தை நன்கு விளங்கிக் கொள்ளும் நிலையில்தான் அவனை அளந்து அறிதல் இயலாத காரியம் என்ற உண்மையான ஞானம் தோன்றுகிறது. அவன் இயல்புகளை அளந்து அறிய முடியாது என்பதை அறிவதே தத்துவ ஞானந் தான். இதனை உணர்வதே மெய்யுணர்தல் (Realization) எனப்பெறும். எனவே பிளேட்டாவின் கருத்துக்கு ஓரளவு மாறுபட்டு இந்நாட்டு பக்தன், சத்தியப்பொருள் உணரப் பட முடியுமே தவிர அறியப்படக் கூடிய ஒன்றன்று என்பதை நன்குணர்ந்து கூறியும் விட்டான்.

**பக்தனும் சமயமும் :**

இவன் பக்தி என்று கூறும்பொழுது இன்று உலகிடைக் காணப்பெறும் பல்வேறு சமயங்களையும், அவை செய்யும் ஆட்சியையும் மனத்துட் கொண்டு இடர்ப்பட வேண்டா. சிறந்த பக்தன் ஒருவன் ஏதாவதொரு சமயத்தைச் சேர்ந்தவனாகத்தான் இருத்தல்வேண்டும்என்றும் கருதவேண்டா. பக்தன் சமயங் கடந்தவனாகவும் இருக்கலாம். உண்மைச் சமயவாதிகளாக இருப்பின் அவர்கட்கு பக்தி இன்றியமையாதது என்று கூறலாமே தவிரப் பக்தனுக்குச் சமயம் இன்றியமையாத ஒன்றன்று என்பதை மறவாமல் மனத்துட் கொள்ள வேண்டும்.

ஆனால் இன்று சமயங்கள் அனைத்தும் ஆன்ம முன்னேற்றத்தைக் கருதும் நிறுவனங்களாக அல்லாமல் வாணிக நிறுவனங்களாகவே அமைந்துள்ளன. சாதாரண அறிவுபடைத்த மக்களைத் தன்பால் ஈர்த்துக் கொள்வதுடன் பெருஞ் சொத்தைத் தன்பால் வைத்துக்கொண்டு அதைப் பராமரிப்பதே தன் கடமையாகக் கொண்டுள்ள நிறுவன அமைப்புடைய சமயங்கள் (established religions and religious establishments) உண்மையில் சமயங்களே அல்ல என்றும் சமயம் ஆன்மீக முன்னேற்றத்தைவிட உலகியல் முன்னேற்றமும், தன் செல்வாக்கும் இன்றியமையாதவை என்று கருதத் தொடங்கியதோ அன்றே அது நிறுவனமாக ஆகிவிட்டது. அதனால் விளைந்த பயன் யாது என்று 'பர்டைஃப்' (Berdyaeft) என்ற பெரியார் இதோ கூறுகிறார். ''அன்பைப் பெருக்கவேண்டும் என்ற காரணத்திற்காக மக்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கவும், உரிமை வேண்டும் என்று கூறுதற்காக பிடிவாதப்படுத்தும் வன்முறையை ஆதரிக்கவும் செய்வதுடன், ஆன்மீகக் கொள்கைகளை வளர்க்கும் வழிமுறைகளைக் கையாள

வேண்டும் என்று கூறிக்கொண்டு மிகச்சிறந்த உலகாயத வாதிகளாகவும் ஆகிவிட்டனர்.'' 1

**இன்றைய நிலை:**

இன்று உலகம் முழுவதும் பரவியுள்ள சமயங்கள், அவற்றை ஆட்சி செய்யும் நிறுவனங்கள் முதலியவற்றை யும், இடைக்காலத்தில் ரோமன் கதோலிக்கர் ஐரோப்பிய அரசியலில் புகுந்து புறப்பட்டதையும் போப்பாண்ட வர்கள் படை வைத்துக்கொண்டு நேரடியாகவும் மறை முகமாகவும் ஐரோப்பிய அரசியலில் தலையிட்டதையும், இந் நாட்டில் பௌத்த, சமண, சைவர்கள் என்போர் அவ்வப்போது அரசியல், செல்வாக்கைப் பெற்று ஒருவரை ஒருவர் சாடிக் கொண்டதையும், இற்றை நாளிற்கூட மடங்கள் என்ற பெயரில் மாபெரும் வாணிக நிறு வனங்கள் எல்லாச் சமயத்தாராலும் காப்பாற்றப்படுவ தையும் காணும்பொழுது 'பர்டைஃப்' கூறியவை எத் துணை உண்மை என்பது விளங்கும். இச்சமய நிறு வனங்கள் அனைத்திலும் புகுந்து பார்த்தால் இந்நிறுவனங் களை விட்டுப் பக்தியும், உண்மைச் சமயக் கொள்கை களும் பன்னூறு ஆண்டுகளின் முன்பே விடைபெற்றுச் சென்று விட்டனவென்பது விளங்கும்.

**நிறுவனங்கள் ஏன்?**

நிறுவன அடிப்படையை மேற்கொண்ட எந்தச் சமயமும் உண்மைப் பக்தியும் ஒருநாளும் ஒன்றாய்

---

1. As Berdyaeft says, men have set themselves to hate in the cause of love, to use compulsion in the name of freedom, and to become practising materialists for the inculcation of spiritual principles.

— Mysticism in Religion P. 18.

இருத்தல் இயலாது. இதன் அடிப்படையை விளங்கிக் கொள்ள வெகுதூரம் சென்று ஆயவேண்டா. சமய நிறுவனங்கள் (Religious establishments) எவ்வாறாயினும் தாமும், தம் ஆட்சியும், அதிகாரமும் என்றும் நிலைத்திருக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் பணிபுரிய முற்படுகின்றன. பக்தன் தான் என்ற ஒன்றே இல்லாமல் தன்னை இறைவன், உயிர்கள் என்பவற்றினிடையே கரைத்துக் கொள்கிறான். எனவேதான் இவை இரண்டும் ஒன்றாக இருக்க முடிவதில்லை. இன்னுங் கூறப்போனால், புத்தர் ஒருவர் மட்டுமே சங்கம் என்ற ஒன்றை ஏற்படுத்தி அதற்குச் சில கட்டுப்பாடுகளையும் விதித்தார். இவரையல்லாத ஏனைய சமயங்களை நிறுவிய இயேசு பெருமான், நபி பெருமான், இந்நாட்டுச் சமயத்தைப் போற்றிய நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகிய யாவரும் தம் கொள்கையைப் பரப்ப நேரிடையாக மக்களிடம் தொடர்பு கொண்டார்களே தவிர மடங்கள், நிறுவனங்கள் என்பவற்றை ஏற்படுத்தவே இல்லை.

இப் பக்தர்கள் தத்துவவாதிகளைப் போல் மக்கள் தொடர்பை விட்டு விட்டு வாழ்ந்தவர்கள் அல்லர் எனினும் இவர்கள் தம் தொடர்பை நிலைநாட்ட நிறுவனங்களைத் தோற்றுவித்தால் அந்த அமைப்பைக் காப்பது பெரிதாக முடியுமே தவிரத் தாம் மேற்கொண்ட கொள்கையைப் பரப்புவது கடினமாக முடிந்துவிடும் எனக் கருதினர். 'இடுப்பில் கட்டும் துணியை எலி கடிக்கிறதென்று, எலியை வெருட்டப் பூனை வளர்க்கத் தொடங்கி இறுதியில் துறவி குடும்பஸ்தனான' கதை தான் இன்றைய நிறுவன சமயங்களின் கதையும். எனவே இவற்றில் தத்துவத்தையோ பக்தியையோ சென்று தேடுவது பயனற்ற செயலாகவே முடியும்.

**பக்திபற்றிக் கீழ் மேல் நாட்டார்:**

இனி, பக்தி (Mysticism) என்பதனை இந் நாட்டாரும் மேனாட்டாரும் கண்ட முறையைக் காண்டல் வேண்டும்.

பக்தி அல்லது இறையன்பு என்பது இறைவனிடம் அன்பு செலுத்துவதன் மூலம் 'தான்' என்ற பொருள் சிறிது சிறிதாகக் கரைந்து அவன் என்ற பொருளில் அடங்கி விடுவதாகும். பக்தி ஏற்படும் முறையையும், அதன் வளர்ச்சியையும், அதன் விளைவையும் நாவுக்கரசர் பெருமான் நன்கு விளக்கியுள்ளார்.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பேர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப் பட்டாள் நங்கை தலைவன் தாளே''

—6-25-10.

இக் கருத்தை மொழி பெயர்த்துக் கூறுவதுபோல் அமைந்து உள்ள மேனாட்டார் கருத்தையுங் காணலாம்.

'பக்தி என்பது தான் இறைவன் என்ற இரண்டிடத்தும் ஓர் ஒருமை ஏற்பட்டதாக உணருகின்ற உணர்வேயாம்; எனவே அது உண்மைச் சமயத்தின் உயிர்நாடியான ஒன்றாகும். சமய வாழ்வு என்பதன் பொருளும் பகுதியும் அதுவே. [1]

---

1. "Mysticism is the immediate feeling of the unity of the self with God; it is nothing, therefore, but the fundamental feeling of religion, the religious life at its very heart and centre."
— Pflederer.

'இறைப்பொருளை அல்லது சத்தியப் பொருளைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்று மனித மனம் முயல்கின்ற முயற்சியே பக்தியாகும். அப் பரம்பொருளைப் பற்றி நின்று அதனுடன் இரண்டறக் கலந்து அனுபவிக்க விரும்புவதே பக்தி. இவற்றுள் முதலாவது பக்தியின் தத்துவப் பகுதியாகும்; இரண்டாவது சமயப் பகுதியின் ஒரு கூறாகும். இந்நிலையில் கடவுள் ஒரு தனித்த பொருளாக இராமல் அனுபவமாக ஆகிவிடுகிறது.' [1]

'பக்தி என்பது சமயவாழ்வின் சாரமாகவும், தனிப்பட்ட பகுதியாகவும் உள்ளது. வேறு எல்லாவித உறவுகளையும் மனமானது மறந்துவிட்டு இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவு ஒன்றை மட்டும் விரும்புவதாகும்.[2]

---

1. "Mysticism appears in connection with the endevour of the human mind to grasp the divine essense or the ultimate reality of things, and to enjoy the blessedness of actual communion with the highest. The first is the philosophic side of mysticism, the second, its religious side. God ceases to be an object and becomes an experience.

— Pringle Pattison

2. "Mysticism is religion in its most concentrated and exclusive form. It is that attitude of the mind in which all other relations are swallowed up in the relation of the soul to God." (E.Caird)

— Mysticism in Religion P. 31, 32..

பக்தி (Mysticism) பக்தர்கள் (Mystics) என்ற இரு பிரிவு பற்றியும் இந்நாட்டுப் பெரியோர்கள் கூறியவற்றிற்கும் மேலை நாட்டுப் பெரியோர் கூறியவற்றுற்கும் அதிகம் வேறுபாடு இல்லை என்பதை அறிய முடிகிறது. காரணம் அனுபவத்தால் உணரப்படும் ஒன்றை யார் அனுபவித்தாலும் ஒரே மாதிரியான பயனைத்தானே தரும்! பக்தர்கள் குறிப்பிட்ட ஒரு சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்து, அதில் கூறப்பெற்ற சடங்குகளை இயற்றுபவர்களாகவும், அச்சமயப் பெயரில் பேசப்பெறும் அனைத்தையும் நம்புபவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்று கூறுவது அறியாமையின் பாற்படும். ஒரு சில பக்தர்கள் அவ்வாறு இருப்பினும் தவறு இல்லை.

**பக்தி அனுபவம் எத்தகையது :**

பக்தி அனுபவத்தில் ஏற்படும் சில நிலைகள், அதாவது மானிட ஆன்மா இறைப் பொருளுடன் கொள்ளும் நேரடித் தொடர்புகள், நம் போன்ற மனநிலையிலிருந்து அறிய முடியாதவை; உணர முடியாதவையுங்கூட. மணிவாசகர் போன்ற ஒருவர், கல்விக் கடலைக் கரைகண்டு ஒரு பெருநாட்டின் தலைமை அமைச்சராகவும் இருந்த ஒருவர் இறைவன் 'அற்புதமான அமுததாரைகள் எற்புத் துளைதொறும் ஏற்றினன்' (அண்டப்-174, 5) என்று கூறும்பொழுது நமக்கு அந்த அனுபவம் சித்திக்காது என்பதை அறிந்திருப்பினும், அதனை உண்மையென்று ஏற்றுக் கொள்வது தவிர வேறு வழி இல்லை.

பக்தியில் திளைப்பவர் காணும் காட்சிகள் கனவு காண்பவர் காண்பது போன்ற, உண்மையற்ற மனப் பிராந்திகள் என்று கூறும் அறிவுவாதிகளும் உண்டு. உண்மையைக் கூறவேண்டுமாயின் மனிதனுடைய பொறி புலன்கள் ஓய்ந்து நிற்கும்பொழுதும், அவர்களுடைய உறுதி (will) தளர்ந்திருக்கும் பொழுதும் காணப்பெற்ற மனப் பிராந்தியாகிய காட்சிகளல்ல பக்தர் காணும்

காட்சிகள். பொறி புலன்கள் அனைத்தும் மிகக் கூர்மையாகத் தொழிற்படுகின்ற நேரத்திலேயே இக்காட்சி கிடைககிறது. எல்லாப் பொறிகளும் புலன்களும் தனித் தனியே தத்தம் பணிகளைச் செய்யாமல் அனைத்தும் ஏதாவது ஒரு பொறிவழிச் செல்லவும் (உதாரணமாக கண்வழி) அந்தக்கரணம் என்று கூறப்பெறும் மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற நான்கும் சிந்தை என்ற ஓர் அந்தக் கரணத்தின் வழியே தொழிற்படவும் குணங்கள் எனப்பெறும் இராஜஸ, தாமச, சத்துவம் என்ற மூன்று குணங்களில் சத்துவம் மட்டுமே தொழிற் படவும் உள்ள நிலையில்தான் கடவுள் காட்சி கிடைக் கிறது. இதனைச் சேக்கிழார் மிக விளக்கமாக சுந்தர மூர்த்திகள் சிதம்பரத்தில் அத்தனை வணங்கும் நிலையைக் கூறும்பொழுது எடுத்து விளக்குகின்றார்.

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

—தடுத். புரா. 106

இனி இதே கருத்தை மொழி பெயர்த்ததுபோல டி. எச். ஹியூக்ஸ் என்ற பெரியார் கூறுகிறார். '(பக்தனுக்கு) ஆன்மா ஒருமுகப்பட்டு அமைதியாக இருக்கிறது என்றால் அந்த அடக்கம் தொழிற்படாமலும் சோம்பியும் இருக்கும் அடக்கமன்று. பொறி புலன்கள் ஆகிய அனைத்தும் ஓரிடத்தில் குவியுமாறு செய்தலும் அதன் பயனாக

தற்போதம் குவிதலும், உறுதி முதலிய கரணங்கள் ஒரே நிலையில் ஓரிடத்தில் ஒருமுகப்பட்டிருத்தலுமேயாகும்.'[1] பாஸ்டைட் என்ற பெரியார் 'பக்தி என்பது எல்லாவற்றி னின்றும் தொடர்பை அறுத்துக் கொள்ளுதல் அன்று; அது புதிய ஓர் இறுமாப்பைப் படைத்துக் கொள்வதாகும்,[2] என்று கூறுவதாக டீன் இஞ்ச் தம்முடைய 'சமயத்தில் பக்தி' என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

இக்கருத்துடன் நாவுக்கரசரின் 'இறுமாந்து இருப்பன் கொலோ ஈசன்தன் பல்கணத்து எண்ணப்பட்(டு)' (4-9-11) என்ற அடிகளை ஒப்புநோக்குக. பக்தர்கள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவராயினும் அவர்கள் அனுபவம் ஒன்றே என்பதை வலியுறுத்தும். ஈண்டு இறுமாப்பு என்பது நாம் கூறும் அகங்காரமன்று. இன்று இதனைப் 'பெருமிதம்' என்ற சொல்லால் குறிக்கலாம்.

பக்தியின்மூலம் ஆன்மீக ஒருபமைப்பாட்டை அடையும் வழி யாவர்க்கும் திறந்துளது எனினும் நாம் ஒவ்வொரு வரும் அவ்வழிச் சென்று பயனடையலாம் எனினும் ஒரு

---

1. "When the soul is said to be passive, the passivity is not a state of inactivity or lassitude. The will is not in abeyance, nor the various faculties inert. All the faculties are directed to one centre, so that there is a narrowing of the field of consciousness through the intense concentration of the will to one focul point." The Philosophic Basis of Mysticism.

— T. H. Hughes P. 50.

2. "Mysticism says Bastide, does not mean dissociation; it is the creation of a new ego."

— Mysticism in Religion P. 35.

காட்சிகள். பொறி புலன்கள் அனைத்தும் மிகக் கூர்மை யாகத் தொழிற்படுகின்ற நேரத்திலேயே இக்காட்சி கிடைககிறது. எல்லாப் பொறிகளும் புலன்களும் தனித் தனியே தத்தம் பணிகளைச் செய்யாமல் அனைத்தும் ஏதாவது ஒரு பொறிவழிச் செல்லவும் (உதாரணமாக கண்வழி) அந்தக்கரணம் என்று கூறப்பெறும் மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற நான்கும் சிந்தை என்ற ஓர் அந்தக் கரணத்தின் வழியே தொழிற்படவும் குணங்கள் எனப்பெறும் இராஜஸ, தாமச, சத்துவம் என்ற மூன்று குணங்களில் சத்துவம் மட்டுமே தொழிற் படவும் உள்ள நிலையில்தான் கடவுள் காட்சி கிடைக் கிறது. இதனைச் சேக்கிழார் மிக விளக்கமாக சுந்தர மூர்த்திகள் சிதம்பரத்தில் அத்தனை வணங்கும் நிலையைக் கூறும்பொழுது எடுத்து விளக்குகின்றார்.

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

—தடுத். புரா. 106

இனி இதே கருத்தை மொழி பெயர்த்ததுபோல டி. எச். ஹியூக்ஸ் என்ற பெரியார் கூறுகிறார். '(பக்தனுக்கு) ஆன்மா ஒருமுகப்பட்டு அமைதியாக இருக்கிறது என்றால் அந்த அடக்கம் தொழிற்படாமலும் சோம்பியும் இருக்கும் அடக்கமன்று. பொறி புலன்கள் ஆகிய அனைத்தும் ஓரிடத்தில் குவியுமாறு செய்தலும் அதன் பயனாக

தற்போதம் குவிதலும், உறுதி முதலிய கரணங்கள் ஒரே நிலையில் ஓரிடத்தில் ஒருமுகப்பட்டிருத்தலுமேயாகும்.'[1] பாஸ்டைட் என்ற பெரியார் 'பக்தி என்பது எல்லாவற்றி னின்றும் தொடர்பை அறுத்துக் கொள்ளுதல் அன்று; அது புதிய ஓர் இறுமாப்பைப் படைத்துக் கொள்வதாகும்,[2] என்று கூறுவதாக டீன் இஞ்ச் தம்முடைய 'சமயத்தில் பக்தி' என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

இக்கருத்துடன் நாவுக்கரசரின் 'இறுமாந்து இருப்பன் கொலோ ஈசன்தன் பல்கணத்து எண்ணப்பட்டு' (4-9-11) என்ற அடிகளை ஒப்புநோக்குக. பக்தர்கள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவராயினும் அவர்கள் அனுபவம் ஒன்றே என்பதை வலியுறுத்தும். ஈண்டு இறுமாப்பு என்பது நாம் கூறும் அகங்காரமன்று. இன்று இதனைப் 'பெருமிதம்' என்ற சொல்லால் குறிக்கலாம்.

பக்தியின்மூலம் ஆன்மீக ஒருபமைப்பாட்டை அடையும் வழி யாவர்க்கும் திறந்துளது எனினும் நாம் ஒவ்வொரு வரும் அவ்வழிச் சென்று பயனடையலாம் எனினும் ஒரு

---

1. "When the soul is said to be passive, the passivity is not a state of inactivity or lassitude. The will is not in abeyance, nor the various faculties inert. All the faculties are directed to one centre, so that there is a narrowing of the field of consciousness through the intense concentration of the will to one focul point." The Philosophic Basis of Mysticism.

— T. H. Hughes P. 50.

2. "Mysticism says Bastide, does not mean dissociation; it is the creation of a new ego."

— Mysticism in Religion P. 35.

சிலருக்கே அது முடிதாக உளது. போலியாகப் பூசையில் ஈடுபட்டு ஆடம்பரமான பூசை புரிவோரும், தமக்கு பக்தி உளது என நினைப்போரும் பிறரை நினைக்குமாறு செய்வோரும், மேலைநாட்டில் மருந்துகள் மூலம் ஒருமைப்பாட்டை அடைய முயலும் 'ஹிப்பிகளும்' ஒரே இயல்புடையவர்களே.

**இந்நாட்டுத் தத்துவவாதிகள் :**

தத்துவவாதியின் கருவி அறிவாகும். அதைக்கொண்டு யாவற்றையும் ஆராய்ந்து அவற்றின் இயல்புகளை உள்ளவாறு காண்பது அவனுடைய நோக்கமாகும். இனிச் சோதனை முலமே எதனையும் ஆய்ந்து காணவேண்டும் என்ற கொள்கையின் மறுதலையான கொள்கையுடைய தத்துவவாதிகளும் உளர். இந்நாட்டில் தோன்றிய ஆதி சங்கரர், தாயுமானார், மெய்கண்டார், கௌதம புத்தர் போன்றவர்களும் மேனாட்டில் தோன்றிய ஸ்பினோஸா (spinoza) போன்றவர்களும் இத்தொகுப்பில் அடங்குவர். இவர்கள் அறிவின் துணைகொண்டு பொருளை ஆராய்ந்து அவற்றின் இயல்புவழி இவற்றைப் பிரித்து இறுதியில் கடவுட் பொருள் பற்றியும் ஆய்வர். கடவுள் பற்றிய ஆராய்ச்சியில் இறங்காத ஒரு தத்துவவாதி கௌதம புத்தர்ஒருவரேயாவார். ஏனையோர்அனைவரும் பக்தி மார்க்கத்தை மேற்கொள்ளாமல் ஆராய்ச்சி செய்வதன் மூலம் நித்தியப் பொருளை அறிந்து நிரூபிக்க முயன்றனர், 'ஓம் தத் ஸத்' என்பதை நிரூபிக்க முயன்ற சங்கரரும், பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன்' (கருணகர—6) என்று பாடிய தாயுமானாரும் 'அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலர்ந்துள தாம்' (சிவ. போ. 1) என்பதன் மூலம் மூலப்பொருள் உண்மையை நாட்ட முயன்ற மெய்கண்டாரும் தத்துவவாதிகளே.

**பக்தர்களின் கருவி கரணங்கள்:**

இவர்களின் எதிராக அறிவின் துணையை நாட முடியாதவர்களும், எளிய மக்களும் மேற்கொள்ள முயன்றது பக்தி வழியேயாகும். 'அறிவினால் ஆயமுடியா ததைப் பிரார்த்தனை என்பதன் மூலம் காணமுயல்வதே பக்தி வழியாகும். பிரார்த்தனை ஒன்றே பக்தி வழியின் நுழை வாயிலாய் இருந்தும், அது யாவர்க்கும் எளிதிற் கிட்டக்கூடிய வழியாக இருந்தும் ஒரு சிலரே இதனை முயலத் தலைப்படுகின்றனர்.'[1]

**பக்தர்கள்:**

பக்தி வழியில் செல்லும் அடியார்களும் நம்மைப் போலவே உண்டு, உடுத்திப் பேசி வாழ்கின்றவர்களே யாவர். அவ்வாறானால் நமக்கும் அவர்கட்கும் வேறுபாடு யாதாய் இருக்கும் என்ற வினா நியாயமானதே. 'சேய் போல்' இருக்கும் இந்த ஞானிகளை அறிவதுதான் எவ்வாறு? நம்மைப்போன்ற உடம்புடைய இவர்களின் பொறி புலன்கள் நம்முடையவை போன்று தொழிற் படுமா? படாவா? நம்மைப் போன்று உடம்பு கொண் டிருப்பினும் இவர்களுடைய கருவி, கரணங்கள் 'பசு கரணங்களல்ல; பதி கரணங்களே' என்று நம்மவர் கூறினர். இதனை ஏற்றுக்கொள்ள மறுப்பவர்கட்கு இயேசுநாதர் பற்றி 'மிடில்டன் மர்ரே' என்ற அறிஞர் கூறிய சொற்களை நினையூட்ட வேண்டும், மிடில்டன்

---

1. Mysticism finds working expression not in intellectual speculation but in prayer. Prayer is the mystical act, and prayer is not the privilege of the few. The tragedy is that so few use it."

— Mysticism in Religion P. 36.

மர்ரே இயேசு பக்தி வழிச் சென்றவரா என்ற வினாவை ஆயத்தொடங்கி ஆம் என்ற முடிவுக்கு வந்தவுடன் முற்றிலும் பக்திவழிப்பட்டவராகிய நாசரத் வாசியாகிய இயேசுவுக்கு இருந்த கருவி கரணங்கள் மானிடர்க்குரிய கருவி கரணங்கள் அல்ல என்றும் புதிய கருவி கரணங்கள் என்றும் கூறினார்.''[2]

மனிதருக்குரிய கருவி கரணங்களைப் பெற்றிருந்தும் இறைவன் அருளைப் பூரணமாகப் பெற்ற இந்தப் பக்தர் களின் கருவி கரணங்கள் இறைத்தன்மை பெற்றுவிடு கின்றன. அதனையே மிடில்டன் மர்ரே 'புதிய கருவி கரணங்கள்' எனப் பேசுகிறார். இப்புதிய கருவி கரணங் களைப் பெற்ற பெரியோர்கள் செய்யுஞ் செயல்கள் அவர் களுடையவை அல்ல. அவர்கள் எது செய்யினும் அவை இறைவன் செயல்களே என இந் நாட்டார் கூறினர். தருக்க முறைப்படி காணினும் பதி கரணங்களைப் பெற்ற வர்கள் செய்யுஞ் செயல்கள் பதியின் செயல்களேயாம் அல்லவா? இக்கருத்தை மணிவாசகப் பெருமான் மிக விளக்கமாக ''சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனை யாண்ட அத்தன்'' (அச்சோ 1) எனவும் 'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்' (தோாணாக்-7) எனவும் கூறுகிறார்.

பக்தி வழியில் ஈடுபடுவோர் இறைவனை எங்கோ, வாக்கு மனோலயங் கடந்த ஒரு பொருளாக, கற்பனை கடந்த சோதியாகக் கருவதும் இல்லை; அவ்வாறு உணர்

---

2. Middleton Murry discusses the question whether He was a Mystic, and concludes that "in a great and complete mystic like Jesus of Nazarath the human organism actually becomes a new kind of organism."

— Ibid P. 39.

வதும் இல்லை. அவர்களைப் பொறுத்தமட்டில், இறைப் பொருள் அவர்கள் உள்ளேயே உறையும் ஒன்றாய், அவர்களுடன் எந்த நேரத்திலும் தொடர்பு கொண்டதாய், எவ்விடத்திலும் காண்டற் குரியதாய், அனுபவிப்பதற் குரியதாய் இருக்கின்றதை அறிகிறோம்.

''கண்ணால் யானுங் கண்டேன் காண்க''

—திருவா. அண்டப். 58

''எளிவந்திருந்து இரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் உள்ளத்தி னுள்ளே ஒளிதிகழ''

—அம்மா 81

என்பன போன்ற திருவாசக அடிகள் இக் கருத்தை வலியுறுத்தல் காணலாம். இவ்வாறு அப்பொருளுடன் நேரடித் தொடர்பு கொள்ளவில்லையாயின் இவர்கள் சொற்கள் பொருளற்ற வெற்றுரைகளாக அல்லவோ முடியும்? திருஞானசம்பந்தர், சுந்தரர் போன்றோர் தம் பாடல்களைப் படிப்பவர் இன்ன பயனை அடைவர் என்று கூறுவது எவ்வாறு பொருத்தமுடையதாகிறது?

''ஆனசொல் மாலையோதும் அடியார்கள் வானில்
அரசாள்வர்! ஆணை நமதே!''

-2-85-11

''அந்த உலகு எய்தி அரசாளுமதுவே சரதம்
ஆணை நமதே!''

-3-78-11

என்பன போன்ற சொற்களால் ஞானசம்பந்தர் கூறுவதோடல்லாமல் தம் சொற்கள் இறைவனுடைய சொற்களே என்னும் பொருளில், இறைவனில் உறைபவர்,

''மலையினார் பருப்பதந் துருத்தி மாற்பேறு
மாசிலாச்சீர் மறைக்காடு நெய்த்தானம்

நிலையினான் எனதுஉரை தனது உரையாக நீறணிந்து
ஏறு உகந்து எறிய நிமலன்''

-1-76-1.

என்றுங் கூறியுள்ளமை இவர்கள் காரணங்கள் பதிகரணங்களே என்ற கூற்றை வலியுறுத்துகின்றன. இறைவன் தம்முட் புகுந்து தம்மை முழுதுமாகவே ஆட்கொண்டு விட்டான் என்பதை இப்பெரியோர் கூறுவது அறிதற்பாலது.

''தான் ஒட்டி வந்து, என்தனி நெஞ்சை வஞ்சித்து
ஊன் ஒட்டி நின்று, என் உயிரில் கலந்து, இயல்
வான் ஒட்டுமோ?......... .........''

—திருவாய், 1-7-7.

என்றும்,

''கமலக்கண்ணன், என் கண்களில் உள்ளான்
காண்பன் அவன் கண்களாலே;
அமலங்கள் ஆக விழிக்கும்; ஐம்புலனும் அவன்''

—திருவாய், 1-9-9.

''........... ........... என்னால் தன்னை
இன்தமிழ் பாடிய ஈசனை ...........''

திருவாய். 7-9-1.

என்றும் நம்மாழ்வார் பாடியுள்ளமையை நோக்கினால் இப்பெருமக்களுடைய கருவி கரணங்கள் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற பிறகு, பதி கரணங்களாகவே ஆகி விட்டன என்பதை வலியுறுத்தும். ஈற்றில் உள்ள மேற்கோளில் 'என்னால் தன்னை இன்தமிழ் பாடிய' என்பதில் தன்வினைச் சொல்லாகிய 'பாடிய' என்ற சொல்லைக் கவனிக்க வேண்டும். 'என்னால் பாடுவித்த' என்று பிற வினைச் சொல்லைக் கூடப் பயன்படுத்தாமல் 'பாடிய' என்றே கூறிவிட்டமையின் இது முன் சொன்னவற்றை நன்கு வலியுறுத்தல் காணலாம்.

பக்திவழிச் செல்லும் பெரியோர்கள் இறைவனுடன் தொடர்பு கொண்டே வாழ்ந்தனர் என்பதை மேலை நாட்டாரும் ஒப்புக் கொண்டுள்ளனர். கோகுல் (Goguel) என்ற பெரியார் தாம் எழுதிய 'ஏசுவின் வாழ்க்கை' (Life of Jesus) என்ற நூலில் பின்வருமாறு எழுதுகிறார்.

> ''இயேசுவின் வாழக்கையில் யாண்டுங் காணப் பெறாத தனித்துவம் யாதெனில் இறைவனுடைய சந்நிதானத்திலேயே தாம் எப்போதும் இருப்பதாக அவர் உணர்ந்ததேயாம் வாழ்வு முழுதும், பொறி புலன்களோடு கூடிய தற்போதத்தில் அவர் இறைவனோடு விடாமல் தொடர்பு கொண்டிருந்தார். இயேசுவைப் பொறுத்தமட்டில் இறைவன் ஏதோ ஒரு நுண்மையான கருத்துப் பொருளாக மட்டும் இல்லை; வாழ்வில் எந்நேரமும் ஊடாடுகின்ற ஓர் உள்பொருளாகவே இருக்கிறான். இறைவன் அவருடைய மனத்திலோ, கற்பனையிலோ, கனவிலோ தோன்றுபவனாக இல்லாமல், அவரால் அனுபவித்து உணர்ந்து, அறியப்படும் பொருளாகவே உள்ளான்.''[1]

---

1. Goguel in his Life of Jesus states. "The unique originality of Jesus consists in His sense of the presence of God, in that conscious and living communion with God in which He lives. To Him God is no abstract idea, but an immediate and living reality; God in Him, not a God conceived with the mind, or imagined or dreamed, but a a God who is experienced, felt, known."

— Mysticism in Religion P. 40.

இம் மேற்கோளை எடுத்துக்காட்டி விட்டு 'டீன் இன்ஞ்' (W. R. Inje) தம்முடைய 'சமயத்தில் பக்தி' என்ற நூலில் "இயேசு அறிவுறுத்தல் பணியை மேற்கொள்ளும் பொழுது ஏனைய ஆசிரியர்களைப் போல் அல்லாமல் எல்லையற்ற அதிகாரம் பெற்ற ஒருவர் போலவே அறிவுறுத்தினார். அவருடைய அதிகாரம் அவருடையதன்று. இறுதியான அதிகாரமாகிய அது இறைவனுடைய அதிகாரமேயாகும்"[2] என்றார். 'இன்ஞ்' கூறிய இக்கூற்றுடன் ஞானசம்பந்தர் 'ஆணை நமதே' என்று கூறும் கூற்றையும் ஒப்பிட்டால் இது எவ்வளவு உண்மையானது என்பதை அறிய முடியும்.

**பக்தன் முக்காலமும் உணர்தல் :**

அடியார்கள் என்றும் பக்தர்கள் என்றும் கூறப்பெறும் இவர்கள் தத்துவவாதிகளால் சாதிக்க முடியாத ஒன்றையும் சாதிக்கக் கூடியவர்கள். அதுவே. எதிர் காலத்தை அறிதல் என்பதாகும். தத்துவவாதி அறிவின் துணை கொண்டு ஆய்பவனாதலின் எதிர்காலம் தன் அறிவுக்கு அப்பாற்பட்டது என்பதை அறிகிறான். தன்னுடைய அறிவின் பயனாகக் கிடைத்த தருக்க முறையில், சுருதி, யுக்தி, அனுமானம் என்ற மூன்றையுங் கொண்டு எதிர் காலத்தை 'இவ்வாறு இருக்கும்' என்று கணிப்பதுடன் தத்துவவாதி நின்று விடுகிறான். உள்ளுணர்வு. தெய்வீக ஆற்றல் முதலியவற்றின் உதவியால் எதிரது நோக்கும் ஆற்றலைத் தத்துவவாதி பெறாததன் காரணம் உள்ளுணர்வு, தெய்வீக ஆற்றல் என்ற இரண்டையுமே அவன் ஏற்றுக் கொள்வதில்லை என்பதுதான்.

---

2. "He taught as one having authority, and not as scribes. His authority was supreme and ultimate authority, the Holy Sprit of God Himself."

— Ibid P. 40.

இதன் எதிராக, பக்தன் தெய்வீக ஆற்றலையும், அதன் பயனாக விளைகின்ற உள்ளுணர்வையும் பெரிதும் நம்பி வாழ்கின்றவன். இவ்வாற்றல், உள்ளுணர்வு என்பவற்றின் துணைகொண்டு எதிர்காலம், நிகழ்ச்சி என்பவற்றை அறிகிறான் பக்தன். அதேபோல் அவன் காலத்திற்குப் பன்னூறு ஆண்டுகளின் முன்னர் நடந்தவற்றையும் அவனால் கண்டு உணரமுடிகின்றது. இதன் காரணம் யாது? தத்துவவாதி துணைக்கொள்ளும் அறிவானது, காலம் என்பதனை அறிந்து அதற்குட்பட்டு நடப்பதாகும் பக்தனின் உள்ளுணர்வு தெய்வீக ஆற்றலையே துணையாகக் கொண்டது. தெய்வம் காலங்கடந்த ஒன்று ஆகலின் பக்தனுக்கு முக்காலமும் (இறப்பு, நிகழ்வு, எதிர்வு) இல்லையாய் விடுகிறது.

இது பற்றிக் கூறவந்த 'இன்கு' தெய்வீக ஆற்றலால் பக்தர்கட்குத் தோன்றும் உள்ளுணர்வு பற்றிப் பிளேட்டோவும் அறிந்திருந்தார் என்று கூறுகிறார். "பக்தி அனுபவத்தில் உள்ளுணர்வு மூலம் திடீரென்று ஒரு காட்சியைப் பெறுதல் சாதாரணமாக நடக்கக் கூடியதே. பிளேட்டோவின் ஐயத்திற்கிடமற்ற ஏழாவது கடிதத்தில் தெய்வீக ஆற்றல் மூலம் அகமனத்தில் பளிச்சிடும் சிலவற்றை 'பொள்ளெனத் தோன்றும் ஒளி' என்று கூறுகிறார்."[1]

இக் கூற்று எத்தனைத் தூரம் உண்மையானது என்பதை விளங்கிக் கொள்ள ஓர் உதாரணத்தைக் காணலாம். திருநாவுக்கரசர் அப்பூதியடிகள் வீட்டில்

---

1. "The apparent suddenness of the mystical revelation is quite normal; Plato in his undoubtedly genuine Seventh Letter speaks of the "leaping spark" by which divine inspiration flashes on the mind."

— Mysticism in Religion P. 43

விருந்துண்ண ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. அப்பூதியின் மூத்த மகன் அந்த நேரத்தில் பாம்பு கடித்து இறந்துவிடுகிறான். அதனை மறைத்து அப்பூதியார் நாவரசருக்கு விருந்திட முயல்கிறார். நாவரசர் பூசை முடித்து அனைவருக்கும் திருநீறு வழங்கும் நேரம். ஒவ்வொருவராகத் திருநீறு வாங்கிக் கொள்கின்றனர். மூத்த மகனைக் காணாமையின் 'இவர்க்கு மூத்த சேயையுங் காட்டும்' (அப். புரா. 32) என்று கேட்கிறார் வாக்கின் வேந்தர். இக்கட்டான இந் நிலையைச் சமாளிப்பதற்காக அப்பூதியார் பெய்யும் அல்லாத மெய்யும் அல்லாத முறையில் 'இப்போது இங்கு அவன் உதவான்' (அப்பூதி-32) என்கிறார். இந்நிலையில் நாவரசர் மனத்தில் ஓர் உண்மை பளிச்சிடுகிறது. அது இறைவன் அருளாலேயே பளிச்சிடுகிறது என்கிறார் சேக்கிழார்.

'அவ்வுரை கேட்டபோதே **அங்கணர் அருளால் அன்பர்**
**செவ்விய திருவுள்ளத்து ஓர் தடுமாற்றம் சேர நோக்கி**
''இவ்வுரை பொறாது என்உள்ளம் என்செய்தான்
இவற்கொன்று உண்டால்
மெய்விரித் துரையும்'' என்ன விளம்புவார் விதிப்புற்று
அஞ்சி' — அப்பூதி 33

இரண்டாம் அடியில் நாவரசர் உள்ளத்தில் ஒரு தடுமாற்றம் தோன்றிற்று என்றும் அதுதானும் இறையருளால் தோன்றிற்று என்றும் சேக்கிழார் கூறுவதுதான் முன்னர் பிளேட்டோவால் குறிக்கப்பெற்ற 'பொள்ளெனத் தோன்றும் ஒளி' (leaping spark) என்று அறியலாம்.

**துன்ப அனுபவங்கள் :**

பக்தர்கள் அனைவர் வாழ்க்கையிலும் அவர்கள் பட்ட துன்பம் அல்லது அல்லல் முக்கியமான இடத்தைப்

பெறுதல் காணலாம். ஒரு சிலருடைய வாழ்க்கையில் இத் துன்பம் அவர்கள் முழுத்தன்மையடையப் பயன்பட்டிருக்கலாம். எவ்விதக் குற்றமும் இல்லாத அடியார்கள் சிலரும் துன்புற்றிருக்கின்றனர். இத்தகையவர்கள் பட்ட துன்பம் பிறர் பொருட்ட ரகப்பட்டதாகும். பிறர் பொருட்டாகத் துன்பத்தை ஏற்றல் ஒருவிதத் தெய்வீக ஆணையாகும். அதனால்துன்புற்றவர்கட்கு எவ்வித ஊறும்விளைவதில்லை. நாவரசர் சூலைநோய் பெற்றது அவர் திருந்துவதற்குக் காரணமாயிற்று. ஆனால் பின்னர் நீற்றறையில் இடப்பட்டதும்.யானையால்இடறப்பட்டதும். கல்லுடன் கட்டிக் கடலில் எறியப்பட்டதும் உண்மையில் அவருக்குத் துன்பம் விளைக்கவே இல்லை. ஆனால் இவை இறையருளால் பிறர் திருந்த அவருக்கு அளிக்கப்பட்டவையாகும். இத்துணைத் துன்பந் தந்தவர்களையும் நாவரசர் ஒரு கடிய சொல்கூடக் கூறி ஏசவில்லை. நஞ்சை ஊட்டினவர்களை அமணர் (unconventional people) என்று மட்டுமே கூறுகிறார். 'வஞ்சனைப் பாற்சோறாக்கி வழக்கிலா அமணர் தந்த நஞ்சு அமுதாக்கு வித்தார் நனிபள்ளி அடிகளாரே' (4-70-5) என்று மட்டுமே கூறுகிறார்.[1]

---

1. For what is physical death? The globe itself shall fade away like an unsubstantial pageant, but Thou, O Lord, art the same and Thy years shall not fail. Even Christ was made perfect through suffering; He was without sin, but His life had a purpose through which it may be said to be perfected. And His redeeming death is not only something that He suffered; it is something we must do. To suffer for others is a divine prerogative; it is the glory and offence of the cross.

— Mysticism in Religion - P. 47.

எனவே அடியார்கள், பக்தர்கள் எனப்படுவோர் இத்தகைய அல்லல்கட்குச் சிறிதும் அஞ்சுவதில்லை என்பது பெறப்படுகிறது. மணிவாசகர் போன்றவர்கள் பட்ட அல்லலுக்கு எல்லையே இல்லை. ஆனால் அவர் அத்தகைய அல்லற்பட்டமையாலேயே 'திருவாசகம்' போன்ற ஓர் அனுபவ நூல் மனித சமுதாயத்திற்குக் கிடைத்தது. இவர்கள் எப் பிழையும் செய்யாவிடினும் இவர்களைத் துன்பம் சார்வது ஏன்? பிறர் பொருட்டாகத் துன்பத்தை ஏற்றலில் ஒரு சிறப்பு அமைந்துவிடுகிறது. தான் செய்த தவறுக்காகத் துன்பத்தை ஏற்க வேண்டிய மனிதன் எவ்வாறாயினும் அதனைக் கீழே தள்ளிவிடவே முனைகின்றான். ஆனால் மக்களுள் உயர்ந்து நின்ற மகாத்மாக்கள் துன்பத்தை இன்முகத்துடன் ஏற்று அனுபவிப்பதன் உட்கிடக்கை யாது?[1] பிறர் பொருட்டு அனுபவிக்கப் பெறும் துன்பம் அனுபவிப்பவர்கள் மனத்தில் உண்மையில் ஒரு தெம்பையும் ஊற்றத்தையுமே தருகிறது. எனவே அவர்கள் அதனை மகிழ்ச்சியுடன் ஏற்கின்றனர்.

ஒருவர் தாமே விரும்பித் தம் கண்களை இழக்க ஒருப்படுவதில்லை. ஆனால் தம்முடைய இரண்டு கண்ணையும் தம்மால் அன்பு செய்யப்பெறும் குடுமித் தேவருக்கு மனமுவந்தளிக்கிறார் கண்ணப்பர்.

**கட்டுக்குள் அடங்காத அனுபவம் :**

இத்தகைய பக்தர்கள், அன்பர்கள், அடியார்கள் என்பவர்களின் பக்தி அனுபவத்தைப்பற்றி ஆராயும் பொழுது இரண்டு குற்றங்கள் வாராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். முதலாவது இவர்களை ஒரு குறிப்பிட்ட சமயம் என்ற விலங்கினுள் அகப்படுத்தல் கூடாது. இரண்டாவது நடைமுறையில் வழங்கும் சமயங்களுள் (Established religious denominations) ஏதாவது ஒன்றின் அடிப்படையை மட்டும் மனத்துட்கொண்டு இவர்கள் செயல்களை ஆராய்தல் கூடாது.

**கூட்டினுள் அடங்காதவர்கள் :**

இப் பெரியார்கள் இவ்வுலகின் எல்லாப் பகுதிகளிலும் எல்லாக் காலங்களிலும் தோன்றினர்; தோன்றுகின்றனர்; தோன்றுவர். கால, தேச, வர்த்தமானங்களைக் கடந்து நிற்பதுதான் இவர்களின் சிறப்பாகும். இவர்கள் தம் கருத்துக்களைப் பரப்பும்பொழுது ஏதாவது ஒரு சமய நெறியில் நின்றே பரப்புவர். அச் சமயத்தார் கூறும் இறைப்பெயர்களையே இவர்களும் கூறுவர். இறைவனுக்கு ஒரு குறிப்பிட்ட பெயரை இவர்கள் கூறிவிட்ட ஒரே காரணத்திற்காக இவர்களை அந்தக் குறிப்பிட்ட சமயம் என்ற விலங்கினுள் மாட்டிவிட்டால் விளைவது அவலமேயாகும். உதாரணமாக சைவ சமயத்திற்குக் கூறப்பெறும் எவ்விதச் சடங்குகளும் இல்லாமலேயே திருநாவுக்கரசர் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மாறிவிட்டார். தம் திருமணத்திற்கு வந்திருந்த அனைவரையும் அவர்கள் பக்குவிகளா அபக்குவிகளா என்பதைக் கூடப் பாராமல் அனைவரையும் வீடு புகுமாறு செய்தார் திருஞானசம்பந்தப் பிள்ளையார். ஆதிசைவ குலத்தில் பிறந்த நம்பியாரூரர் பதியிலார் குலத்தவராகிய பரவையை மணந்தார். திருநீலகண்ட யாழ்ப்பாணராகிய அரிசனரைத் தம் உடன் வைத்துக்கொண்டார் பிள்ளையார்.

**சமயங்களின் இன்றைய நிலைமை:**

இவை அனைத்தும் இவர்கள் ஒரு சமயக் கூட்டினுள் அடங்காதவர்கள் என்பதையே அறிவுறுத்துகின்றன. அதேபோல வழங்கும் சமயங்கள் அனைத்தும் எந்தக் கொள்கையின் அடிப்படையில் தோன்றினவோ அந்தக் கொள்கையைக் காற்றில் பறக்க விட்டுவிட்டு வாணிக நிறுவனங்களாக மாறிவிட்டன. 'ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் பணக்காரன் வீடுபேற்றை

அடைய முடியாது' எனக் கூறிய இயேசு பெருமானின் சமயத்தைப் பரப்பும் நிறுவனம் உலகப் பணக்காரர்கள் ஒரு சிலருள் தானும் ஒன்றாய் விளங்குகிறது. 'ஏதுக் களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டு நின்றுளன் எங்கள் சோதியான்' (3-54-5) என்று ஞானசம்பந்தப் பிள்ளையார் கூறி இருப்பவும் அதனைப் பரப்புவதாகக் கூறிக்கொள்ளும் மடங்கள் பிறப்பால் சைவரா என்ற ஆராய்ச்சியிலும் சாத்திர நூல்களை அக்கு வேறு ஆணி வேறாக ஆராய் வதிலும் பொழுதைக் கழிக்கின்றன. 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் என்றும் படமாடுங் கோயில் பரமற்கு ஒன்று ஈயின் நடமாடுங்கோயில் நம்பர்க்கு அங்கு ஆகாது' என்றும் திருமூலர் கூறியிருப்பவும் சைவ மடங்கள் மக்கள் தொண்டு எதனையும் செய்யாமல் இருப்பது இற்றைநாள் உண்மை. 'வேதம் தமிழ் செய்தான் மாறன் சடகோபன்' என்று பெரியார்கள் கூறி யிருப்பவும் 'தெளியாத மறை நிலங்கள் தெளிந்தாமன்றே, என்று வேதாந்த தேசிகரே கூறியிருப்பவும் தென்கலை வடகலைச் சண்டை முற்றி பிரீவிக் கௌன்சிலில் வெள்ளைக்காரன் தரும் நீதியை ஏற்கும் அளவிற்கு வைணவ சமயம் போய்விட்டது. பௌத்த, சமண சமயங் களும் இதே கதியை அடைந்துவிட்டன.

**சமயப் பொறை தேவை :**

ஒரு காலத்தில் இந்த நாட்டில் சைவம், வைணவம், சமணம், பௌத்தம் என்பவை ஒன்றுடன் ஒன்று அன்புடன் வாழ்ந்தமையால்தான் ஒவ்வொரு சமயமும் மற்றைச் சமயத்திடம் காணப்பெற்ற சிறந்த கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள முடிந்தது. ஆனால் இன்று இச் சமயங்கள் அனைத்துமே அழுகிக் கொண்டிருக்கின்றன. இளஞ் சமுதாயம் இச் சமயங்களில் எவ்வித ஆறுதலையும் பெற முடியவில்லை யாகலின் இவற்றைப்பற்றிக் கவலைப்

படாமலே இருந்துவருகிறது. ஒருவர் தாம் மேற்கொள்ளும் சமயத்தைப்போல ஏனைய சமயங்களிலும் உண்மை நெறிகள் பேசப்பட்டுள்ளன என்பதையும், அவற்றைப் பின்பற்றுபவர்களும் தம்மைப்போன்ற அன்பர்களே என்பதையும் உணர்ந்து கொள்வதில் தவறில்லை. அவரவர் மனநிலை பக்குவம் என்பவற்றிற்கேற்ப ஒவ்வொரு சமயமும் அவரவர்க்குப் பிடித்ததாக ஆகிறது. ஆனால் பௌத்தம் ஒன்று தவிர ஏனையவை பக்தியையும் பௌத்தமும் உட்பட எல்லாச் சமயங்களும் தியானத்தையும் ஏற்றுக் கொள்கின்றன.

**நரகம் சுவர்க்கம் :**

இனி நடைமுறைச் சமயங்கள் அனைத்தும் கூறும் ஒன்றைப்பற்றிப் பக்தன் கவலையுறுவதே இல்லை. தான் செய்யும் செயல்கட்கு ஏற்பப் புண்ணிய பாவங்கள் சித்திக்கும் என்பதுபற்றிச் சமயவாதி கவலையுறுவானே தவிர பக்தன் கவலைப்படுவதில்லை 'அண்ணாத்தல் செய்யாது அளறு' (255) என்று குறள்மூலம் வள்ளுவரும் 'தடுத்தாட்டித் தருமனார் தமர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான்' (7-90-1) என சுந்தரமூர்த்தி சுவாமிகளும் 'நல்குரவும்' செல்வமும், நரகும், சுவர்க்கமும் ஆய்' [திருவாய் 6-3-1] என நம்மாழ்வாரும் கூறிச் செல்வதால் இப் பெரியார்கள் நரகம் என்ற ஒன்றை ஏற்றுக் கொண்டனர் என்று நினைய வேண்டியுளது. சமயவாதிகள் கூறும் இதனை இவர்களும் ஏற்றுக் கொண்டனர் என்றே கூறலாம். செய்த தவறுக்குத் தண்டனை பெறுதலும் நலம் செய்தவழி உயர்ந்த உலகங்கட்கு செல்லுதலும் இயல்பு என்பதனை எல்லாச் சமயங்களும் ஏற்றுக் கொள்கின்றன.

**பிறவி வெறுப்பு இல்லை :**

அடியார்கள், பக்தர்கள் எனப்படுவோர் இவற்றை ஏற்றுக்கொண்டாலும் இவை பற்றிக் கவலைப்பட்ட

தாகவே தெரியவில்லை. இந்த உலகையும் பிறப்பையும் வெறுத்து வேண்டா என்று கூறுகின்ற எதிர் மறைத் தத்துவம் [Negative Philosophy] இவர்கள் மாட்டு இல்லை. இப் பிறப்பெடுத்தமையின் மக்களுக்குத் தொண்டு செய்யவும், இறைவனை வழிபடவும் வாய்ப்புக் கிடைத்தமையின் அதுவே இப் பிறவியை மேலும் விரும்புதற்குக் காரணமாயிற்று. 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' (4-81-4) என்று நாவரசரும், 'இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகமாளும் அச் சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே' (திருமாலை-2) என்று தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் கூறுதல் அறியத்தக்கன நரகம் முதலியவற்றை இவர்கள் கூறினும் அதன் மாட்டு அச்சம் கொண்டதாகக் கூறல் இயலாது.

**சாவிற்கும் அச்சம் இல்லை :**

இறப்பு என்பது பற்றியும் இவர்கள் கவலைப்பட்டதாகவோ அஞ்சியதாகவோ அறிய முடியவில்லை. திருக்குறளும் 'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' (339) என்று கூறுமுகத்தான் சாவின் மாட்டு அச்சம் தேவை இல்லை என்பதைக் குறித்துச் செல்கிறது. இறப்பின் பின்னே நிகழ்வதைப் பற்றிப் பல்வேறு கருத்து வேறுபாடுகள் உண்டு. இறந்த பின்னர் மறுபிறப்பு உண்டு என்பதையும், இறந்த உயிர் இப் பிறப்பிற் செய்த நல்வினை தீவினை என்பவற்றிற்கேற்ப ஓர் உடலைப் பெறும் என இந்நாட்டு பக்தர்கள் நம்பினர். மேலும் மானிடப் பிறவி பிறவிகளுள் உயர்ந்தது என்றும் அதனைப் பெறுதற்கு முன் ஓர் உயிர் பல்வேறு பிறப்புக்களையும் எடுத்துக் கூர்தல் முறையில் (evolution) இறுதியாக மானுடப் பிறப்பை எய்துகிறதென்றும் நம்பினர். மணிவாசகப்பெருமான்,

'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகி பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய் ... ... ... ...
செல்லா அநின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்'

—சிவபுரா. 26-31

என்று கூறுவது நோக்கற்குரியது. செய்யுளின் தேவை நோக்கிப் பிறப்பு முறை முன் பின்னாக அடுக்கப்பட்டிருப்பினும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை இங்குக் கூறப்பட்டிருப்பதை காணலாம்.

**மறுபிறப்பு :**

மேனாட்டாரிலும் பலர் இறப்பின் பின் மறுபிறப்புத் தொடரும் என்பதை நம்பினர். ஓரிகன், [Origen] என்ற பழைய தத்துவஞானியும் சமீபகாலத்தில் க்யார்டனோ [Giordano] புரூனோ [Bruno] வான் ஹெல்மோன்ட் [Ven Helmont] ஸ்வீடன்பர்க் [Swedenberg] காத்தே [Gothe] ஷோபனேர் [Schopenhaner] இப்சன் ]Ibsen] மெட்டர்லின்க் ]MaeterlinK] ராபர்ட் பிரௌனிங் [Robert Browning] என்போர் மறுபிறப்பை நம்பிய மேனாட்டாருள் சிலராவர். இவருள் தத்துவஞானிகள், கவிஞர்கள் முதலியோரும் உள்ளனர். பிளேட்டோ உட்பட பழைய கிரேக்கர்களும் மறுபிறப்பை நம்பியவர்களேயாவர்.

**சாவா உயிர்கள் :**

உயிரியல் விஞ்ஞானம் கண்டுள்ள சில கொள்கைகளும் மறுபிறப்பை நம்பச் செய்கின்றன. உயிரணுக்கள் (Germ-plasm) மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவையாகும். சிறு விலங்குயிர்கட்குக் கூட அவற்றின் முயற்சி இல்லாமலே

சில இயல்புகள் பிறப்பிலேயே தோன்றிவிடுகின்றன. முட்டையினுள் இருக்கும் பறவை குறித்த காலம் வந்தவுடன் முட்டையை அலகால் குத்தி வெளிப்படுவது ஏன்? கலைஞர்களும் கண்டு வியக்கின்ற முறையில் சிலந்திகள் கூடு கட்டக் கற்றது யாண்டு? ஒரு சில விலங்குகளைக் கண்டு ஒரு சில விலங்குகள் அஞ்சுவது ஏன்? இவ்வினாக்களை இற்றை நாள் மேனாட்டாரும் விஞ்ஞானிகளும் கேட்கத் தொடங்கிச் சங்கிலித் தொடர் போன்றது பிறவி என்ற முடிவுக்கு வர முயல்கின்றனர்.

நம் நாட்டைப் பொறுத்தவரைத் தத்துவஞானிகள், பக்தர்கள், ஆகிய இரு சாராரும் ஆன்ம யாத்திரையாகிய சங்கிலித் தொடரில் இறப்பும் பிறப்பும் ஒவ்வோர் கணுவே என்பதை அறிந்திருந்தனர். மேலும் இவ்வுடம்பின் உதவி இன்றியே ஆன்மா தனித்து இயங்க முடியும் என்பதையும், பூதங்களின் சேர்க்கையாகிய இவ்வுடம்பைப் போலவே சூக்குமசரீரம் முதலிய உண்டு என்றும் கருதினர். எனவேதான் இறப்புப் பற்றி இவர்கள் அஞ்சவில்லை. நீண்ட நெடும் பயணம் மேற்கொள்ளும் ஒருவன் இடையில் இளைப்பாறுதற்காக ஒரு சில நாட்கள் தங்கினால் மறுபடியும் புறப்படும்பொழுது இடத்தை விட்டுப் போகக் கவலைப் படுவதில்லை. அதுபோலவே இவர்களும் இறப்பைக் கண்டு அஞ்சுவதில்லை. ''யானேதும் பிறப்பு அஞ்சேன், இறப்பதனுக்கு என் கடவேன்'' [சதக-12] என்பது மணிவாசகர் வாக்கு.

## மரணமிலாப் பெருவாழ்வு :

இதனையடுத்து இந்நாட்டுப் பக்தர்களில் சிலர் மரணமிலாப் பெருவாழ்வு என்ற ஒன்றையும் கூறியுள்ளனர். மரணமிலாப் பெருவாழ்வு என்று இராமலிங்க வள்ளலார் கூறும்பொழுது இந்த உடம்பைப் பற்றியுங்கூடக் கருதுகிறாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது. மனித உடம்பு,

ஒன்று தன்னைப் போலவே மற்றொன்றை உற்பத்தி செய்து விட்டுத் தான்மடிவதனாலும், எப்படியும் உலகிடை மனிதர் உடம்புடன் இருந்து கொண்டே இருப்பர் என்பதனாலும் இதனை மரணமிலாப் பெருவாழ்வு என்று கூறினார்களோ என்றும் நினைக்கலாம். இன்றேல் யோக சாதனைகள் மூலம் இவ்வுடம்பை நெடுங்காலம் நிலை பெறுமாறு செய்யலாம் என்றுங்கூடக் கருதி இருக்கலாம். அல்லது இவ் வுடம்பைப் பற்றிக் கவலையுறாமல் ஆன்மா மூப்புச் சாக்காடு அற்றது என்ற கருத்திலுங் கூறி இருக்கலாம்.

மேலும் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை மிகப்பழைய சமயங்களாகிய சைவம், வைணவம் இரண்டுமே ஆன்மா பற்றியும், இறைவன் பற்றியும் இவ்வுலகம் பற்றியும் தெளிவான கருத்தைக் கொண்டிருந்தன. இம் மூன்றுமே என்றும் உள்பொருள்கள் என்றும் கூறின. இறைவனுடன் இரண்டறக் கலப்பது என்பதிற்கூட இவர்கள் மிகக் கவனத்துடன் இருந்தனர். அவனுடன் கலந்து ஒன்றாகி விட்டால் அனுபவம் என்ற ஒன்று இல்லையாய்விடும். எனவே இரண்டு என்று கூறும் நிலை அறும்படியாகக் கலந்தனர் என்றும், அந்நிலையிலும் இடையீடு இல்லாத ஆனந்தம் கிட்டும் என்றுங் கூறினர். இதில் ஒரு சிறப்பு என்னையெனில் மேனாட்டுப் பக்தர்களுள் ஒருவராகிய அர்ச். பால் [St. Paul] என்பாரும் ஆன்மாவின் மாற்றம் என்பது பற்றிக் கூற வருகையில் 'முழுதற் பொருளிடம் இணையும் ஆன்மா தன் தனித் தன்மையை இழப்பதோ முழுமுதற் பொருளால் கவர்ந்து கொள்ளப்படுவதோ இல்லை' என்கிறார். வீடுபேற்றிலும் ஆன்மா தனித் தன்மையை முற்றிலும் இழந்து விடுவதில்லை ப்ளூட்டடினஸ் என்ற பக்தர் கூறல் அறியத்தக்கது.[1]

---

1. The individual nature ot soul is not lost or absorbed in the Absolute. Plotinus is emphatic

இந்த அடிப்படையில் கண்டால் மரணமிலாப் பெரு வாழ்வு என்று நம் முன்னோர் கூறியதற்கும் மரணங்கடந்த நிலை(Immortality)என்று மேனாட்டுப்பக்தர்கள் (Mystics) கூறுவதற்கும் நாம் இன்று சாதாரணமாகக் கூறும் பொருளன்றி வேறு பொருளும் இருத்தல் கூடுமோ என்று நினைய வேண்டியுளது. கேவலம் காலத் தத்துவத்தை (Time) இவ்வுடலுடன் கடந்து நிற்கின்ற ஒன்றை மட்டுமே நாம் மரணத்தை வென்றிருப்பது என்று கூறு கிறோம். மேலே கூறப்பட்ட பக்தர்கள் காலத் தத்துவத் திற்குக்கூட நாம் தரும் பொருளைத் தராமல் இருப்பின் என் செய்வது? இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று பாகுபாடுகளால் நாம் காலத் தத்துவத்தை அறிகிறோம். நம் நாட்டிலேயே தோன்றிய புத்தர் போன்றவர்கள் நிகழ் காலம் (Present) என்ற ஒன்றை ஏற்க மறுத்துவிட்டனர்.

**காலத் தத்துவம் :**

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையும் காலம் பற்றிய கருத்து வேறுபாடுகள் இருந்தனவென்றே அறிகிறோம்.

" காலந் தாமே மூன்று என மொழிப"

என்றும்,

" இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடு கொள்ளும்
.................................."

-சொல்-வினை-2, 3.

---

that individuality, though not separate individuality, is preserved in the word "Yonder" and I am convinced that Spinoza believed the same.

—Mysticism in Religion P. 84.

என்றும் தொல்காப்பியனார் நூற்பா இயற்றினார். எனினும் 'இறப்பின் நிகழ்வின் எதிர்வின்' என்ற நூற்பாவிற்கு உரையிட்ட சேனாவரையர் 'இறப்பாவது தொழிலது கழிவு' ...தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சியாகலின், அஃதொரு கணம் நிற்பதல்லது இரண்டு கணம் நில்லாமையின் நிகழ்ச்சி என்பது ஒன்று அதற்கில்லை யாயினும் உண்டல், தின்னல் எனப் பல் தொழில் தொகுதியை ஒரு தொழிலாகக் கோடலின், உண்ணா நின்றான், வாரா நின்றான் என நிகழ்ச்சியும் உடைத்தாயிற்றென்பது (வினை. சூ.3 உரை) என்று கூறினார்.

வினை இயலின் முதற் சூத்திரமாகிய 'வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது, நினையுங்காலைக் காலமொடு தோன்றும்' (வினை-சூ.1) என்ற நூற்பாவிற்கு உரையிட்ட கல்லாடனார், ''நினையுங்காலை'' என்றதனான் காலம் தன்னை மூன்று என்பாரும், தொழிலாவது பொருளினது புடை பெயர்ச்சியாகலின், அஃது ஒரு கணம் நிற்பதல்லது இரண்டு கணம் நில்லாமையின் நிகழ்ச்சி என்பதொன்று இல்லையாதலின் இறப்பும் எதிர்வும் எனக்காலம் இரண்டே என்பாரும், நிகழ்காலம் என்ற ஒன்றுமே உண்டு என்பாரும் எனப் பலமதம் உண்டு என்பது அறிவிக்கப்பட்டது'' (சொல்-வினை-1 -கல்லாடனார் உரை)

## மரணம் என்றால் என்ன?

காலம் என்ற தத்துவத்தைப் பற்றியே இத்தகைய கருத்து வேறுபாடுகள் உண்டெனின் மரணமிலாப் பெரு வாழ்வு என்பதன் பொருளை இன்று நாம் கொள்ளும் முறையிலேயே பக்தர்களும், தத்துவாதிகளும், விஞ்ஞானிகளும் கொண்டனர் என்று கூறல் எவ்வாறு பொருந்தும்? மேலும் மரணம் என்பது தான் யாது? என்ற வினாவிற்கு

விஞ்ஞானம் பெரு வளர்ச்சி அடைந்துள்ள இற்றை நாளிற் கூட விடை காண்பது அரிதாக உள்ளது. உடற் சாவு (Physical death) மருத்துவர் அறிமுறைச் சாவு (clinical death) மனச்சாவு (mental death) எனப் பல வகைச் சாவுகள் பேசப்படுகின்றன. எனவே பக்தர்கள் கண்ட மரணமிலாப் பெருவாழ்வு பற்றி நாம் ஒன்றும் அறியவோ கூறவோ முடியாது என்ற உண்மையை ஏற்றுக் கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை.

**பொதுத்தன்மை :**

பக்தர்கள் அனைவரிடமும் காணப்பெற்ற ஒரு பொதுத் தன்மையை மறத்தல் கூடாது. ஏனைய தத்துவ வாதிகள், விஞ்ஞானிகள் ஆகியோரிடை பொதுத் தன்மை இருத்தல் வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. பல சமயங்களில் மிகமிக அடிப்படையானவற்றுட்கூட இவர்களுள் மாறுபாடு தோன்றலாம். ஆனால் காலம், தேசம், வர்த்தமானம் ஆகியவற்றால் பிரிக்கப்பட்டிருப் பினும், இந்தப் பக்தர்கள் வெவ்வேறு பெயர்களால் பரம் பொருளை அழைப்பினும் இவர்களிடையே இந்த ஒரு பொதுத் தன்மை மறக்க முடியாத ஒன்றாகும். இவர்கள் அனைவரும் மதிப்புடையன (values) என்று கருதியவை யாவை எனின் அன்பு, உண்மை [சத்தியம்]. அழகு என்பவையேயாம் இவற்றையே இயற்கையின் இயல்பு களாகவும் கண்டனர். இம்மதிப்பீடுகள் வேறு ஏதோ ஒரு குறிக்கோளின் [Ideals] அடையாளமாகக் [symbolic] கருதப்படவில்லை. இவையே உள்பொருளாகக் [reality] கருதப்பெற்றன.

**செற்றம் நீங்கியவர் :**

மதிப்புடைப் பொருள்களாகிய இம் மூன்றையும் பக்தர்கள் அழியாப் பொருள்கள் என்று கருதினார்கள்.

அன்பு அல்லது அருள் என்பதை இந்நாட்டு பக்தர்களும் பிறநாட்டுப் பக்தர்களும் பெரிதும் போற்றினர். யாவரிடத்தும், எல்லாப் பொருள்களிடத்தும் அன்பு செய்வதே தம் கடப்பாடு என்பதை உணர்ந்தனர் இவ்வாறு அன்பு செய்வதைத் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவுடன் காழ்ப்புணர்ச்சி (malice] என்பது அவர்களிடம் இல்லாமற் போயிற்று. அதன் பயனாக வேண்டியவர், வேண்டாதவர் என்ற வேறுபாடு நீங்கினதுடன் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற எண்ணமும் மெல்ல மெல்ல மறையலாயிற்று.

மிகப் பழைய புறநானூறு 'பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' [192] என்று கூறியது வெறும் வெற்றுரையன்று; பொருளுரையே என்பது நன்கு பெறப்பட்டது. மனிதன் அன்பை வளர்த்துக் கொண்டு செல்லவேண்டும். அது தொடர்புடையார் மாட்டே முதலில் தொடங்குகிறது; நாளாவட்டத்தில் தொடர்பிலாதார் மாட்டும் பரவுகிறது. அப்பொழுது அதே அன்பு 'அருள்' எனும் புதிய பெயரைப் பெறுகிறது. 'அருள் என்னும் அன்பு ஈன்குழவி' (757) என வள்ளுவர் அருள் பிறக்கும் வழியைக் குறித்து விட்டார். இறைவன் உயிர்களிடம் காட்டும் அன்பைக்கூட கருணை என்ற வடசொல்லால் குறிப்பதுடன் 'இறையருள்' என்றே இத்தமிழர் குறித்தனர்.

**அருள் தோன்றும் நெறி :**

பக்தர்கள் பிற உயிர்களிடம் அன்புடையவர்களாக இருக்கும்பொழுது அந்த அன்பை வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடற்றுக் காட்டுகின்றனர் என்று முன்னர்க் குறிக்கப் பெற்றது. இவ்வாறு அவர்களால் அன்பு செய்யப்படுபவர் உயர்திணையோராகிய மக்கள் மட்டுமே எனக் கருத வேண்டா. அஃறிணைப் பொரு

ளாகிய விலங்குகளும், பயிர்களும்கூட இதற்கு விதிவிலக் கல்ல. பிற உயிர்கள் துன்புற்றால் அதனை நீக்கவேண்டும் என்ற எண்ணம் தம்மாட்டு இருப்பதை பக்தர்களுள் ஒருவராகிய இராமலிங்க வள்ளலார் இதோ கூறுகிறார்.

''எவ்வுயிர்த் திரளும் என்னுயிர் எனவே
எண்ணிநல் இன்புறச் செயவும்
அவ்வுயிர்களுக்கு வரும்இடை யூற்றை
அகற்றியே அச்சம் நீக்கிடவும்
......... இச்சைதான் எந்தாய்''

—பிள்ளைச்சிறு. 18

''மண்ணுலக திலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒருசிறி தெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கண்மும் நான் சகித்திட மாட்டேன்''

— பிள்ளைச்சிறு. 2

''எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர்?'

*   *   *

''அப்பா! நான் வேண்டுதல் கேட்டு அருள்புரிதல்
வேண்டுப்
ஆருயிர்கட்கு எல்லாம், நான் அன்புசெயல்
வேண்டும்'

*   *   *

''... ... ... உளம் வருந்திய பிறர்தம்
கண்ணினீர் விடக்கண்டு ஐயவோ நானும்
கண்ணினீர் விட்டுளம் கவன்றேன்''

*   *   *

''கானுறு பசுக்கள் கன்றுகள் ஆதி
கதறிய போதெலாம் பயந்தேன்''

* * *

''வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்''

— 57, 60, 62

**அருளாளர் செயல் :**

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார் மட்டும் இந்நிலையில் இருந்தார் என்று நினைய வேண்டா. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தரும் இதே மன நிலையில் இருந்தார் என்பதை அறிகிறோம். திருவீழி மிழலையில் ஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சேர்ந் திருந்த காலையில் அவ்வூரில் பஞ்சம் தாண்டவமாடியது. இறைவன் அடியார்களாகிய இவர்கள் மழை இன்மைக்குக் காரணம் பக்திக் குறைவே என்று கூறிவிட்டுப் போய் இருக்கலாம். ஆனால் அவர்கள் யாது செய்தனர்? மடம் ஒன்று வைத்து அவ்வூரிற் பஞ்சம் தீர்கின்றவரை எல்லா மக்களுக்கும் உணவு படைத்தனர். நெட்டுவசமான ஊராகலின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு மக்கள் வந்து உணவுண்டு மீள்வதாயின் அதன் பயன் முற்றிலுமாக விளையாது என்று கருதிய இவர்கள் தனித் தனியே வீதியின் இருஓரங்களிலும் மடம்அமைத்து உணவு ஊட்டினர். மேலும் தத்தம் மடங்களில் நேரா நேரத்திற்கு உணவு படைக்கப்படுகிறதா என்பதையும் பார்வை இட்டனர். திருஞானசம்பந்தர் மடத்தில் நேரங்கழித்து உணவு படைக்கப்பட்டமையின் அதன் காரணத்தை அறிய முற்படுகிறார் அச் 'சிறிய பெருந்தகையார்.' காரணத்தை அறிந்தவுடன் அதனைப் போக்கவேண்டும்

என்று முயன்று போக்கியும் விடுகின்றார். இலவசமாகச் சோறுபோடும் இவர்கள் உணவு நேரா நேரத்திற்குப் படைக்கப்படுகின்றதா என்று ஏன் கவலைப்பட வேண்டும்? அதுவே பக்தர்களின் அருள் உள்ளமாகும்.

ஐந்து அப்பத்தை நூற்றுக்கணககானவர்கட்குப் பங்கிட்டுத் தந்த இயேசு பெருமானும், வீழிமிழலையில் பஞ்சந் தீருகின்ற வரை உணவூட்டிய திருஞானசம்பந்தப் பெருமானும் நாவரசர் பெருமானும் பக்தர்கள் என்ற தொகுப்பினுள் அடங்குவர். மக்கள் துன்பத்தைப் போக்கு வதே மகேஸ்வரனுக்கு உகந்த பணியாகும் என்பதைக் கண்டு கடைபிடித்த பெருமையுடையவர்கள் இவர்கள். அறிவின் துணைகொண்டு இந்தப் பிரச்னையை அணுகி இருந்தால் இங்ஙனம் மடம் வைத்துச் சோறு போட் டிருக்க மாட்டார்கள் இவர்கள்? ஏன்?

பஞ்சம் வந்தது என்றால் அறிவின் துணைகொண்டு அதன் காரணத்தை ஆயத் தொடங்கினால் மழை இன்மை, மழை இருந்தும் பூச்சிகள் முதலியவற்றால் பயிர் அழிதல், இவை இரண்டும் இல்வழியும் மக்கள் சோம் பரின் விளைவு, இவை மூன்றும் இல்வழியும் நிலமுடையார் இல்லார்க்கு வழங்காமை இவ்வாறு பஞ்சத்திற்குரிய காரணங்களைப் பெருக்கிக் கொண்டே செல்லும் அறிவு. இங்ஙனம் பஞ்சத்திற்குரிய காரணத்தைப் பகுத்து ஆராய்ந்துகொண்டே சென்று இறுதியில் ஒருவாறு காரணத்தைக் கண்டு அதனைத் தடுப்பதற்குரிய வழிமுறை களையும் அதே அறிவு ஆராயத் தொடங்கி வழி துறை களையும் கண்டு பஞ்சம் நீங்கப் பாடுபடும். இம்முறை யிலும் பஞ்சம் தீர்க்கப்படலாமேனும் அதற்குள் பசியால் வருந்தி நிற்கும் நூற்றுக்கணக்கான மக்கள் பரலோகம் சேர்ந்துவிடுவர். எனவேதான் பக்தர்களாகிய இவர்கள் அறிவின் துணைகொண்டு காரணத்தை ஆய்வதை விட்டு விட்டு உடனடித் தேவை எதுவோ அதில் ஈடுபட்டனர். கையிலுள்ள அப்பத்தின் எண்ணிக்கையை குழுமியுள்ள

மக்கள் தொகையால் வகுத்து ஒவ்வொருவருக்கும் எவ்வளவு கிடைக்கும் எனப் பார்ப்பது அறிவு வாதியின் வேலை. இறைவன் திருவருளில் தளரா நம்பிக்கை கொண்டு அப்பத்தைப் பங்கிடத் தொடங்குவது பக்தனின் வேலை.

**யாருடைய பொறுப்பு?**

பக்தன் எல்லையற்ற நம்பிக்கையுடன் சோறு போடத் தொடங்கினாலோ அப்பத்தைப் பங்கிடத் தொடங்கினாலோ அது வளர்ந்துகொண்டே வரும். எவ்வாறு?இவர்கள் யாரிடம் நம்பிக்கை வைத்து இப்பணியைத் தொடங்கினர்? யாண்டும் நிறைந்துள்ள பரம்பொருளிடம் நம்பிக்கை வைத்துத்தானே இப்பணி தொடங்கப் பெற்றது! அவ்வாறானால் அது செவ்வையாக முடிய வேண்டிய பொறுப்பு யாரைச் சேர்ந்தது? இறைவனையே அன்றோ? எனவே இறைவன் அது முடியுமாறு பார்த்துக் கொள்கிறான்.

இதன் எதிராகத் தன் அறிவின் ஆற்றலை அறிந்து பணியில் புகுகின்றவன் தன்னையே நோக்கித் தொடங்குகின்றான். எனவே இம்மாதிரி நேரங்களில் இறைவன் இவன் பணியில் தலையிடுவதில்லை. பாதித் தன்னம்பிக்கையும் பாதி இறை நம்பிக்கையும் வைத்துத் தொடங்கினாலும் இறைவன் அதில் தலையிடுவதில்லை. திரௌபதி துகில் உரியப்படும்பொழுது தன் கைகளை நம்பிப் புடைவையைப் பிடித்துக் கொண்டிருக்கின்றவரை கண்ணன் அருள் கிட்டவில்லை தன்முயற்சி பயன்தாராது என்று கண்டு முற்றிலும் தன்னை இறைவனின் அடைக்கலமாகத் (absolute surrender) தந்து கைகள் இரண்டையும் தலைக்கு மேலே தூக்கியவுடன் கண்ணன் பொறுப்பு ஏற்படுகிறது. எனவே புடைவைகளை வளரவிடுகிறான். பக்தர்கள் முழுநம்பிக்கையுடன் எப்பணியையும்தொடங்குகின்றனர்.

**பணியே தவம்:**

இறைவனிடம் முழு நம்பிக்கை வைத்துத் தாம் செய்கின்ற எப்பணியும் அவனுடைய பணியே என்ற எண்ணத்துடன் செய்யும் பொழுது அதுவே தவமாகிறது. இவர்கள் இன்ன பணியைத்தான் மேற்கொள்ள வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. எதனைச் செய்யினும் அது தவமெனவேபடும். இதற்குரிய காரணம் என்னை? ஏனையோர் தாம் செய்கிறோம் என்ற தற்போதத்துடன் செய்தலின் அதன் பலாபலன்கள் அவர்கட்கே உரிமையாகின்றன. பக்தர்கள் சித்தம், மனம் என்ற இரண்டையும் இறைவன்மாட்டு வைத்திருத்தலின் அவர்கள் கருவி கரணங்கள் பதிகரணங்களாகவே ஆகிவிடுதலின் அவர்கள் செயல்கள் அனைத்தும் தவமாகவே ஆகிவிடுகின்றன. இதனையே மணிவாசகர் 'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்' (தோணோக்கம். 7) என்று கூறுகிறார். எனவே பக்தர்கள் மக்கள் தொண்டு செய்யினும் அது மகேஸ்வரன் தொண்டாகவே கருதப்பெற்றது.

**பக்தன் வேலை இதுவா?**

இந்நிலையில் ஓர் ஐயம் தோன்ற இடமுண்டு. பக்தர்கள் என்றும் அடியார்கள் என்றும் குறிக்கப்பெறும் இவர்கள் சாதாரண மக்கள் பிறர் பசிப்பிணியைப் போக்க முயல்வது போல் தாமும் முயலவேண்டுமா? என்று நினைக்கலாம். மக்களுக்கு நல்லுபதேசம் செய்வதுதான் இவர்களுடைய கடமை என்று நினைப்பவர்கள் பலர் உண்டு. ஆனால், வறுமையுற்று பசிப்பிணியால் வாடும் மக்களுக்கு இறைவன் ரொட்டித்துண்டு வடிவாகவே காட்சியளிக்கிறான் என்றார் விவேகானந்தர். எனவே இறைவன் பற்றி உபதேசம் செய்வதற்கு முன்னர் அவர்களுடைய பசியைப் போக்க வேண்டியதே பக்தர்களின் முதற்கடமை

யாகும். எனவேதான் பெரியபுராணத்திற் காணப்பெறும் நாயன்மார்கள் பலர் பசிப்பிணியைப் போக்க முயன்றதாகவே வரலாறு பேசுகிறது.

**யாருக்கு உதவினர்?**

பக்தர்களும் அடியார்களுமாகிய இவர்கள் பிறர் பசி போக்கினர் எனில் அப்பிறரை அடியவர் என்றும் மற்றையோர் என்றும் பிரித்துப் பார்த்தனரா? பெரிய புராணம் போன்ற நூல்களில் அடியார்களின் பசிப்பிணியைப் போக்கியதாகவே வரலாறு பேசுகிறது. வைணவ வரலாறுகளிலும் பாகவதர்கட்கு உபகாரம் செய்ததாகவேதான் பேசப்படுகிறது என்றால் இவர்கள் உபகாரம் செய்வதிலும் பிரித்து (discrimination) அறிந்து செய்தனரா என்பது ஒரு வினா. மக்கள் கூட்டத்தைத் தக்கவர், தகாதவர் என்று பிரிக்கும் அதிகாரம் பரம் பொருள் ஒருவருக்கே உண்டு. அவ்வாறு இருக்க இவர்கள் யார் பிரிவினை செய்ய? என்று கேட்கப்படலாம் இம்மாதிரி இடங்களில் இவர்கள் பயன்படுத்துஞ் சொற்களுக்கு என்ன பொருள் என்பதனை ஆராய்ந்து கொளல் வேண்டும். அடியவர்கள் என்றும் பாகவதர்கள் என்றும் இவர்களாற் குறிக்கப்படுபவர் சாதாரண மக்களேயாவர். காரணம் ஒன்றுண்டு. யாவரும் இறைவன் படைப்பு என இவர்கள் நினைப்பதால் காணப்படும் யாவரும் அடியார்களாகவே இவர்கட்குக் காட்சியளிக்கின்றனர். இளையான்குடி மாற நாயனார் புராணத்தில் சேக்கிழார் இதுபற்றி விளக்கமாகக் குறிப்பிடுகின்றார்.

இளையான்குடிமாறர் யாருக்கு உணவு அளித்தார் எனக் கூறவந்த சேக்கிழார்,

''ஆரம் என்பு புனைந்த ஐயர்தம் அன்பர் என்பதன் தன்மையால்,
நேரவந்தவர் யாவராயினும் நித்தமாகிய பத்திமுன்

கூரவந் தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று
செவிப்புலத்து
ஈரமென்மது ரப்ப தம்பரிவெய்த முன்னுரை செய்த
பின்'

''கொண்டு வந்து மனைபுகுந்து குலாவு பாதம்
விளக்கியே
மண்டு காதலின் ஆதனத்திடை வைத்து அருச்சனை
செய்தபின்
உண்டி நாலு விதத்தில் ஆறு சுவைத்திறத் தினில்....''

—இளையான் 3,4

என்று பாடுவது நோக்கற்குரியது. இப்பாடலுக்கு இவ்வாறு பொருள் கொள்ளாமல் இறையடியார் யாராக இருப்பினும் என்று பொருள் கொள்கின்றனர் அடியார் என்ற பிறகு யாராக இருப்பினும் என்பது பொருளற்றது. நேர வந்தவர் யாவராயினும் ஆரம் என்பு புனைந்த ஐயர் தம் அன்பர் என்பதன் தன்மையால் (இறையடியார் என்று கருதி] என்பதே கொண்டு கூட்டு 'நேர வந்தவர் **யாவராயினும்** அவரைக் கொணர்ந்து உபசரித்துச் சோறிட்டார் எனில் அடியவர்கள் மட்டுமே உபசரிக்கப் பட்டனர் என்பது யாங்ஙனம்?

**உண்மை அடியார் ஆராய்ச்சி இல்லை :**

இதனையடுத்து ஒன்றையுங் காண்டல் வேண்டும். அடியார்கட்குரிய கோலம் புனைந்திருந்ததாலே இவர்கள் அவர்களைப் போற்றினர். இக்கோலம் வெளிவேட மாயினும் அதுபற்றிக் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. தங்கள் வாழ்வில் திருநீறுங் கண்டிகையும் உயர்வானவை என்றும் கொண்டுவிட்ட பிறகு அவற்றை அணிந்தவர் யாவராயினும் அவர்களை அடியார் எனவே கருதினர் உண்மைப் பக்தர்கள்.

கலிக்கம்பர் என்பவர் இவ்வாறு தொண்டு செய்த அறுபத்து மூவருள் ஒருவராவர். ஒருநாள் இவரை நாடி ஒரு வேடதாரி வந்துற்றார். அவர் இவரிடம் முன்னர் ஏவலாளராய் இருந்து விட்டு விட்டுப் போன ஒருவர். இப்பொழுது அடியார் வேடம் தாங்கி வந்துள்ளார். அவர் யார் என்பது கலிக்கம்பருக்கு நன்கு தெரியும். எனினும் ஏனைய அடியார்களை உபசரிப்பது போலவே அவரையும் உபசரித்தார். தம் மனைவியார் தண்ணீர்விட, அடியாரின் கால்களைக் கலிக்கம்பர் கழுவினார். ஆனால் தண்ணீர் விடும் அம்மையார் அடியார் யார் என்று பார்ப்பதற்காக அண்ணாந்து பார்த்தார். உடனே 'கையால் அவர்தம் அடிபிடிக்கக் காதல் மனையார் "முன்பு ஏவல் செய்யாது அகன்ற தமர்போலும்" (கலிக் கம்பர்-7) என்று நினைந்தார். இந்நினைவு தோன்றிய வுடன் அவர் தண்ணீர் விடுவது தடைப்பட்டது. அடியார் கால்களைத் தாம் கழுவும்போது தண்ணீர் தடைப்பட்ட மையின் அதன் காரணத்தை அறிய வேண்டிக் கலிக்கம்பர் தண்ணீர் ஊற்றும் மனைவிமார் முகம் நோக்கினார்; ஒரு வினாடியில் மனைவியின் எண்ண ஓட்டங்களை அறிந்து கொண்டார். சிவவேடத்தைப்பற்றி மட்டும் கவனம் செலுத்தாமல் அதனை அணிந்தவர் யார் என்ற ஆராய்ச் சியில் ஈடுபட்ட மனைவியார் கைகளை வாளால் வெட்டி விட்டார் கலிக்கம்பர். இந்த வரலாறு ஒரு பேருண் மையை விளக்கி நிற்கிறது.

**நாதன் விரும்பு அடியார் :**

யாருக்குத் தொண்டு செய்கிறோம் என்ற வினாவை பக்தர்கள் எழுப்புவதே இல்லை, சிவனடியார்கட்கு மட்டும் சோறுபோட வேண்டும் என்று ஞானசம்பந்தரோ, நாவரசரோ நினைத்திருக்கவே முடியாது. அவ்வாறு நினைந்திருப்பின் திருவீழிமிழலையில் உள்ளார் அனை வருக்கும் உணவு அளித்திருக்க முடியாது. எல்லோரும்

வந்துண்ணலாம் என்று பிள்ளையார் அழைத்தார் என்று கூறவந்த சேக்கிழார், 'நாதர் விரும்பு அடியார்கள் நாளும் நாளும் நல்விருந்தாய் உண்ணுதற்கு வருக' (ஞான. புரா. 566) எனக் கூறினராம். இச் சொல்லில் உள்ள அழகை அறிதல் வேண்டும். நாதன் விரும்பு அடியார் என்றால் அதனை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும், மூன்றாம் வேற்றுமைத் தொகையாகவும் கொள்ளலாம். அதாவது 'நாதனை விரும்புகின்ற அடியார்' என்றும் 'நாதனால் விரும்பப்பட்ட அடியார்' என்றும் பொருள் கொள்ளலாம்.

முதல் முறைப்படி பார்த்தால் இறைவனை விரும்பும் அடியார் இவ்வுலகில் குறைவாகவே இருப்பர். இரண்டாவது முறையில் கொண்டால் 'நாதனால் விரும்பப் பட்ட அடியார்' என்று பொருளாகும்.

இறைவன் யாரைத்தான் விரும்பாமல் ஒதுக்குகிறான்? இறைவனே ஒதுக்க நினைந்தால் அந்த உயிர் இந்த உலகிடை வாழ முடியுமா? எனவே நாதனால் விரும்பப் பட்ட அடியார் என்று பொருள் கூறினால் உலகிடை வாழும் எல்லா உயிர்களும் என்றே பொருள் கொள்ள நேரிடும். அதாவது அந்த ஊரிலும், சுற்று வட்டாரத் திலும், ஏன்? உயிர்கள் எங்கிருந்தாலும் அவை அனைத் தும் இறைவனால் படைக்கப்பெற்று அவனால் அன்பு செய்யப்படுபவை ஆகலின் யார் வேண்டுமானாலும் வந்து உண்ணலாம் என்பதே இதன் பொருள். பழைய பாடல்கட்கும் பொருள் காணும்போது கவனமாக இருத்தல் வேண்டும்.

**வேறுபாடு இல்லை :**

பக்தர்கள் பிற உயிர்களிடம் எக்காரணத்தைக் கொண்டும் வேறுபாடு பாராட்டுவதில்லை. ஓதாதுணர்ந்த பெரியவரும், சிவஞானசம்பந்தர் ஆகியவரும் 'வேறாய்

ஊடன் ஆனான் இடம் வீழ்ம்ழலையே' என்று பெரிய தத்துவ ஞானத்தை அழகாகப் பாடலில் பாடியவரும், வேதங்கள் காணமுடியாமல் 'நேதி' (இது அன்று) என்ற சொல்லால் மட்டுமே குறிக்கக்கூடிய பரம்பொருளை 'இதோ' என்று சுட்டிக் காட்டிய பேரருளாளரும் ஆகிய திருஞானசம்பந்தர் உயிர்களிடம் எவ்வாறு வேற்றுமை பாராட்ட முடியும்?

**துயர் போக்குபவர்கள் :**

பசியால் வருந்துபவர்கள் துயரை மட்டும் இவர்கள் போக்க முயன்றனர் என்பதில்லை. பிறர்படும் துயரம் எதுவாயினும் அதனைப் போக்க முயல்வதே இவர்கள் கடமை. ஒருவேளை அத்துயரைப் போக்கமுடியாவிடின் அத்துயரைத் தாமும் ஏற்றுக்கொண்டு அனுபவிப்பார்களே தவிர விட்டுச் செல்வதில்லை. இவை இரண்டுக்குமே அடியார்கள் வரலாற்றில் எடுத்துக் காட்டுகள் உண்டு. திருஞானசம்பந்தர் திருமருகல் என்ற ஊரில் இருக்கும்போது நடுயாமத்தில் ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்கிறது. ஊர் என்றிருந்தால் அழுகுரல் கேட்பது இயல்புதான் என்று இருந்திருக்கலாம், அவ்வாறில்லாமல் அவள் ஏன் அழுகிறாள் என்பதை அறிந்து அதனைத் தீர்க்க விரும்புகிறார். ஆனால் அப்பெண்ணின் அழுகைக்குக் காரணமாயமைந்தது அவள் கணவன் விடம் தீண்டி இறந்துவிட்டமையாகும். இறந்துவிட்டான் என்று அறிந்திருந்தும் அவள் துயர் தீர்க்க வேண்டும் என்று விரும்புகிறார் இப்பக்தர். இறந்தவனின் அருகே சென்று இறைவனை நோக்கிப் பாடி அவன் உயிர் பெறச் செய்கின்றார்.

**தத்துவ ஞானியின் செயல் :**

பக்தர்கட்கும் தத்துவ வாதிகட்கும் இந்நிலையில் ஒரு வேறுபாடு இருத்தலைக் காண்டல் கூடும். இதேபோலத் தன் மகனை இழந்த ஒரு தாய் தத்துவ ஞானியாகிய புத்த

தேவரிடம் தன் மகனைப்பிழைக்கச் செய்ய வேண்டு கிறாள். ஒரே மகனைஇழந்த தாயின் துயரத்தைப் புத்த தேவர் அறியாதவரல்லர். துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்ற மாபெரும் உண்மைகள் நான்கையும் கூறிய புத்தர், கருணைக் கடலாகிய புத்தர் பிறர் துயரம், அதுவும் தாயின் துயரம் எத்தகையது என்பதை அறியாதவரா? அறிந்திருந்தும் தத்துவ ஞானியாகிய புத்தர் அவள் துயர் போக்க ஏனோ விரும்பவில்லை. அதன் எதிராக அவள் உலக இயல்பை அறிய வேண்டும், அறிந்து மனம் அமைதி யடைய வேண்டும் என்று கருதினார். இதில் தவறு ஒன்றும் இல்லை என்று வாதாட வேண்டிய தேவை இல்லை. இறப்பு என்பது உலகிடை இயற்கையானதுதான். எனவே அதற்கு வருந்துவது அஞ்ஞானத்தால் ஏற்படுவதுதான். இந்த அஞ்ஞானத்தைப் போக்கி அத்தாயைத் துணிவுடை யவளாக ஆக்க வேண்டுமென்று கருதினார் புத்ததேவர். இதற்காக அவர் அத்தாயை நோக்கி,

''தாயே நின் மனக்கவலை — ஒழிந்திடத்
 தக்க நல் மருந்தளிப்பேன்;
சேயினை எழுப்பிடுவேன்—விளையாடித்
 திரியவும் செய்திடுவேன்.
நாவிய கடுகுவேண்டும் — அதுவுமோர்
 நாவுரி தானும் வேண்டும்;
சாவினை அறியாத — வீட்டினில்
 தந்ததா யிருக்க வேண்டும்''

—ஆசியசோதி -9. 35.

என்று கூறினார். ஒருவரும் சாகாத வீட்டிலிருந்து ஒரு படி கடுகு கொண்டு வந்தால் பையனை எழுப்பித் தருகிறேன் என்று பேசுகிறார் இவ்வாறு கூறவேண்டிய தேவை என்ன? இறந்தவரை எழுப்பித் தரக்கூடிய ஆற்றல் புத்த தேவரிடம் இல்லையா? உண்டு. 'மாரனை வென்ற

வீரனும், தீநெறிக் கடும்பகை கடிந்தவனும், உரகர் துயரம் ஒழித்தவனுமாகிய புத்ததேவனால் இது முடியாதது தன்று. அப்படி இருக்க மகனை எழுப்பித் தாயின் துயரை ஏன் அகற்றக்கூடாது? தத்துவவாதி தருக்கமுறையில் எதனையும் காண்பான்.

தருக்கமுறையில் கண்டால் புத்தர் செய்ததில் தவறு ஒன்றும் இல்லை. ஒருவேளை இப்பொழுது அத்தாயின் மகனை எழுப்பிவிட்டாலும் பின்னர் என்றாவது ஒருநாள் இறக்கத்தானே வேண்டும்? எனவே அத்தாயை அத்தகைய ஒரு சூழ்நிலைக்குத் தயாராக்கல் வேண்டும். தத்துவ ஆராய்ச்சியில் துயரம், இன்பம் என்ற இரண்டுமே பொருளற்றவையாகும். சமதிருட்டியை அதாவது சுகம், துக்கம் இரண்டையும் ஒன்றாகக் காணும் இயல்பை, ஒவ்வொருவரும் பெறல்வேண்டும்.

சமதிருட்டியில் தலை நின்றவராகிய புத்ததேவர் கருணை நிறைந்தவர்தாம். என்றாலும் வாழ்க்கையின் உண்மைகளை அனைவரும் அறிய வேண்டும் என்ற கருத்துடைய தத்துவ ஞானியாவார் அவர். ஒருவேளை அக்குழந்தை இறந்துபடாமல் நோயால் அவதியுற்றிருப்பின் கௌதமர் எவ்வாறேனும் அதற்கு உதவ முன் வந்திருப்பார். ஆனால் நோயால் துன்புறுதல் வேறு; இறந்துபடுதல் வேறு. இறந்துபோதலை, நிர்வாணம் அடைதலை விரும்பத்தகாத ஒன்றாகவோ, தவிர்க்கப்பட வேண்டிய ஒன்றாகவோ கௌதமர் கருதவில்லையாதலால் அதனைத் தவிர்க்க முயலவில்லை.

**துயரில் பங்குகொள்ளல் :**

பக்தர்களின் நிலை இதற்கு முற்றிலும் வேறானது ஆகும். அவர்களைப் பொறுத்தமட்டில் சமதிருட்டியுடையவர்களே எனினும் பிறர் துயரம் கண்டவழி அவர்கள் அதனைப் போக்க முனையாமல் இருப்பதில்லை. ''அறிவினால் ஆகுவது உண்டோ? பிறிதின் நோய், தந்நோய்

போல் போற்றாக் கடை?'' (315) என்ற குறள், பக்தர்கள் வாழ்வில் முழுவதுமாக இடம் பெற்றுவிட்ட ஒன்றாகும். நம்மில் பலருங்கூட இக்குறளைக் கூறிக் கொண்டு பிறர் நோயை நமக்கு வந்ததுபோலப் பாவித்துக் கொண்டு பேசுகிறோம். இன்னுங் கூறப்போனால் பிறர் துயரத்தில் பங்கு கொள்வதாகவும் பேசிக் கொள்கிறோம். உண்மையில் பிறர் துயரத்தில் பங்கு கொள்வது என்றால் என்ன? வாயினால் அவர்கட்கு நம் வருத்தத்தை, அனுதாபத்தைத் தெரிவிப்பது பங்கு கொள்வதாகாது. உதாரணமாக ஒன்றைக் காணலாம்.

மனுநீதிச் சோழன் வரலாறுபலரும்அறிந்த ஒன்றுதான் அரசனின் காதல் மகன் பசுங்கன்றுக்குட்டி ஒன்றின்மேல் தேரை ஏற்றிக் கொன்றுவிட்டான். அதனால் விளைந்த விளைவைத் தவிர்க்க அமைச்சர்கள் பல்வேறு வழிகளைக் கூறுகின்றனர். அவற்றுள் முக்கியமான ஒன்று கழுவாய் (பிராயச்சித்தம்) செய்யவேண்டும் என்பதாகும். பசுங்கன்றைக்கொன்ற பாவம் போக்க யாவரும் வழி கூறினரே தவிர, பசுவினுடைய துயரம் போக்கப்பட வேண்டும் என்பதுபற்றி யாருமே கவலையுற்றதாகத் தெரியவில்லை.

இந்நிலையில் தத்துவவாதியும், பக்தனும் வேறு வேறு வழியை மேற்கொள்வர். தத்துவவாதி இறப்பினை யாரும் தடுக்க முடியாது என்பதையும் பசுங்கன்று, உயிர் வருக்கத்தில் மனித உயிருக்குத் தாழ்ந்த நிலையில் இருப்பது என்பதையும் அறிகின்றவனாதலின் பசுங்கன்றுக் காகவோ அதன் தாய்ப் பசுவின் துயர் துடைக்கவோ மனித உயிரைத் தரவேண்டும் என்று கருதமாட்டான். மேலும் மனித உயிரையே அதற்குப் பதிலாகத் தந்தாலும் தாய்ப் பசுவின் துயர் துடைக்கமுடியாதே! தாய்ப்பசு வருந்துவதுபோல மன்னனும் வருந்தலாமே தவிர அவன் அத்துயரைத் தானும் ஏற்றுகொளவதால் பசுவிற்கு என்ன பயன் விளையப் போகிறது? இவற்றை எல்லாம் தருக்க

வழி நின்று ஆராயின் இவ்வாதங்கள் சரியானவையே யாகும். தத்துவ வாதியின் இந்த வாதங்கள் அறிவின் துணைகொண்டு ஆராய்ந்து காணப்பெற்றவை.

ஆனால் பக்தனைப் பொறுத்தமட்டில் நிலைமையே வேறாகும். பிறர் துயரம் துடைக்க முன்வரல் வேண்டும். அத்துயரத்தின் காரணம் நியாயமானதா, தற்காலிக மானதா, நிலைபேறுடையதா அதனைத் தான் துடைக்க முடியுமா என்பன போன்ற வினாக்கள் பக்தனைப் பொறுத்தமட்டில் தோன்றுவதே இல்லை. தன்னை ஒத்த உயிர் என்றே எல்லா உயிர்களையும் பக்தன் கருதுகிறான். புழு, பூச்சி, மனிதன் ஆகிய அனைத்தும் இறைவனால் படைக்கப்பட்டிருத்தலின் அவை யாவும் அவன் திருமுன்னர் சமமானவையே யாகும் எனவே ஓர் உயிர்க்கு வரும் துயரம் உடனடியாக ஏனைய உயிர்களால் போக்கப் படவேண்டியதாகும். போக்குதற்குரிய முயற்சிகளை மேற் கொள்ள வேண்டியது பார்க்கும் உயிரின் கடமையாகும். போக்கும் முயற்சி வெற்றி பெறுமா தோல்வியுறுமா என்ற வினாவிற்கு இடமே இல்லை. முயற்சி பலிக்க வில்லையானால் அடுத்துச் செய்யப்படவேண்டியது யாது என்பதையும் பக்தன் நன்கு அறிவான். தன்னால் போக்க முடியாத துன்பத்தைப் பெற்று வருந்தும் உயிரின் துன்பத் தைத் தானும் ஏற்று வருந்துவான். இதுவே பக்தனுடைய வாழ்க்கை முறை.

மனுநீதிச் சோழன் பக்தன் வாழ்வு மேற்கொண்டவன். ஆனால் அறிவற்ற மூடபக்திக்காரன் அல்லன். தன் அறிவு கொண்டு நன்கு ஆய்ந்து அமைச்சர்களிடம் இதோ பேசு கிறான். கழுவாய் தேடுதல்தான் வழக்கமாகும் என்று பேசிய அமைச்சர்களை நோக்கி.

''வழக்கு என்று நீர்மொழிந்தால் மற்று அதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்து அலறும் கோவுறுநோய் மருந்தாமோ?'

இழக்கின்றேன் மைந்தனை என்று எல்லீரும
சொல்லிய இச்
சழக்கு இன்று நான் இசைந்தால் தருமந்தான்
சலியாதோ?

— நகரச்சிறப்பு - 35

என்று பேசுகிறான். வழக்கம் என்று கழுவாய் தேடி விட்டால் பசுமாட்டின் துயரத்தைப் போக்குதல் கூடாது. அது இயலவில்லையானால் வேறு செய்வது யாது? இதோ அவனே விடை கூறுகிறான்.

''எனமொழிந்து மற்று இதனுக்கு இனி இதுவே
செயல் இவ்ஆன்
மனம்அழியும் துயர் அகற்ற மாட்டாதேன் வருந்தும்
இது
தனது உறுபேர் இடர்யானும் தாங்குவதே கருமம்''

—நகரச்சிறப்பு - 42.

இவ்வாறு கூறுவதால் 'பிறிதின் நோய் தந்நோய் போல் போற்ற முற்பட்ட' பக்தனின் மன நிலையை அறிய முடிகிறது.

இதே மனநிலையுடன்தான் ஞானசம்பந்தராகிய பக்தர் திருமருகலில் கணவனை இழந்து வருந்தும் கன்னியின் துயர் துடைக்கப் புறப்படுகின்றார். மனுவுக்கும் பிள்ளையாருக்கும் உள்ள வேற்றுமை யாதெனில் மனு கன்றை எழுப்பித் தரும் ஆற்றல் இல்லாதவன்; பிள்ளையார் இறந்த கணவனை எழுப்பி அவன் மனைவிக்கு வாழ்வு அளிக்கும் ஆற்றல் உடையவர். எனவே அவள் துயரத்தைத் துடைத்துவிட முற்படுகின்றார் இறைவனின் தலைமகனாகி நின்ற தமிழ் ஞானசம்பந்தர்.

இறந்தவனுடைய உடலைத் தம் எதிரே கிடத்திப் பிள்ளையார்,

சடையாய் எனுமால் சரண் நீ எனுமால்
விடையாய்! எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய்! தகுமோ இவளுள் மெலிவே!

— 2-18-1

என்று தொடங்கிப் பதிகம்பாடி அவனை உயிர்ப்பித்தார் என வரலாறு பேசிச் செல்கிறது. இப்பாடலைச் சற்றுக் கூர்ந்து நோக்கின் இவர்கள் பக்தி எத்தகையது என்பதையும் விளங்கிக் கொள்ளலாம். வயலுக்குப் பாய்ச்சும் நீரால் மடையிலுள்ள குவளையும் மலர்கிற ஊராம் திருமருகல்! அவ்வூருக்கு வந்து கருணையே வடிவான இறைவன் திருக்கோயில் அருகே புலம்பியழும் வணிகப் பெண் துயரம் தீரவில்லையானால் உன் கருணை இருந்தவாறு என்னே! என்று பாடுகிறார் பிள்ளையார். தம் அறிவின் துணை கொண்டு செய்யப் பெறும் பக்தியால் விளைந்த பயனாகும் இது. இறைவனுடைய பேராற்றலையும் அதன் எதிரே இப்பெண்ணின் எல்லையறு துயர நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்து இறைவன் கருணை பாலிக்க வேண்டிய இடம் என்பதை இவ்வருஞ்செயலை நிகழ்த்துகிறார் பிள்ளையார்.

இத்தகைய பக்தர்களைத் தம்பாற் கொண்டு இலங்கிய சமயங்கள் இன்று இந்த இழிநிலையை அடையக் காரணம் யாது? பக்தியின் அடிப்படையில் தோன்றிய சமயங்கள், அந்தப் பக்தி என்னும் வேரின் ஆற்றலாலேயே வளர்ந்து உரம் பெற்று நின்றன. நாளவட்டத்தில் பக்தி என்ற வேர் தான் செய்யவேண்டிய பணியைச் செய்யாமையினால் மரம் வாடத் தொடங்கிவிட்டது. ஆழ்ந்த பக்தி தோன்றுதற்குக் காரணமாக இருந்தது அறிவு. அறிவு வழிச்சென்ற ஆராய்ச்சி பக்தியில் கொண்டு விட்டது. இந்தப் பக்தியை வளர்ப்பதற்குப் பல சடங்குகள் தோன்றின. அந்த அடிப்படை நம்பிக்கையும் சடங்குகளின் பொருளும்

அறியப்பட்டிருந்த வரை சடங்குகட்குப் பொருளிருந்தது.

**சடங்குகள் பாரமாயின :**

நாளாவட்டத்தில் சடங்குகளின் அடிப்படையிலிருந்த கொள்கைகள், நமபிக்கைகள், ஆகிய இரண்டுமே மறைந்து விட்டன. நம்பிக்கையின் அடிப்படையில் பொருளறிந்து சடங்குகள் நடைபெற்றது போக அவை இரண்டும் மறக்கப்பட்ட நிலையிலும் சடங்குகள் பாரமாக நின்று விட்டன. மேலும் காரணகாரிய மற்ற சடங்குகள் மனிதனின் அறிவைச் செம்மையான வழியில் செலுத்தத் தவறின.

**இடைக்கால விஞ்ஞானம் :**

இதனிடையில் புதிய சில குழப்பங்களும் தோன்றுவாயின. மிகப்பழைய காலத்தில் அறிவு வளர்ச்சி பெறாத காலத்தில் மனிதன் ஓரளவு நம்பிக்கையின் துணை மட்டுமே கொண்டு வாழ்ந்தான். அதனால் அந்நிலையில் அவனுக்கு ஒன்றும் பிரச்சினை தோன்ற வில்லை. நாளாவட்டத்தில் அறிவின் துணைக்கொண்டு விஞ்ஞான வளர்ச்சியில் ஈடுபட்டான். விஞ்ஞானம் பூரணமாக வளராத நிலையில் மனிதனுக்குச் சில குழப்பங்களை உண்டாக்கியது உண்மை தான். அதுவும் மேனாடுகளைப் பொறுத்த வரை அவனுடைய நம்பிக்கை ஆட்டங்கொள்ளுமாறு விஞ்ஞானம் செய்து விட்டது உண்மையே. பூமியும், ஏனைய உலகங்களும் இறைவனால் படைக்கப்பட்டவை என்றும் இது போன்ற பல கருத்துக்களும் நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றி வளர்ந்து வலுப்பட்டு நின்றன. பூமியின் தோற்றம் முதலிய பற்றி விஞ்ஞானம் புதிய கருத்துக்களைத் தந்ததுடன் சோதனை மூலம் பல புதிய கண்டுபிடிப்புகளைத் தரவும் நம்பிக்கை ஆட்டங் கண்டதில் வியப்பில்லை.

**உபதேசமும் நடைமுறையும் :**

மேலை நாடுகளைப் பொறுத்தவரை மற்றொரு வகையிலும் சமய நம்பிக்கை தளரலாயிற்று. அன்பையே அடிப்படையாகக் கொண்ட சமயத்தை வளர்க்கவும், பேணிப் பாதுகாக்கவும் ஏற்பட்ட சமயத்தில் அதன் எதிராக அச்சமய நிறுவனம் இடைக்காலத்தில் கொலைக்கருவிகள் தாங்கிய படைகளையே தனக்குத் துணையாகக் கொண்டது. அன்பை வளர்க்க வன்பை வழியாகக் கொண்டது. இதனாலும் உண்மை நம்பிக்கை தளர வாய்ப்பு ஏற்பட்டது. சமயம் என்ற பெயரில் உள்ள வெளிப்பூச்சுக்கும் அகவாழ்வில் நடைபெறும் வாழ்க்கைக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாமற் போய் விட்டது. சமயம், சமய வாழ்வு என்றால் ஏதோ இயந்திரங்கள் போலச் சில கிரியைகளைச் செய்வதேயாகும் என்ற எண்ணம் வளர்ந்து விட்ட பிறகு சமய நம்பிக்கை தளர்வதில் வியப்பென்ன இருக்கிறது?

கேனன் ஸ்டனி ஸிமித் என்பார் எடின்பரோ ரெவ்யூ என்ற இதழில் 1809 ம் ஆண்டு பின்வருமாறு எழுதினார். 180 ஆண்டுகள் கழித்து, அணுயுகத்திற்கூட அது உண்மையாய் இருப்பது வியப்பினும் வியப்பே![1]

---

1. If the Bible is diffused in Hindustan what must be the astonishment of the natives,to find that we are forbidden to rob, murder and steal; we, who in 50 years have extended our empire over the whole of Indian peninsula and exemplified in our public conduct every crime of which human nature is capable. What matchless impudence, to follow up such practice with such precept.

Cannon Sidney Smith in Edinburough Review.

"இந்துஸ்தானத்தில் விவிலியநூல் பரப்பப்பட்டால் அங்குவாழும் சுதேசிகள் அடையபோகும் வியப்புக்கு ஓர் எல்லையே இராது! அந்நூலின்படி நாம் கொள்ளை யடிக்கக் கூடாது. கொலை, களவு முதலியவற்றில் ஈடு படக் கூடாது என்று உபதேசிப்போம். அவ்வாறு உபதேசம் செய்கின்ற நாம் 50 ஆண்டுகளுக்குள் இந்திய உபகண்டம் முழுவதும் நம் ஆட்சியைப் பரப்பி விட்டோம்; மனித இயல்பினால் எத்துணை பஞ்சமா பாதகங்களை நினைத்துப் பார்க்க முடியுமோ அவை அனைத்தையும் நம் பொது வாழ்வில் செய்தே காட்டி விட்டோம்! இத்தகைய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமானால் ஈடு இணையற்ற நெஞ்சுத் துணிச்சல் இருத்தல் வேண்டும் நமக்கு."

**இன்றைய நிலை :**

அணுயுகம் என்று பெருமை பேசிக்கொள்ளும் இன்றை நாளிலும் சமயத்தைப் பொறுத்தவரை பெருமாற்றம் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை. உள்ளத்தில் ஒன்று, உதட் டில் ஒன்று, செயலில் ஒன்று என்ற முறையில் தான் போலிச் சமய வாழ்க்கை மேற்கொள்ளப் பெற்று வருகிறது. இதன் பயனாக செல்வங் கொழிக்கும் மேனாடு கள் அல்லல் உறுகின்றன. 'மனிதன் ரொட்டித் துண்டால் மட்டும் வாழ்வதில்லை' என்ற பழைய உபதேசத்தை மறந்து விட்டு ரொட்டி வேட்டையில் இறங்கிய அந்த நாடுகள் செல்வத்தை எல்லையில்லாமற் குவித்த பிறகும் மனத்தில் அமைதி ஏற்படவில்லை என்பதைக் கண்டன. தேவைக்கு அதிகமான செல்வம் குவிந்து கிடப்பதன் காரணமாக மனத்துயரும் சுமையும் செல்வம் இல்லாத காலத்தே இருந்ததைவிட இன்னும் அதிகமாக இருப் பதை உணர்ந்தனர். இச் செல்வத்தைத் தேட முயன்றவர் கள் பலர் ஓரளவு இத்தொல்லையிலிருந்து தப்பிக் கொண்டனர். காரணம் அவர்கள் வாழ்க்கையில் பெரும்

பகுதி செல்வந்தேடும் முயற்சியில் செலவழிந்து விட்டது. ஏதோ ஒரு குறிக்கோளை வைத்துக் கொண்டு அதை அடைய முயன்றால் அம்முயற்சியில் ஈடுபடும் வரை மனத்திற்கு ஒரு வேலை இருத்தலின் அமைதி இன்மை தோன்றாது.

ஆனால் இளைய தலைமுறையைப் பொறுத்தவரை இம்மனத்துயர் மிகப் பெரிதாக விடிந்தது. செல்வத்தைத் தேடுவதில் முனைந்திருந்தவர்கட்கு வாழ்க்கையில் ஒரு குறிக்கோள் இருந்தது. அக்குறிக்கோள் உயர்ந்திராமல் கேவலம் செல்வத்தைத் தேடிக் குவித்து அதன் மூலம் சிறப்பெய்தலாம் என அவர்கள் எண்ணினர். போட்டி மிகுந்த சமுதாயத்தில் (competitive society) இது ஓரளவு நியாயமானதேயாகும். அவ்வாறு சேகரித்தவர்கள் அச்செல்வத்தைப் பயன்படுத்தும் நிலைவரும்பொழுது அதனைப்பயன் படுத்த முடியாத வயதை அடைந்துவிட்டதை உணர்ந்தனர். இதனிடையே மற்றொரு எதிர்பாராத தொல்லையும் வந்துற்றது. தாம் இளமையில் அனுபவிக்க முடியாமல் வறுமையில் உழன்றதை மனத்துட்கொண்டு தங்களுடைய பிள்ளைகளாவது இன்பமாக வாழட்டும் என்ற கருத்துடன் அப்பிள்ளைகளின் தேவைக்கு மிகவும் அதிகமாகப் பணத்தை வழங்கலாயினர். மேலும் வயதும் அனுபவமும் நிறைந்த அவர்கள் பணத்தைச் செலவழிக்கும் முறை வேறு; அதிலும் தாமே முயன்று சேர்த்த பணத்தைச் செலவழிக்கையில் அது ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டிருந்தது. ஆனால் இளந்தலைமுறையினர், எதிர்பாரா விதமாக ஏகப்பட்ட பணம் கையில் வந்தவுடன் கட்டுப்பாடு அற்றமுறையில் செலவு செய்யத் தலைப்பட்டனர்.

இரு தலைமுறையினரும் இவ்வாறு செலவு செய்யத் தொடங்கவே வாணிபம் வளர்ந்தது. உற்பத்தி பெருகலாயிற்று. தேவையானவை எவை தேவையற்றவை எவை என்ற ஓர் எண்ணம் வளரலாயிற்று. எல்லாவற்றையும

வாங்கிவிட வேண்டும் என்றால் அதற்கேற்ப நிரம்பப் பொருளைத் தேடவேண்டும். இதனிடையே உற்பத்தி யாளரும் தாம் பொருளைப் பெருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் உற்பத்தியைப் பெருக்கினர். தேவையற்ற பொருளை உற்பத்தி செய்கின்றவர்கள்கூட அவை மிகுதி யும் தேவை என்ற எண்ணத்தை வாங்குவோர் மனத்தில் விதைக்கத் தொடங்கினர். விளம்பரங்களில் மனவியலாரின் (psychologists) உதவிக்கொண்டு புதிய விளம்பர முறை கள் கையாளப் பெற்றன. எனவே ஏராளமான தேவைகள் வளர்ந்தன. ஏராளமான உற்பத்திகள் பெருகின. ஒரு விஷவளையம் (vicious circle) உற்பத்தி செய்யப்பட்டு விட்டது.

யானைக்கால்காரன் தன் கால் வலுவடைந்து பெருத் துள்ளது என்று நினைத்து மகிழ்ந்தால் எவ்வாறு இருக் குமோ அதுபோல இந்தப் பொய்யான பொருளாதார வாழ்வு (false economic prosperiety) நிலைபெறலா யிற்று. எத்துணைப் பொருளைச் சேகரித்தும் மனதில் அமைதி ஏற்படவில்லை என்பதை மூத்த தலைமுறையினர் காணத் தொடங்கினர். வீட்டில் இரண்டாவது ஒரு கார் இருப்பது தம்முடைய மதிப்பின் அடையாளம் (status symbol) என்று கருதி உழைத்தவர்கள் நாலாவது காரைப் பெற்றுக்கூட மனத்தில் அமைதி ஏற்படாமல் தவிக்கத் தொடங்கினர். சேகரிப்பதற்குரிய முயற்சியே இல்லாமல் பெரும் பொருள் கையில் இருப்பதால் அத்தகைய வாழ்வில் அலுப்பு ஏற்பட்டது இளந்தலைமுறையினர்க்கு.

இரண்டு தலைமுறையினரும் வேறு வேறான காரணங்களால் உந்தப்பட்டு ஒரே நிலைக்கு வந்து சேர்ந் தனர். இரு தலைமுறையினருக்கும் மன அமைதி என்பது குதிரைக் கொம்பாகவே ஆகிவிட்டது. வாழ்க்கை கேவலம் ரொட்டித் துண்டால் மட்டும் நிரம்பி விடுவதில்லை என்ற உண்மை புலப்படலாயிற்று. மூத்த தலைமுறை வெறி

யுடன் பொருள் தேடுவதிலும், இளந்தலைமுறை அதே வேகத்துடன் பொருளைச் செலவழிப்பதிலும் ஈடுபட்டிருந்த காரணத்தால் வாழ்க்கையில் வேறு எதற்கும் மதிப்புத் தந்து பழக்கப்படவில்லை. கண்ணிற்குத் தெரிவதும் தொட்டு அனுபவிப்பதும் ஆகியவற்றிற்கு மட்டுமே மதிப்புத் தந்து பழகிவிட்டமையின் நுண்மையான மதிப்புடைய பொருள்கள் (abstract values) எவை என்பது பற்றிக் கவலைப்பட்டுப் பழக்கமே இல்லாமற் போயிற்று. அன்பு, பக்தி, அழகு, உண்மை, இரக்கம் என்பவைபற்றி யாரும் கவலைப்படவே இல்லை. கேளிக்கை, வேகம், சப்தம் என்பவற்றில் இன்பங்கண்ட அந்தச் சமுதாயம் அமைதி, நிசப்தம், இயற்கை அழகு என்பவற்றில் இன்பங் கண்ட தோரா (Thorue) போன்ற ஞானிகளை எள்ளி நகையாடியது.

இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி முடிய முன்னர்க் கூறிய நாடகம் நடைபெற்றது. எந்த ஒன்றும் மேலே சென்றால் கீழே வந்தே தீரல் வேண்டும் அல்லவா? அதேபோல் இந்த முன்னேற்ற வெறிக்கு எதிர்ச் சுழற்சி (Reaction) தோன்றலாயிற்று. 1960 முதல் எதிர்ச் சுழற்சி மிக வேகமாகப் பரவிற்று. மூத்த தலைமுறையினர் அமைதி கிட்டாமையின் அதனை மதுவில் தேட முனைந்தனர். இன்பத்தை நாடுதற்காக அளவுடன் குடித்தது போக இப்பொழுது தம்மை மறப்பதற்காகக் குடிப் பழக்கத்தை மேற் கொள்ளலாயினர். சிறுகுடியாளர்கள் பெருங்குடியாளராக மாறினர்.

**இளைஞர் வாழ்க்கை முறை :**

இளஞ் சமுதாயத்தினருக்கு இதுவும் ஒத்து வரவில்லை. இளமையிலேயே அதிகப்பணம் புழங்கிய காரணத்தாலும் போட்டி மனப்பான்மையாலும், வாழ்க்கையில் வேறு குறிக்கோள் இன்மையாலும் மிக இளம் பருவத்திலேயே

குடிக்கத் தொடங்கி ஒரு பருவம் வரும்பொழுது எததனையும் மதுவும் மயக்கத்தை தரமுடியாத நிலையை அடைந்து விட்டனர். இந்நிலையில் அமைதி வேண்டும் என்று விரும்பிய இளஞ் சமுதாயம் மதுவைக் கைவிட்டு வேறு துறைகளில் நாட்டஞ் செலுத்தியது. மூத்த தலைமுறையினருக்குக் கை கொடுத்த மது இளைய தலைமுறையினரைக் கைவிட்டு விட்டது.

இந்நிலையில்தான் கஞ்சா, அபின் என்பவை ஹரீன், ஹஷ்ஷ் என்ற பெயர்களில் அவர்களை ஆட்கொள்ளப் புறப்பட்டன. இவை பல்வேறு வடிவங்களில் தோன்றிப் புகையாகவும் ஊசி மருந்தாகவும் உடல் புகுந்து ஆட்கொண்டன. எல். எஸ் டி. என்ற இரசாயன மருந்தின் மூலம் நேரே இங்கிருந்தபடியே சுவர்க்கத்தைக் காண முற்பட்டது இளைய தலைமுறை. ஆசிய நாட்டில் வறுமையில் வாடும் மக்கள் உடல்நிலை ஓரளவு எதையும் தாங்கும் வலுப்பெற்று வளர்ந்து உள்ளது. ஆனால் பெருஞ் செல்வத்தில் வாழும் அந்நாட்டு இளைஞர் எதனையும் எதிர்த்துப் போராடும் எதிர்ப்பு சக்தியை மிகக் குறைவாகவே பெற்றுள்ளனர். எனவே அபின், கஞ்சா போன்றவைகள் அவர்கட்குச் சிறிய அளவிற்கூட வரப்பிரசாதமாக அமைந்தன. சிறிய அளவில் தொடங்கி நாளாவட்டத்தில் பழைய அமைதி (இது மனத்தை மந்தமாக்கும் போலி அமைதி என்பதை அவர்கள் இன்னமும் உணராதது வருந்தத்தக்கதே) கிட்டாமையின் அளவை மிகுத்துக் கொண்டே வந்து இறுதியில் அதற்கு அடிமையாகி விட்டனர்.

இதில் வருந்தத் தகுந்த ஒன்று என்னவெனில் இந்தப் பழக்கம் கீழை நாடுகளிலிருந்தே அங்குப் பரவியது. கீழை நாடுகளில் உண்மைத் துறவிகள் சிலரும், போலித் துறவிகள் பலரும் இவற்றைப் பயன்படுத்தியதுண்டு. ஆனால் எதிலுமே அளவுடன் இருந்து பழக்கப்பட்ட

வர்கள் கீழை நாட்டார். எதிலுமே கடைசிவரை சென்று பார்த்துவிட வேண்டும் என்று நினைப்பவர் மேலை நாட்டார். எனவேதான் இந்தப் பழக்கத்திலுங்கூட அவர்கள் 10 ஆண்டுகளுக்குள் மீட்டு வரமுடியாத தூரம் சென்று விட்டனர்.

கீழை நாட்டார் இவற்றை அளவறிந்து பயன் படுத்தும்பொழுது ஓரளவு பொறி புலன்களைக் கட்டுப் படுத்த இவை பயன்பட்டன. முன்னரே மனவடக்கம் முதலியவற்றிற் பழக்கப்பட்டவர்கட்கு இப்பழக்கம் பக்கத் துணையாக இருந்தது. மனவடக்கம் நன்கு கைவரப் பெற்றவுடன் இப்பழக்கத்தை உதறி விட்டனர் கீழை நாட்டில் இதனை மேற் கொண்டிருந்தவர்கள். இவ்வாறு கூறுவதால் இவற்றைத் தவறாகப் பயன்படுத்து பவர் இந்நாடுகளில் இல்லை என்று கூறுவதாக நினைய வேண்டா. அவ்வாறு செய்பவர்கள் பலருண்டு. ஆனால் இங்குக் குறிப்பிட்டது உண்மைத் துறவிகளையேயாகும்.

நெருப்பு தீயதன்று. அதனை அடக்கி ஆள்பவன் பயன்படுத்தினால் குளிர் காயவும் சமையல் செய்யவும் பயன்படும். அறியாமையும், இளமையும் உடையவன் பயன்படுத்தினால் சமையல் ஆவதற்குப் பதிலாக வீடு பற்றி எரிந்து போகும். அதுபோலவேதான் மேனாடுகளில் இப்பழக்கம் அந்நாட்டையே கெடுத்து உயர்நிலைப் பள்ளிகளிற் படிக்கும் இளஞ் சிறார்களையும் பாழாக்கி வருகிறது.

எதையெடுத்தாலும் உற்பத்தியைப் பெருக்கிப் பொரு ளீட்ட வேண்டும் என்று நினைப்பவர்கள் மிகுந்த சமுதாய மாகலானும் அவர்களுள் ஒரு சிலர் இதனைத் தம் வாணிபப் பொருளாகக் கொண்டு பொருளீட்டத் தொடங்கி விட்டனர்.ஈட்டல் என்ற சொல் இங்குப் பயன் படாது. பொருளைக் குவிக்கத் தொடங்கினர். இவ்வாறு சேகரிக்கப்படும் பொருள் தவறான வழியில் வந்ததா

யிற்றே. ஒரு சமுதாயம் முழுவதையும் கெடுத்துத் தேடிய தாயிற்றே என்ற எண்ணமே அவர்களிடைத் தோன்றுவ தில்லை. 'தீதின்றி வந்த பொருள்' தான் நிலைக்கும் என்ற எண்ணமோ 'அழக் கொண்ட எல்லாம் அழப் போம்' என்ற எண்ணமோ இக்கொடிய வழியிற் பொருள் சேகரிப்பதற்குத் துணிந்தவர்களிடம் தோன்றவே இல்லை. சமய வாழ்க்கையில் ஒரு சிறிதேனும் ஈடுபட்டிருந்தால் ஒரு சமுதாயம் முழுவதையும் கெடுக்கும் இத்தொழில் எத்துணைக் கொடியது என்பதை அவர்கள் நினைந்து பார்த்திருப்பர். அன்றியும் 'எவ்வாறாயினும் பொருளைச் சேகரிக்க வேண்டும். அதுவே வாழ்வின் குறிக்கோள்' என்று அந்தச் சமுதாயம் ஒரு நூற்றாண்டாகப் போற்றி வந்தது. எனவே இப்பொழுது திடீரென்று மாற்றம் வர வேண்டும் என்று விரும்பினால் அது எப்படி வரும்?

வாழ்வின் குறிக்கோள் பொருள் சேகரிப்பதே என்று கொண்டு பணத்தைப் பூசித்து வந்த நாட்டில் இந்நிலை மாற வேண்டுமாயின் பணத்தினிடம் கொண்ட பக்தியை வெல்லக் கூடிய ஒரு குறிக்கோள் தேவைப்படும். அத்தகைய வலுவான ஒரு குறிக்கோளை மக்கள் முன் வைத்து அவர்கள் கவனத்தை அதில் திருப்பினாலொழிய இப்பழக்கத்தையோ, இதன் மூலம் பொருள் சேர்க்கும் கொடியோர்களையோ திருப்ப முடியாது.

**அமைதி காணும் முயற்சியின் பயன் :**

இதனிடையே அந்நாடுகளில் தோன்றிய மற்றோர் இயக்கத்தையும் காண்பது பொருத்தமுடையதாகும். பொருள் சேகரித்து விடுவதால் மட்டும் மன அமைதியை நாடி விடமுடியாது என்பதைத் தெள்ளத் தெளிந்து கொண்ட இளஞ் சமுதாயத்தினர் சிலர் உலகஞ் சுற்றி வந்த பொழுது வறுமை மிகுந்த நம்முடைய நாட்டில் காணாத காட்சி ஒன்றை கண்டனர். ஒரு சில உண்மைத்

துறவிகள் எல்லையற்ற அமைதியைப் பெற்று வாழ்வதைக் கண்டனர்.

இந்தத் துறவிகள் எத்துணைக் காலம் பொறி புலன்களை ஒடுக்கி வாழ்வதன் மூலம் இத்தகைய மனநிலையைப் பெற்றுள்ளனர் என்பதைப்பற்றி அந்தப் பணக்கார இளைஞர்கள் கருதிப் பார்க்கவில்லை. அவர்கள் தேடித் திரியும் அமைதி இதோ இங்கே காணப்படுகிறது. இது எவ்வாறு கிடைத்தது என்று ஆய்வதற்கு நேரம் இல்லாமல், ஒரு பொருள் காணப்பெற்றால் அதனை உடனே தாமும் பெற்றுவிட வேண்டும் என்ற தம் நாட்டுக் கொள்கை அடிப்படையில் இத்துறவிகளை அண்டி அவர்களைப் போலவே வேடம் அணிந்து அமைதி நாட முற்பட்டனர்.

பக்தி மார்க்கம் ஒன்றுதான் யாவரும் எளிதில் கடைப்பிடிக்கக் கூடிய வழி என்பதை அறிந்த நம் நாட்டுத் துறவிகள் அவர்களுக்கு பக்தி வழியையும் அதன் ஓர் உறுப்பான பஜனையையும் போதித்தனர். உணர்ச்சி வசப்படும் இளந்தலைமுறைக்குச் சிந்தையை அடக்கி ஞான வழியில் ஆராய்ச்சி செய்தல் கடினமாகலான் பக்தி வழி அவர்கட்கு மிகவும் ஏற்றதாகப்பட்டது. இதுவே 'ஹரே கிருஷ்ணா' கூட்டத்தார் தோன்றியதன் அடிப்படையாகும்.

ஆனால் போலிகளும் தீயவர்களும் ஒரு நாட்டிற்கு மட்டும் சொந்தமா? விமானம் வைத்துக் கொண்டிருக்கும் துறவிகள் நம்நாட்டில் மட்டும் இல்லாமலா போய் விட்டனர். அதிலும் கொழுத்த பணமுடைய நாட்டிலிருந்து உணர்ச்சி வசப்பட்ட இளைஞர்கள் வந்துள்ளார்கள் என்றால் இந்தப் போலித் துறவிகட்குக் கொழுத்த வேட்டைதானே. இப்போலிகளைத் தொடர்ந்த பலர் இறுதியில் அதில் பயன் ஒன்றும் காணாமையால்

வெறும் 'ஹிப்பி'களாக மாறி ஊர் ஊராகச் சுற்றுகின்றனர்.

ஹிப்பிகளின் வாழ்க்கை ஓரளவு சமய வாழ்க்கையில் ஈடுபட்டு ஆனால் அதில் முற்றிலும் ஈடுபட முடியாமையினால் வீணாகிப் போன வாழ்க்கையாகும். இத்தகைய வாழ்க்கையில் ஈடுபட்ட இலட்சக்கணக்கானவர்கள் மேனாடுகளில் உண்டு. இளமையிலேயே சமய வாழ்க்கையில், போலிச் சடங்குகள் அல்லாத உண்மையான சமய வாழ்க்கையில் ஓரளவு ஈடுபட்டிருந்திருப்பின் இவர்கள் இந்நிலையை அடைந்திரார். இவர்களுள் பெருங் கல்வியாளர்களும், பி.எச்டி பட்டம் பெற்றவர்களும் உண்டு. எனவே இவர்களிடை அறிவுப் பஞ்சம் இல்லை. ஆனால் அந்த அறிவின் துணைகொண்டு அமைதியை அடைய முடியாமையின் இந்நிலை அடைந்தனர். ஆழ்ந்த கல்வி அறிவுடைய இவர்கட்கு பக்தி வழி ஒரு சிறிது இளமையில் கற்பிக்கப்பட்டிருப்பின் இந்த அவலநிலை ஏற்பட்டிராது என்பது திண்ணம். இப்பழக்கம் எவ்வாறு அவர்களிடை வந்தது என்பதையும் காண்டல் வேண்டும்.

அபின் முதலிய லாகிரிப் பொருள்களின் மூலம் நினைவு கடந்த உணர்வு நிலையை அடைய முடியுமா என்பது பற்றி மேனாடுகளைப் பொறுத்தமட்டில் சென்ற நூற்றாண்டிலிருந்தே சோதனைகள் நடைபெற்றன. லாகிரிப் பொருள்கள், மயக்கந் தரும் மருந்து நைட்டரஸ் ஆக்ஸைட் (Nitrous Oxide or laughing gas) முதலியவற்றைப் பயன்படுத்துவதன் மூலம் உயர்நிலையை அடைய முயன்றுள்ளனர். பெஞ்சமின் பால் பிளட் (Benjamin Paul Blood) செனாஸ் கிளார்க் (Xenos clerk) பல்வேறுபட்ட சமய அனுபவங்கள் (The varieties of Religious experience) போன்ற பல நூல்களை எழுதிய வில்லியம் ஜேம்ஸ் (William James) போன்றவர்களும் இம்முறையைச் சோதனைக்காகக் கையாண்டுள்ளனர்.

வில்லியம் ஜேம்ஸ் இச்சோதனையைத்தாமே நிகழ்த்தியதற் குரிய காரணத்தை இதோ பேசுகிறார். 'நாம் விழித்திருக் கும்போது தொழிற்படும் தற்போதம் (waking consciousness) நம்மிடம் உள்ள படிப்படியான பல்வேறு தற் போதங்களுள் ஒன்றாகும். இதனின்றும் முற்றிலும் மாறு பட்ட பல்வேறு தற்போத நிலைகள் அடுக்கடுக்காக ஒன்றுடன் ஒன்று மறைக்கப்பட்டு நம்மிடம் உள்ளன. இப்பல்வேறுபட்ட தற்போதங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல் உயிர்களைப் பற்றியும் அண்டங்கள் பற்றி யும் பேசுவது முழுத்தன்மை பெற்றதாகாது.[1]

இவ்வாறு செயற்கை வழிகளில் சென்று வில்லியம் ஜேம்ஸ் பெற்ற அனுபவத்தைப் பற்றியும் அவர் தம் நூலில் விரிவாக எழுதியுள்ளார் 'அலைகின்ற மனத்தை ஒரு வகையில் குவியச் செய்து முரண்பாட்டிடையே ஓர் ஒற்றுமையைக் காணவைப்பதேயாகும் இந்த அனுபவம். எதிர் எதிரானவைகளும் அவற்றிடையே ஏற்படும் முரண்பாட்டினால் நமக்கு ஏற்படும் தொல்லை களும் மறைந்து ஓர் ஒற்றுமை ஏற்படுவதுதான் இவ்வனுபவத்தின் உயிர் நாடியாகும். இவ்வனு பவங்கள் முரண்பட்டு ஒன்றுக்கொன்று தொடர்பற்று இருப்பதுபோலக் காணப்படினும் அவை உயர்ந்ததான ஓர் அனுபவத்தின் கூறுகளே என்பதையும் இம்முரண்

1. It is that our normal waking conciousness as we call it, is but one special type of conciousness, whilst all about it, parted from it by the filmiest of screens, there lie potential forms of conciousness entirely different. No account of the universe in its totality can be final which leaves other forms of conciousness quite disregarded.

— The varieties of Religious Experience P. 378

பாடுகள் அனைத்தும் அப்பேரனுபவத்தில் சென்று சங்கம மாகி விடுகின்றன என்றும் அறிய முடிகிறது.[1]

லாகிரி முறையில் உணர்வு நிலையை அடைந்து அந்த அனுபவத்தைப் பெற்று அனுபவித்து அதுபற்றி எழுத வந்த செனஸ் கிளார்க் (Xenos clerk) தத்துவத்தையும் இந்த அனுபவத்தையும் ஒப்பிட்டுப் பேசுவது அறிய வேண்டிய ஒன்றாகும். தருக்கம் வாழ்க்கையில் எவ்வித மான உந்தலையும் (Propulsion) தருவதில்லை. அதன் எதிராக உள்ள எடை வேகத்தை (momentum) மட்டுமே தருகிறது. வாழ்க்கை நடைபெறுவது ஏன் எனில் நடை பெற்றே ஆகவேண்டும். இதன் எதிராக உணர்வு நிலை (revelation) கூட்டுகிறது. அது ஏன் நடைபெறுகிறதென் றால் முன்னர் நடைபெற்ற இப்பொழுதும் நடைபெற வேண்டிய சூழ்நிலை உருவாகிறது. உணர்வு நிலையில் நம்முடைய உட்புறத்தை (அகமுக நோக்கம்) காண முடிகிறது. சாதாரண தத்துவ அறிவு நாய் தன் வாலையே பிடிக்க முயல்வது போலாகும் எவ்வளவு வேகமாக நாய் சுற்றினாலும் அதே வேகத்தில் வாலும் ஓடி விடுகிறது. அதன் மூக்கு பின்னங்காலை அண்ட முடிவதே இல்லை. அதே போல நிகழ்வு (present) என்பதே

---

1. "The keynote of it is invariably a reconciliation. It is as if the opposites of the word, whose contradictoriness and conflict make all our difficulties and troubles, where melted into unity. Not only do they, as contrasted species, belong to one and the same genus, but one of the species, the nobler and better one, is itself the genus, and so soaks up and absorb its opposite into itself."

— Ibid P. 37.9

எப்போதும் நாம் அதனை நெருங்கும்போது நிகழ்வாக இல்லாமல் இறப்பாக ஆகி விடுகிறது. இதன் எதிராக மயக்க நிலையிலிருந்து உலக வாழ்க்கை நிலைக்கு மீளும் அந்தக் கணத்தில் நிகழ்வை ஒருவாறு காண முடிகிறது.''[1]

இவற்றையெல்லாம் அறிந்தால் இன்றைய வாழ்க்கையில் வெறுப்படைந்து மேனாட்டு இளஞ்சமுதாயம் ஏன் மயக்க மருந்துகளின் உதவியை நாடிற்று என்பதை அறிய முடிகிறது. அபின், கஞ்சா முதலியவற்றை உபயோகித்து எளிய முறையில் உணர்வுலகத்தில் புகுந்து விட விரும்பும் அவர்களைக் கண்டு நம்மவருள் சிலர், பெரிய அறிவாளிகளாகத் தம்மை மதித்து கொள்வதால் எள்ளி நகையாடுகின்றனர். இது எள்ளி நகையாட வேண்டிய ஒரு நிகழ்ச்சியன்று என்பதைக் காட்டவே இது காறும் பேசப்பெற்றது. அவ்வாறானால் இப்பழக்கம் போற்றி ஏற்கப்பட வேண்டிய ஒன்றா என்ற வினாத்

---

1. The logic finds in life no propulsion, only a momentum. It goes because it is going. But the revelation adds; it goes because it is a and was a-going. You walk as it were round yourself in the revelation. Ordinary philosophy is like a hound hounting his own tail. The more he hints the farther he has to go, and his nose never catches up with his heels, because it is forever ahead of them. So the present is already a forgone conclusion, and I am ever too late to understand it. But at the moment of recovery from anesthesis, just then, before starting on life, I catch, so to speak, a glimpse of my heels, a glimpse of the eternal process just in the act of starting.

— Ibid - 380.

தோன்றலாம். உண்மையைக் கூற வேண்டுமானால் நல்ல அனுபவமுடைய குருமார்கள் பக்கத்தில் இருந்தால் சீடனுக்கு உணர்வுலகம் எவ்வாறு இருக்கும் என்பதன் கலவையை அறிவுறுத்த ஒருசில தடவைகட்கு மட்டும் இம்முறையைப் பயன்படுத்திவிட்டு அடுத்து இப்பழக்கம் நிலைக்காதபடி செய்து விடுவர்.

மேனாடுகளைப் பொறுத்தமட்டில் யாவரும் கிறிஸ்து சமயத்தைத் தழுவினார்கள் தாமே, இளமை முதற் கொண்டே சமய அறிவு பெற்றவர்கள் தாமே அப்படி இருக்க அவர்கட்குச் சமயஅறிவு, ஓரளவு வழங்கப்பட்டி ருக்குமாயின் இந்நிலை வாராது என்று கூறுவது பொருந் துமா என்று சிலர் மனத்திலாதல் ஓர் ஐயம் தோன்றல் கூடும். இந்த ஐயம் நியாயமானதுதான். ஆனால் சமயம் என்ற பெயரில் என்ன வழங்கப்படுகிறது இன்று? அது எந்தச் சமயமாயினும் சில கிரியைகள், சடங்குகள் என்பவை தவிர இப்புதுயுக இளைஞனின் மனத்தே தோன்றும் ஐயத்தைப் போக்கி அவனை வழிக்குக் கொணரும் ஆற்றல் ஏறத்தாழ எந்தச் சமயத்தாரிடமும் இன்றில்லை.

## இளைஞர் ஏற்காதது ஏன்?

இன்றைய இளைஞர் உள்ளம் அணுயுகத்தில் தோன்றி வளர்வது. நம்முடைய சமயங்கள் ஏறத்தாழ இரண் டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இருந்த நிலையில் தோன்றியன. ஆனால் எத்தனை யுகங்களாயினும் மாறாத சில இயல்புகளையும் இச் சமயங்கள் கொண்டுள்ளன. மிகப் பழைய நம்பிக்கைகள் சிலவற்றையும் இவை கொண்டுள்ள தம்முடைய காலத்தில் இருந்த பழைய நம்பிக்கைகளும் சடங்குகளும் கால வேறுபாட்டால் மாறும் இயல்புடையவை என்பதை ஏனோ இச்சமயங்கள் மறந்து விட்டன; ஏற்கவும் மறுக்கின்றன. அந்தச்

சமயத்தின் உயிர்நாடியான கொள்கைகள் தவிர ஏனைய புறச் சடங்குகள் என்பதையும் மறந்துவிட்டமையால் தான் இன்று சமயம் என்றால் இளஞ் சமுதாயம் எள்ளி நகையாடும் நிலைவந்துவிட்டது. இது எல்லாச் சமயங் களுக்குப் பொதுவான குறைபாடேயாகும். கிறித்துவ சமயத்திற்கு மார்டின்லூதர் போன்றவர்கள் வந்து பழையன கழித்துப் புதியன புகுத்தியது உண்மையே. ஆனால் அதுவும் பன்னெடு நாட்களுக்கு முன்னர் நடந்த தாகலின் இன்று மறுபடியும் ஒதுக்க வேண்டியவை பல புகுந்து விட்டன.

இந்நாட்டில் தோன்றி வளர்ந்த சமயங்களைப் பொறுத்த வரையும் மேலே கூறியவை உண்மையாகும். இராமானுஜரைப் போன்ற ஒரு வீரர் தோன்றி வைணவ சமயத்தில் தேங்கியிருந்த குப்பைகளை அகற்றிப் புதிய உற்சாகத்தை ஊட்டித் 'தொண்டக்குலம்' என்ற ஒன்றை ஏற்படுத்தி ஒருவாறு வைணவ சமயத்தில் ஓர் உயிர்த் துடிப்பை ஏற்படுத்தினார். ஆனால் இன்றைய நிலையில் மிக முன்னேற்றத்துடன் இருக்க வேண்டிய அந்தச் சமயங்கூட நடமாடும் சக்தியுற்று வெறும் வேஷதாரி களுடன் நின்றுவிட்டது.

சைவ சமயத்தைப்பொறுத்தவரை திருஞானசம்பந்தர் போன்ற புரட்சியாளர்கள் குப்பைகளை நீக்கிப் புத்துயிர் ஊட்டினர். சமயக் காழ்ப்பு மிகுந்திருந்த காலத்தில் தாயுமானவர் தோன்றிப் புறச்சமயங்களில் உள்ள சிறந்தவற்றை எடுத்து ஒன்றாக்கி (synthesised) சமரச சமயம் ஒன்றைத் தந்தார். அவரையடுத்துச் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இராமலிங்க வள்ளலார் சைவ சமயத்தில் சேர்ந்திருந்த குப்பைகளை நீக்கி அதற்குப் புத்துயிர் ஊட்ட முயன்றார். மேனாடுகளில் கிறித்துவ சமயத்தில் பல பிரிவுகளும் ஒன்றுகூட முயற்சிகள் நடை பெறுவது போல இந்நாட்டுச் சமயங்கள் பலவற்றையும்

ஒன்றுபடுத்தி (synthesis)சமரச சுத்த சன்மார்க்கம் என்ற பெயரில் ஒன்றாக்க முயன்றார் வள்ளலார். எல்லாச் சமயங்களும் ஒளியை ஏற்றுக் கொள்ளுகின்றன. இறைவன் ஒருவன் உண்டு என்பதையும் அவன் கருணையே வடிவானவன் என்பதையும் ஏற்றுக் கொள்கின்றன. எனவே வள்ளலார் இங்குள்ள சமயங்கள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளும் பொதுத் தன்மைகளை மட்டும் எடுத்து 'அருட் பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' என்ற ஒரு தாரக மந்திரத்தைத் தந்தார்.

இவ்வாறு கண்டால் அவ்வப்பொழுது பெரியார்கள் தோன்றிச் சமயம் என்ற பெயரில் உள்ள குப்பைகளை நீக்கி விட்டு சமயங்கள் நிறுவனமாக ஆக்கப்பட்டமையின் ஏற்பட்டுள்ள தொல்லைகளை நீக்கி உண்மைச் சமயத்தைப் பரப்ப முயன்றனர். ஆனால் அவர்கள் காலத்தில் அவர்களுடைய ஆற்றலாலும் நெஞ்சு உரத்தினாலும் இவை வளர்ந்தன எனினும் அவர்கட்குப் பின் மெள்ள மெள்ள அவற்றிலும் குப்பை சேரலாயிற்று. அதன் பயனாகச் சமயம் பெரிதும் பயன்படும் இயல்பை இழக்கத் தொடங்கி விட்டது.

**சமயவாதிகள் செய்ய வேண்டுவன :**

இந்நிலைமாற வேண்டுமானால் சமயவாதிகள் என்று கூறிக் கொள்பவர்கள், அவர்கள் எந்தச் சமயத்தைச் சேர்ந்தவராயினும் துணிந்து முன்வந்து பக்திவழியைப் பரப்ப முன்வரல் வேண்டும். தத்துவ ஆராய்ச்சியையும், மனவியல் ஆராய்ச்சியையும் வளர்த்துச் சென்றுள்ளோம். அதனால் நம் அறிவு விரிவடைந்தது; விளக்கம் பெற்றது. ஆனால் அதன் பயனாக மானிட வாழ்வு செம்மைப் பட்டதா என்றால் இல்லை என்றே கூறல் வேண்டும். பிரித்துக் காணும் அறிவை வளர்ப்பதை விட அனைத்தையும் ஒன்றுபடுத்திக் காணும் உணர்வை வளர்ப்பது

தான் இன்றைய உலகில் வாழ வழிகாட்டும். ஆழ்ந்து சிந்தித்து முயன்றால் இது நடைபெறக் கூடியதே.

அறிவின் பயனாகத் தோன்றிய எந்த இயக்கமும், மக்களைத் தரம் பிரித்து அவர்களுள் பல்வேறு நிலைகளை உண்டாக்கி வேறுபடுத்தியது. ஆனால் எத்துணை வேறு பாடு இருப்பினும் அவை அனைத்தையும் மறந்து இந்த வேறுபாடுகளின் இடையே ஒருமைப்பாட்டைக் காட்டி எல்லா மக்களையும் ஒன்றாக்கியது சமயம் ஒன்றேதான். உடையார், இல்லார்; தக்கார், தகாதார்; இளைஞர், முதியர்; அறிவுடையார், அஃது இலார் முதலிய அனைவரையும் ஒன்றாக்கி ஒரு சமுதாயம் வாழ வழி வகுத்தது யார்? உண்மையான சமயவாழ்க்கை மேற்கொண்டு வாழ்ந்த அடியார்களும் பக்தர்களுமே இந்த ஒருமைப் பாட்டைக் கண்டு, பிறருக்கும் அறிவுறுத்தித் தாமும் கடைப் பிடித்தனர். தத்துவவாதி எத்துணைத் தூரம் முன்னேறினாலும் அவனுடைய அறிவும் ஆராய்ச்சி முறையும் தருக்கமும் பிரிவினையில் செல்லுமே தவிர ஒருமைப்பாட்டில் செல்வதில்லை. எனவேதான் உண்மைப் பக்தர்கள் உண்மைச் சமயவாதிகள் என்பவர்கள் மட்டுமே இதனை மேற்கொள்ள முடிந்தது என்று கூறு கிறோம்.

இவ்வாறு வேற்றுமையிடையே ஒருமைப்பாட்டைக் காண்பதற்குரிய சில அடிப்படையான இயல்புகள் பக்த னிடம் அமைந்து விடுகின்றன.

முதலாவது பக்தனின் தன்னலமின்மை அடியவர் எதனையும் தமக்கென ஏற்பதே இல்லை. காரணம் தான் என்ற ஒன்றே இல்லாதவர்க்குத் தனக்கென வேண்டப் படுவது ஒன்றும் இராது. இதனையே சேக்கிழார் 'ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்' (பெ.பு. 143) என்றும் 'ஆடையும் கந்தையே' (பெ.பு. 144) என்றும் கூறுவார். 'உண்மையான துறவி அவனுடன் யாம் ஒன்று

தவிர எதனையும் வைத்துக் கொள்வதில்லை' (The true monk takes nothing with him but his lyre) என்று இத்தாலிய பக்தர் ஒருவர் கூறினார்.

சமுதாயக் கட்டுப்பாடுகளிலிருந்து முற்றிலும் நீங்கியவர்களாகலின் கனிவு, கருணை என்பன இவர்களிடம் குடி கொள்கின்றன. பிற உயிர்கள் மாட்டுக் கருணையும், அவர்கள் துயரங்கண்டு கண்ணீர் விடுதலும் இவர்கட்கு இயல்பாகும்.

எல்லையற்ற உறுதியும், நம்பிக்கையும் கொண்டவர்களாதலின் அஞ்சாமை இவர்களிடம் குடிகொண்டு விடுகிறது. 'வானம் துளங்கில் என்? மண் கம்பம் ஆகில் என்?' (4-112-8) என்றும் 'அஞ்சுவது யாதொன்றும் இல்லை, அஞ்ச வருவதும் இல்லை' (4-2-1)என்றும் கூறும் ஆற்றல் படைத்தவர்கள் நாவுக்கரசர் போன்ற பக்தர்களேயாவர்.

இந்த உறுதியின்மேல் பிறக்கின்றது கருணையாகலின் இது வேண்டியவர் வேண்டாதவர் என்ற பிரிவினைக்குள் அடங்குவதே இல்லை. இவர்கட்குப் பகைவர்கள் என்பவர்களே கிடையாது. உயிர்களுள் எல்லாம் மிகத் தாழ்ந்திருப்பது தாமே என்ற எண்ணம் (humility) கொண்டவர்களாகலின் யாரையும், எத்தகைய கீழானவர்களையும் தாழ்ந்தவர், தகுதி இல்லாதவர் என்று இவர்கள் நினைப்பதே இல்லை. நம் போன்றவர் கண்டு வெறுப்படையும் நோயாளர் முதலியோரையும் பக்தர்கள் வெறுப்பதே இல்லை. இறைவன் திருவுளப்படியே நடைபெறுகின்றன; அவனன்றி ஓரளவும் அசையாது என்பதை வெறும் உதட்டளவில் அன்றி உண்மையிலேயே ஏற்றுக் கொள்கின்றார்கள் ஆதலின்பகைமை (enemity) காழ்ப்பு (malice) வெறுப்பு (hatred) என்பவை இவர்கள் பால் இருப்பதே இல்லை. யாவும் இறைவன் செயல் என்பதை வாழ்க்கையில் ஏற்றுக் கொண்டமையின் விடம் கலந்த உண

வைத் தந்தபோதும், நீற்றறையில் இட்டபோதும் கல்லுடன் கட்டிக் கடலில் இட்டபோதும் திருநாவுக்கரசர் போன்றார்க்கு இவற்றைச் செய்தவர்மேல் எத்தகைய வெறுப்போ, காழ்ப்போ வந்ததே கிடையாது.

தம் உடலுக்கு ஏற்படும் நோவை இவர்கள் அறிவதே இல்லை; ஒருவேளை அறிந்தாலும் அதனை நெஞ்சு உரத்தோடு ஏற்றுக் கொண்டுள்ளனர். தான் என்ற அகங்காரமும் எனது என்ற மமகாரமும் உடையாருக்குத்தானே தம் உடம்பு அதில் ஏற்படும் நோய் என்பவை தெரியும். "வேண்டத் தக்கது அறிவோய் நீ! வேண்ட முழுதும் தருவோய் நீ" (குழைத்த-6) என்று கூறுகிறார் மணிவாசகர். "என்னை வருத்திலையேல் இடும்பைக்கு இடம் யாது சொல்லே?" [4-105-2] என்கிறார் நாவரசர்.

இக்கருத்தை அப்படியே மொழி பெயர்த்துக் கூறுவது போல பாஸ்கல் [Pascal] என்ற பிரஞ்சுநாட்டு பக்தர் இதோ கூறுகிறார். "ஆண்டவனே என்னுடைய தன்னலம் காரணமாக எனக்கு ஏற்படும் இடுக்கண்களைத் தாங்கிக் கொண்டு வருந்தாமல் இருக்கும் மனநிலையைத் தருவாயாக! நின்னிடம் நலம், நோய், வாழ்வு, சாவு என்ற எதையும் நான் கேட்கவில்லை. நின் புகழ் ஓங்குதற்காக நலமோ நோயோ, சாவோ வாழ்வோ எதை வேண்டுமானாலும் எனக்கு அருளுக. எனக்கு எது நலம் பயப்பது என்பதை நீயே அறிவாய்; நீயே தலைவன்; நீ விரும்பியதை எனக்கு அருளுவாயாக".[1]

---

1. "Deliver me, Lord, from the sadness at my proper suffering which self-love might give, I ask you neither for health nor for sickness, for life no death; but that you may dispose of my health and my sickness; my life and my death, for your glory. You alone know what is expedient for me; you one the soverign master; do with me according to your will."
— The varieties of Religious Experience. P. 2 80

தங்கள் உடலுக்கு ஏற்படும் நோய் முதலியபற்றிக் கவலைப்படாமல் இருப்பது போல தங்கள் வாழ்வில் செய்கின்ற செயல்கட்கும் இறைவனே காரணமாகிறான் என்ற முடிவில் இருப்பவர்கள். இன்னுங் கூறவேண்டுமானால் அவனை வணங்குதலாகிய செயல்கூடத் தாம் தம் முயற்சியால் செய்வது என்று நினையாமல் அவன் அருள் காரணமாகவே நடைபெறுகிறது என்று நம்புகின்றவர்கள். ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' [சிவ.] என்பது திருவாசகம் தம்மிடம் காணப்பெறும் குற்றங்கள் நீங்க வேண்டுமானாற் கூட அதுவும் அவன் திருவருளாலேயேதான் நடைபெற வேண்டும் என்று கருதினர். 'குலங் களைத்தாய் களைந்தாய் என்னைக் குற்றம்' [நீத்தல்-29] என்பது திருவாசகம். 'தனித்துணை நீ நிற்க யான் தருக்கித் தலையால் நடந்த வினைத்துணையேன்' [நீத்தல்-39] என்பதும் திருவாசகமே.

திருவாசகத்திற் காணப்பெறுகின்ற இம்மூன்று கருத்துகளும் மணிவாசகருக்கு மட்டும் சொந்தமானவை அல்ல. சுந்தரமூர்த்திகளிடத்தும் இக்கருத்துகளின் எதிரொலியைக் காணலாம். மேனாட்டு பக்தர் கூட்டத்தில் ஒருவராகிய 'ஸ்தாபிட்ஸ்' [Stanpitz] என்பார் கூறுவன ஈண்டு ஒப்பு நோக்கத் தகுந்ததாம். ''இன்றுள்ள நிலையில் இருந்து இன்னும் உயர்ந்த மனிதனாக ஆகிவிடுவேன் என்று கடவுளின் எதிரே ஆயிரம் முறை சத்தியஞ்செய்துள்ளேன்; ஆனால் அதன்படி யான் நடந்து கொண்டேனில்லை. இனி அத்தகைய சத்தியம் ஒன்றும் செய்யமாட்டேன். ஏனெனில் அதனை நிறைவேற்ற எனக்கு ஆற்றல் இல்லை என்பதை அனுபவமூலம் அறிந்து கொண்டேன். எனவே இறைவன் அதனை விரும்பி அருளினாலொழிய யான் எத்துணை சத்தியஞ்

செய்யினும் அவன் முன் நிற்கும் ஆற்றல் பெறமாட்டேன்''[1]

பக்தர்களாகவும் அடியார்களாகவும் முற்றிலுமாக மாறி விட்டவர்களின் மனநிலையும் முற்றிலும் மாற்றம் பெற்று விடுகிறது. அதனுடைய இயல்பினும் அதன் செயலிலும் ஒரு முழுமாற்றத்தைக் காண்டல் கூடும்.

---

1. "I have vowed unto God above a thousand times that I would become a better man; but I never performed that which I vowed. Hereafter I will make no such vow; for I have now learned by experience that I am not able to perform it. Unless therefore, God be favourable and merciful unto me for Christ's sake, I shall not be able; with all my vows and all my good deeds, to stand before him.

— The Varieties of Religious Experience. P. 127

# 2. திருமந்திரப் பொருள்நிலை

இந்தஉலகத்தைப் பொறுத்தமட்டில்பல்வேறுசிறப்புக்கிடையே ஒரு தனிச் சிறப்பும் உண்டு. அதாவது எந்த ஒரு குறிப்பிட்ட பொருளை நாம் நாடிச் செல்கிறோமோ அது நாம் நாடிச் செல்லும் இடத்தில், செல்லும் நேரத்தில் கிடைக்கும் என்று உறுதிகூற முடியாது. கடைகளில் உறுதியாக இருக்கும் என்று நம்பிச் சென்று கேட்கையிலும் கேட்பது தவிரப் பிற பொருள்கள் இருப்பதைக் காட்டுகின்றனர். திருமுறைகளைப் பற்றிப் பேசியவர்களும் இனி வரப்போகின்ற பேச்சாளர்களும் பலருளர். அவர்கள் திருமந்திரத்தை நன்கு பயின்றவர்கள்.

என்னைப் பொறுத்தவரை இந்நூல் மந்திரமாகவே (மறை மொழியாகவே) உள்ளது. திருமந்திரத்தை ஓரிரு முறைகள் படிக்க முயன்றுள்ளேன். அதற்கெழுதப் பெற்ற உரைகளையும் பார்க்க முயன்றேன். என்னுடைய சிற்றறிவுக்கு அவை எட்டவில்லை. அதனால் நான் பெரிதும் வருந்தினதில்லை. உதாரணமாக உயர்

---

14—2—71 அன்று திருவிடைமருதூர் திருமறை மாநாட்டில் பேசியது.

விஞ்ஞானம் அல்லது கணிதம் கற்கின்றவர்கள் வைத்து இருக்கும் நூல்களை எடுத்துப் புரட்டிப் பார்த்தால் உண்மை விளங்கும். நம் போன்றவர்கட்கு அந்நூல்கள் புரியாத புதிராகவே இருக்கும். அவற்றிலுள்ள எழுத்துக் களும், எண்களும் நாமறிந்தவையே. எனினும் அவை கூறும் கருத்துக்கள் நம் அறிவுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கும்.

ஆனால் அத்துறைகளில் பயின்றவர்கட்கு அந்நூலில் கூறப்பெற்ற கருத்துக்கள் அங்கை நெல்லிக்கனியாக விளங்கும். அதுபோலத் திருமந்திரத்தின் பெரும் பகுதி என்போன்ற சிற்றறிவினர்க்கு உரியனவல்ல போலும் என்று நினைத்து மன அமைதி அடைவதுண்டு.

இந்நிலையிற்கூட ஓர் உண்மையை மறவாமற் காண்டல் வேண்டும். திருவாளர் அருணாசலம் பிள்ளை அவர்கள் விட்ட வினா மிக இன்றியமையாத ஒன்றாகும். 'திருமந்திரம் போன்ற நூல்கட்கு, இற்றை நாளில் கிடைத் துள்ள இடம் யாது?' என்பதே அவருடைய வினா. எத்துணைதான் பதி, பசு பாச ஆராய்ச்சியில் ஈடுபட் டாலும் அவ்வாராய்ச்சி காலத்தோடு ஒட்டி வராக்கால் ஒரு சிலருக்கே பயன்படுவதாக முடிந்துவிடும். உண்மை யைக் கூறவேண்டுமானால் நம் நாட்டில் இற்றைநாளில் சமயங்கள், அவைபற்றிய பிரச்சாரம் என்பவை எந்நிலை யில் உள்ளன? சைவம் என்றால் என்ன என்பதை அறியாத வர்களிடமன்றோ நம் சமயத்தைச் சென்று பரப்ப வேண்டும்? அதன் எதிராக அதுபற்றி அறிந்தவர்கள், அதை வாழ்க்கையில் கடைப்பிடிப்பவர் இவர்களிடையே சென்று 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை' என்று கூவுவதன் நோக்கம் யாது?

**சமயமும் சடங்குகளும் :**

பிற நாட்டாரையும், பிற சமயததாரையும் எடுத்துப் பார்த்தால் ஓர் உண்மை விளங்கும். கால, தேச வர்த்த மானங்களைக் கடந்து அவர்கள் தம் நாகரிகம் அறியாத பிற மக்களிடத்தில் சென்று அவர்களோடு தங்கி, அவர்களிடைத் தம் சமயத்தைப் பரப்புகின்றனர். நம்மைப் பொறுத்தவரை நிலை என்ன? முன்னர்க் கூறியதுபோல ஏற்கனவே சமயத்தை ஓரளவு அறிந்தவர்களிடம் மட்டுமே சென்று நம் சரக்கை வியாபாரம் செய்கிறோம். அதுமட்டுமன்று. எத்துணை அளவு பதி, பசு, பாசம் பற்றிப் பேசினாலும் இந்நாளைய தேவைக்கு அவை பயன்படக்கூடிய நிலையில் பேசுகிறோமே என்றால் அதுவும் இல்லை. பிற சமயத்தார்கள் அணுயுகத்திற் கேற்பத் தம் சமயக் கருத்துக்களுக்கு வேற்றுருவந் தந்து பரப்புகின்றனர். இதன் பயன் என்ன? சமயப்பற்றும் ஓரளவு அனுபவமும் உடைய பெரியோர்கட்கும் இளஞ் சமுதாயத்திற்கும் இடையே ஒரு பெரிய பள்ளம் ஏற்பட்டுள்ளது. காலத்தை வென்று நிற்பது சைவ சித்தாந்தம் என்றும் கூறுகிறோமே தவிர நம் காலத்தில் நம் கண் எதிரில் வாழும் இளைஞர்கட்குக் கூட நாம் அமைதி தேடித் தரமுடியவில்லை, இதனால் நம் சமயம் என்பது வெறும் சடங்குகளாக முடிவதுடன் அதன் தத்துவம் மறக்கப்பட்டும் பொய்யாய்க் கனவாய்ப் பழங் கதையாய் மெல்ல போய்க் கொண்டிருக்கிறது.

**பழைய முறை மாற வேண்டும் :**

இந்நாளைய உலகம் அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்று கூட்டங்கூடிப் பேசுவதால் மட்டும் பயனின்று. இச்சமுதாயம் போகின்ற வேகத்தில் திருமந்திரம் போன்ற சமய நூல்களின் இடம் யாது என்று ஆராய வேண்டியுள்ளது? இதுநாள்வரை நாம் நம் சமய

நூல்களைப்பற்றிப் பேசிக் கொண்டு வந்த முறையை, அதாவது நமக்குள் நாமே கூட்டம் போட்டு முன்னரே அதுபற்றித் தெரிந்தவர்களிடம் திரும்பத் திரும்ப அதையே பேசுதல் போன்ற முறையை மாற்றிக்கொண்டால் ஒழிய விரைவில் இந்நூல்கள் புதை பொருள்களாக மாறி நூல் நிலையங்களில் கேட்பாரற்றுக் கிடக்கும் நிலை ஏற்பட்டு விடும். எவ்வளவு உயர்ந்த நூல்களானால்தான் என்ன? அவற்றைப் போற்றிக் கற்பார் இன்றேல் அவை மறைந்து போதல் இயல்புதானே!

**சமுதாய நோக்கு வேண்டும் :**

ஓயாமல் மாணவர்களோடு பழகுகின்ற என் போன்றவர்கள் மனத்தில் தோன்றுகிற அச்சமாகும் இது. இன்றைய மாணவர் சமுதாயம் இந்நூல்களை அறியாமல் வளர்கின்றது. நாளை இவர்கள் பெரியவர்களாகும் பொழுது என்ன ஆகும்? பொதுமக்களோடு அதிலும் சிறப்பாக இளைஞர்களோடு பழகி அவர்களை நம் நெறிக்கு இழுக்காவிடின் என்ன நேரும் என்றும் சிந்தித்ததுண்டா? நாம் எங்கோ ஒரு மூலையில் அமர்ந்துகொண்டு இந்த அருள் நூல்களைப் படித்தால் நாம் மட்டும் பயனடைவோமே தவிரச் சமுதாயத்திற்கு நம் கடமையை நிறைவேற்றியவர்களாக ஆவோமா?

நம் முன்னோர்கள், அதிலும் குறிப்பாக இவ்வருள் நூல்களை ஆக்கித்தந்த பெரியார்கள் இவ்வாறு நடந்து கொள்ளவில்லை என்பதையாவது சிந்தித்தோமா? திருமந்திரமாகிய பெருநூலை ஆக்கித்தந்த பெருமகன் எங்கோ இருந்து இறைவனில் ஈடுபட்டிருக்க வேண்டியவர் ஏன் இங்கு வந்தார்? இறந்துபோதல் என்பது இவ்வுலகின் இயல்பு என்று அவருக்குத் தெரியாதா? ஏன் இறந்தவன் உடம்பில் அவர் புகவேண்டும்? பின்னர் ஏன் இத்துணைப் பாடல்களை ஆக்கவேண்டும். நம்மிடம் கொண்ட

கருணையினால்தான் இவற்றைச் செய்தார் என்று கூறத் தேவை இல்லை.

திருமூலர் போன்ற நம் முன்னோர்கள் நம்மாட்டுக் காட்டிய கருணையை அவரின் பின்வந்தோராகிய நாம் கடைப்பிடிக்கிறோமா? திருமூலர் அளவிற்கு நாம் செல்லா விடினும் இன்றைய சமுதாயத்திற்கு எது தேவை என்பதை அறிந்து அதையாவது பூர்த்தி செய்ய முயல் கிறோமா? எந்த அளவாவது நாம் நம் சமுதாயத்திற்கு பயன்பட வேண்டுமென்று நினைக்கிறோமா? சைவர்க ளாகிய நாம் இம்முறையில் சிந்திக்கத் தொடங்கினா லொழிய நம் சமயம். சமயம் நேரும்போது மெல்ல மறைதல் இயல்பு.

மனித வாழ்வு முழுவதையும் உற்று நோக்கினால் அதனை 'அக வாழ்வு' 'புறவாழ்வு' என இருவகையதாப் பிரிக்கலாம் என்பது விளங்கும். இங்கு யான் அகவாழ்வு புறவாழ்வு என்று கூறுவது தமிழ் இலக்கியத்தில் கண்ட பிரிவை அன்று. மனிதன் தன் மனத்திலே ஓர் உலகை உண்டாக்கிக் கொண்டு வாழ்வதையே 'அகவாழ்வு' என்று கூறுகிறேன். மனம் அதனோடு தொடர்புடைய உடல் என்ற இரண்டிற்கும் புறம்பாக உள்ள உலக வாழ்வையே 'புறவாழ்வு' என்று குறிக்கிறேன். மேலை நாட்டாரைப் பொருத்தமட்டில் புறவாழ்வு (இவ்வுலக வாழ்வில்) வெகுவாக முன்னேறிச் சென்றுள்ளனர். சந்திரனில் சென்று இறங்கும் அளவிற்கு முன்னேறிய அவர்கள் இப்பொழுது அந்த விஞ்ஞான முன்னேற்றத் தால் மட்டும் பயனில்லை என்பதையும் மனிதமனம் எங்குபோனாலும் கூடவே வரும் என்பதையும் அம் மனவாழ்வு செம்மைப்பட்டாலொழிய மனித வாழ்வு பூரணத்துவம் அடைவதில்லை என்பதையும் கண்டு கொண்டனர். இன்று அவர்கள் அனுபவமூலம் கண்டு கொண்ட இந்த உண்மையை அவர்கள் சமயத்தை நிறுவிய

இயேசு பெருமான் இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னரே கண்டு 'மனிதன் ரொட்டித் துண்டால் மட்டும் வாழ்வதில்லை' என்று கூறிப்போனார். இந்த நாட்டில் வாழ்ந்த பெரியோர்களும் அதனையே கூறினர். மனிதனுடைய அக வாழ்வு (மன வாழ்வு) செம்மைப்படாத பொழுது புற வாழ்வு (உலக வாழ்வு) எத்துணைச் சிறப்புடன் பொலிந்தாலும் பயனில்லை. இதனை நன்கு மனத்துட் கொண்டு இந்நாட்டில் வாழ்ந்த பேரருளாளர்கள் நமக்கு வழிகாட்டிப் போயினர்.

**மக்கள் தொண்டே மகேசன் தொண்டு :**

தம் ஆன்மாவை முன்னேற்ற வேண்டிய தேவை இல்லாத இப் பெருமக்கள் இவ்வுலகிடை வந்து பிறந்து நம்முடன் பழகி நம்முடைய நன்மைக்காகவே சிலபலவற்றைக் கூறிப் போயினர். அவர்கள் தம் நிலையிலிருந்து நம்மாட்டுக் கொண்ட கருணையால் கீழிறங்கி வருகிறார்கள் என்பதை அறிந்ததால்தான் அவர்கள் வருகையை 'அவதாரம்' (கீழிறங்கி வருதல்) என்றும் குறிக்கிறோம். முழுமுதற் பொருளாகிய இறைவன் மட்டும் 'சௌலப்பியம்' (எளிவந்த தன்மை) உடையனவல்லன். அவனருள் பெற்ற பெரியோர்களும் இவ் எளிவந்த தன்மையை நிரம்பப் பெற்றவர்கள்.

சீவன்முத்தராகிய திருஞானசம்பந்தர் போன்ற பெரியார்கள் திருவீழிமிழலை போன்ற பகுதிகளிற் பஞ்சம் வந்தபொழுது அவண் மடம்வைத்து அனைவருக்கும் சோறு சமைத்துப்போட்டு அவர்கள் பசிப்பிணியைப் போக்கினர் என்று வரலாறு பேசுகிறது. ஆண்டவனிடம் பக்தி கொள்ள வேண்டும் என்பதை அறிவுறுத்திய அவர்கள் 'மண்ணில் நல்ல வண்ணம் வாழவும்' வழி கூறினர்—இதனால் அப் பெரியார்கட்குப் பொதுமக்கள் தொடர்பு நிரம்ப இருந்தமையை அறிகிறோம். அவர்கள்

பேசிய சமயமும் கடவுள் நம்பிக்கையும், மக்கள் அனைவரையும் இறைவனாகவே காணுகிற நிலையும் வெறும் பேச்சளவில் நில்லாமல் அவர்கள் வாழ்வுடன், குருதியுடன் கலந்த ஒன்றாக இருந்தது. ஆனால், நம்மைப் பொறுத்த வரையில் சமயம் என்பது சமயத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும் கருவியாக அமைந்துவிட்டது. பெரியோர்களாகிய அவர்கள் வாழ்ந்து காட்டியதை மறந்து விட்டு, அவர்கள் கூறியபடி வாழவும் மறுத்துவிட்டு, அவர்கள் பாடல்களை மட்டும் மனம் செய்து ஒப்பிப்பதால், பாராயணம் செய்வதால் எப்பயன் விளையும்? வெறும் பாராயணம் பயன் தருமெனில் ஒலிப்பதிவு எந்திரங்கள் அனைத்துமே பயன் பெற்று விடும்!

சைவர்களாகிய நாம் நம் நெஞ்சில் கைவைத்து நம் முன்னோர்களாகிய நால்வர் சென்ற வழியில் ஓரளவாவது செல்ல முற்படுகிறோம் என்று கூறமுடியுமா? அவர்கள் பாடல்களைப் படிக்கிறோம்; படிப்பிக்கிறோம்; ஆனால் உணர்கிறோமில்லை. கற்றல், கேட்டல் முதலியவற்றின் அப்பாற்பட்டுள்ள உள்ளத்து உணர்வோடு ஒன்றுகிறோமா?

திருமூலர் ஆகிய பெரியார் அகவாழ்க்கையில் எத்துணைத் தூரம் முன்னேறிச் சென்றுள்ளாரோ அதே அளவுக்குப் புறவாழ்க்கையிலும் முன்னேறியுள்ளார். நரம்பு மண்டலங்களைப் பற்றி உடற்கூறு வல்லுநர்கள் இன்று எத்துணைத் தூரம் அறிந்து பேசுகிறார்களோ அத்துணைத் தூரம் மூலரும் அறிந்துவைத்திருக்கிறார். எனவே அகத் துறையில் முன்னேறிவிட்ட ஒரே காரணத்திற்காகப் புறத் துறையில் முன்னேற்றம் இன்றி இருக்க வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை.

இறைபணியில் எத்துணை முன்னேறிச் சென்றாலும் இப்பெருமக்கள் ஏனைய உயிர்களிடத்துக் கொண்டுள்ள அன்புக்கு எல்லையே இல்லை. இதற்கு ஒரு காரணமும்

உண்டு. இறைவன் உயிர்களினின்று வேறானவன் என்று இவர்கள் கருதவே இல்லை. அதனால்தான் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று கூறினர். திருமூலர்,

''படமாடுங் கோயில் பரமற்கொன்று ஈயின்
நடமாடுங் கோயில் நம்பார்க்கங்கு ஆகா
நடமாடுங் கோயில் நம்பர்க்கொன்று ஈயின்
படுமாடுங் கோயில் பரமற்கங்கு ஆமே''

என்றும்,

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்''

என்றும் கூறுமுகமாக இதனை வலியுறுத்திப் போனார்.

உலகியலிற்கூட ஒரு தாய்க்கு ஒரு பொருளைத் தருதலினும் அவளுடைய குழந்தைகட்கு அதனைத் தருவது மூலம் அத்தாயின் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்க முடியும். அதேபோல உயிர்கட்குச் செய்யு ' உதவி கண்டு யாவர்க் குந்தாயாகிய இறைவனும் மகிழ்கிறான். குழந்தை மகிழக் கூடிய சிறிய பொருளைத்தரினும் அக் குழந்தையின் மகிழ்ச்சி கண்டு தாயும் மகிழ்கிறாள். ஆனால் அதே பொருளை நேரிடையாகத் தாய்க்குத்தரின் அச் சிறிய பொருளை ஏற்ற அவள் மகிழ்ச்சி அடைவாளா என்பது ஐயத்திற்குரியது. அதேபோல இறைவன்மாட்டு உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றையும் அர்ப்பணித்து அன்பு செய்ய வேண்டும். அது இத்துணை எளியதுமன்று. ஆனால் உயிர்கட்குத் தொண்டு செய்ய இத்துணைப்பாடு பட வேண்டா. என்றாலும் இறைவன் அதில் மகிழ்கிறான். இந்த நுணுக்கத்தை நன்கு அறிந்த மூலர் இதனை மேலே கண்ட பாடலில் எடுத்துக் கூறுகிறார்.

**உடம்பின் பயன் :**

இனி யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை செல்வ நிலையாமை என்பன பற்றியும் அரசன் செங்கோல் என்பவை பற்றியும் பேசியமையாலும் இவ்வுலக வாழ்க்கையாகிய புறவாழ்க்கை நன்கு அமைய வேண்டிய சூழ்நிலையைப் பேசியுள்ளார். அவ்வாறு இல்லாவிடின் திரிபுரைசக்கரம் முதலிய மந்திர மறைப் பொருள்களைப் பற்றிப் பேசவந்த அவர் நிலையாமை முதலியவற்றைப் பேசுவானேன்? நம்மாட்டுக் கொண்ட கருணையால் நம்மைத் தட்டி எழுப்பவே இவற்றை எல்லாம் பாடினார் என்பதே பொருத்தமாகும். ஒன்றுக் கொன்று முரணாகக் காணக்கூடியவற்றைக் கூட இவர் பேசியுள்ளார். ஒரு பாடலில் உடம்பின் இழிவைக் இறப்புகுந்து 'பானை உடைந்தாலும் ஓடாவது எஞ்சும். உடம்பிலுள்ள உயிர் பிரிந்தால் இறைப்போதும் அதனை வைத்திருக்கமாட்டோம்' என்று பேசும் அவரே,

''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே''

என்றும் பாடுவது என் கருதி ?

நம்மிடத்தில் ஒரு பொருள் கொடுக்கப்பட்டால் அதனைப் பயன்படுத்த வேண்டிய முறையிற் பயன்படுத்த வேண்டும். இன்றேல் அப்பொருள் தோன்றிய நோக்கமும் கெட்டு நம்மிடம் வந்து சேர்ந்ததன் பயனையும் இழக்கிறது. செல்வம் என்பது பிறர் துயரந்துடைக்கப் பயன்படல் வேண்டும். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்று பேசிச் செல்கிறது பழைய புறநானூறு. ஆனால் அதே செல்வம் தகுதி இல்லாதவர் மாட்டுச் சிக்கிக் கொண்டால் அவனை

யும் கெடுத்துத் தானும் கெடுகிறதன்றோ? அதேபோல உடம்பெடுத்ததன் பயன் பிறர் பொருட்டு பயன்படுதற்காக. ஆனால் அப்பயன் விளையாதபொழுது அந்த உடம்பு பாரமாகி விடுகிறது. உடம்பை வளர்ப்பது எப்போது? திடம்பட மெய்ஞானம் சேரும் வழிக்கு உடம்பு உதவியாக இருக்கும் பொழுது.

மைந்தன் நல்லனவற்றைச் செய்யும் பொழுது அவனைப் போற்றும் அதே தந்தை அவன் தவறு செய்த பொழுது இடித்துரைத்தல் போல உடம்பை ஒரு முறை போற்றியும் மற்றோர் முறை தூற்றியும் பாடுகின்றார் பெரியார். உடம்பை வைத்துக்கொண்டு பயன்படுத்தும் வழிபற்றிப் பலர் கொண்டுள்ள தவறான கருத்தையும் சாடுகின்றார். ஒரு சிலர் ஆசனம் இட்டுப் பிராணாயாமம் செய்துவிடுவதால் பெரும்பயனை அடைந்துவிடலாம் என்று நினைப்பதை எள்ளி நகையாடுமுகமாக ஒரு கருங்கல் எண்ணாயிரம் ஆண்டு நீருள் கிடப்பினும் ஒரு சொட்டு நீரையும் உறிஞ்சாததுபோல இத்தகைய சித்திகளால் எவ்விதப் பயனுமில்லை என்கிறார். மெய்யுணர்வு வாய்க்கப்பெறாமல் பொறிபுலன்களை அடக்கிப் பழகுவதால் எப்பயனும் விளையாது என்ற பேருண்மையைக் கூறுகிறார். இதே கருத்தை வள்ளுவப் பெருந்தகையும், 'ஐயுணர்வு எய்தியக்கண்ணும் பயமின்றே மெய்யுணர்வில்லாதவர்க்கு' என்று கூறுகிறார்.

விஞ்ஞானத்தின் துணைகொண்டு புற உலகில் முன்னேறியுள்ள மேலைநாட்டார் இன்று தம் அனுபவ மூலம் கண்டுள்ள புதுமை இதுவாகும். எத்துணை வசதி படைத்திருப்பினும் செல்வத்திற் புரண்டாலும் மன வாழ்வு நிரம்பாவிட்டால் எஞ்சுவது வெறுமையேயாகும் என்பதை அவர்கள் அறியத் தலைப்பட்டு, பின்னர் மனத்தைப் பற்றிய ஆராய்ச்சியிலீடுபட்டு அதன் பின்னரே மனத்துக்கும் உடலுக்குமுள்ள தொடர்பை ஆய்ந்தனர்.

உடலுக்குத் தலைவனாக மனம் இருத்தலின் மனத்தை அடக்கினாலொழியப் பொறிபுலன் அடக்கம் பயனற்றது என்பதை அவர்களும் அறியத் தொடங்கி விட்டமையின் அமைதியான வாழ்வு (Peaceful life) வேண்டும் என்று கூறுகின்றனர்.

### வெறும் பொறி அடக்கம் பயன் தராது:

பொறிகளை அடக்குவது என்பது இயற்கையை எதிர்த்துச் செய்யும் போராட்டம் என்பதையும், அதனால் எவ்வித நற்பயனும் விளைவதில்லை என்பதையும் திருமூலர் 'அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார், அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை' என்று கூறிப் போனார். இன்று பணம் பெருத்த நாடாகிய அமெரிக்காவில் தோன்றி வளரும் புதிய கூட்டம் எது என்று நினைக்கிறீர்கள்? 'ஹிப்பிகள்' எனப் பெறும் கூட்டத்தார் பலரும் பெருஞ் செல்வர்வீட்டுப் பிள்ளைகள். செல்வத்தால் மட்டும் அமைதி அடைய முடியவில்லை என்பதனைக் கண்ட அவர்கள் பல்வேறு செயற்கை மருந்துகளைப் பயன்படுத்தி மனஅமைதியைத் தேட முனைந்தனர். அவ்வழியிலும் அமைதி கிட்டாமற் போகவே 'நியூயார்க்' நகரிலும் 'சிக்காகோ' நகரிலும் தலையை மொட்டை அடித்துக்கொண்டு தெருவில் கிருஷ்ண பஜனை செய்து கொண்டு ஊர் சுற்றி வருகின்றனர்.

இதன் அடிப்படையாதாக இருக்கும் என்று யாரேனும் சைவர்கள் என்று மார்தட்டி கொள்பவர்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா? 'பொறிகளையும் புலன்களையும் படைத்த இறைவன் பையத்தியக்காரன் அல்லனே! பொறிகளைப் படைத்து இவற்றால் அனுபவிக்கப்படும் பொருள்களாகிய தனு, கரண புவன போகங்களையும் படைத்துக் கொடுத்தபிறகு இவற்றால் அவற்றை அனுபவிக்கக் கூடாது என்பது என்ன அறிவுடைமை

யாகும்? பொறி புலன்களைத் தந்த இறைவன் அவற்றின் துணைகொண்டு எவற்றை அனுபவிக்க வேண்டும் என்று முடிவு செய்தற்குரிய 'பகுத்தறிவை' மட்டும் நம்மிடமே தந்து விட்டான், எனவே இவற்றைத் தவறான வழியிற் செலுத்தி விட்டுப் பொறிகளையோ அவற்றைப் படைத்தவனையோ குறை கூறுதல் பெருந் தவறாகும்.

உலகில் எதனையும் காண்பதற்குப் புற நோக்கமோ புறக் கருவிகளோ இன்றியமையாதவை என்ற கருத்தில்லை. இக்கருத்தைத் திருமூலர் மட்டுங் கூறினாரென்றில்லை; நவீன விஞ்ஞானமும் இதனை அறிவுறுத்துகிறது. 'ஒப்பியல் தத்துவத்தை' உலகுக்கு எடுத்துக் காட்டிய மாபெரும் அறிமினாகிய 'ஐன்ஸ்டீன்' என்ற மேதை தொலை நோக்காடியால் (Telescope) அற்றை நாளில் காண முடியாத 'ப்ளூட்டோ' (Piuto) என்ற கோளின் இருப்பையும் இடத்தையும் காகிதம் எழுது கோல் என்பவற்றின் உதவி கொண்டே நிலை நிறுத்தினார். மனிதன் சிந்தனையை அகமுகமாகச் செலுத்துவதன் மூலம் உண்மைப் பொருளைக் காணமுடியும் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். அகமுக நோக்கம் ஆண்டவனை மட்டுமே அறிய உதவும் என்ற தவறான எண்ணம் கொள்ள வேண்டா, அறிவை அகமுகமாகச் செலுத்துவதன் மூலமேகூடப் புற உலக அறிவை வளர்த்துக் கொள்ளலாம் என்பதையும், அவ்வறிவை இன்னும் ஆழமாகச் செலுத்துவதன் மூலம் மெய்ப் பொருளைக் காணவும் கூடும் என்பதையும் அறிதல் வேண்டும்.

சத்தியப் பொருளை, நித்தியப் பொருளை அறிவதற்கு அகமுக நோக்கம் பயன்படுகிறது. அவ்வாறு உண்மைப் பொருளை அறிகின்ற முறையில் பல்வேறு உண்மைகளையும் அவ்வகமுக நோக்கம் கண்டு வெளியிடுகிறது. மனிதப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு ஆன்மிக

முன்னேற்றத்துக்கு அடிகோலுவதும், பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு அறிய முற்படுவதும் அகமுக நோக்கமேயாகும். எந்த வழியிற் சென்றாலும் இறுதியில் அடையும் பயன் ஒன்றேயாகும். வழிகள்தாம் பல வகையே தவிர முடிவு ஒன்றுதான்.

**அறிதலும் உணர்தலும் :**

அகமுக நோக்கம் ஒன்றையே துணையாகக் கொண்டு திருமூலர் எத்தனை எத்தனையோ உலகங்களைப்பற்றிக் கூறிக்கொண்டு செல்கிறார். அவையெல்லாம் நம்மைப் பொறுத்தவரை ஊமையன் கண்ட கனவாகவே உள்ளன. அவர் கூறுகின்ற சக்கரங்கள் என்ன என்பதை இன்று பலர் அறிய முடியுமா? ஒரு பொருளை ஆராய்ந்து அதன் இயல்புகளை அறிவது வேறு; அதனை அனுபவிப்ப தென்பது வேறு. சர்க்கரை என்ற பொருளைச் சுவைத்து அனுபவிப்பது ஒன்று; அதே சர்க்கரையைச் சோதனைக் குழாயிலிட்டு அதன் இயல்பு என்ன என்று ஆராய்வது வேறு. திருமூலரைப் பொறுத்த மட்டில் பொருளை ஆராயவும் செய்கிறார், அனுபவிக்கவும் செய்கிறார்.

பக்திமார்க்கத்தில் சென்ற அடியார்கள் இறைவனைப் பக்தி அறிவின் துணைகொண்டு ஆராயாமல் அன்பின் துணைகொண்டு பக்தி செய்தனர். பின்னர்த் தோன்றிய மெய்கண்டார் போன்ற பெரியோர்கள் அறிவின் துணை கொண்டு இறைவனின் இயல்பையும், உலகின் இயல்பை யும், ஆராய முற்பட்டனர். 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர்விட்டு நின்றுள்ளன் எங்கள் சோதியான்' என்று எந்தப் பரம் பொருளை அறிவின் துணைகொண்டு ஆராய வேண்டா என்று ஞானசம்பந்தர் கூறினாரோ அதே பொருளைப் பற்றி மெய்கண்டர் 'அவன், அவள், அது எனும் அவை

மூநிலையில்' என்று ஆராயத் தொடங்குகிறார். இதிலிருந்து நாம் அறிய வேண்டிய உண்மை ஒன்றுண்டு.

நம்முடைய முன்னோர்கள் காலத்திற்கேற்பத் தம்வழி முறைகளை மாற்றிக்கொண்டு உலகிற்கும் பயன்பட அஞ்சியதில்லை. திருஞானசம்பந்தப் பெருமான் காலத்தில் பரவி இருந்த சைன சமயக் கொள்கைகள் அறிவைப் பெரிதும் நம்பி இருந்தன. அறிவின் துணைகொண்டு மட்டும் எல்லாவற்றையும் ஆய்ந்துவிட முடியாது; அது அனைவருக்கும் ஏற்புள்ள வழியுமன்று என்பதை வலியுறுத்தற்காக ஞானசம்பந்தர் பக்திமார்க்கத்தை வலியுறுத்தினார். ஆனால் 12-ம் நூற்றாண்டின் பின்னர் உள்ள தமிழகத்தில் மறுபடியும் சூழ்நிலை மாறிவிடுகிறது. அறிவை வலியுறுத்தி அதன்மூலம் மக்களுடைய பலவாகிய தேவையற்ற நம்பிக்கைகளைப் போக்கவேண்டி சூழ்நிலை ஏற்படுதலின் மெய்கண்டதேவர் போன்றவர்கள் ஏதுக்களையும் எடுத்த மொழியையும் கொண்டு பொருளின் உண்மையைச் சாதிக்கப் புகுந்தனர்.

சர்க்கரையின் இயல்பை நாவில் இட்டுக் காட்டும் திருஞானசம்பந்தரும், சோதனைக் குழாயில் போட்டு அதன் இயல்பை விளக்கும் மெய்கண்டாரும் இரண்டு வேறுபட்டவழிகளை மேற்கொண்டார்கள், இவ்வாறு கூறுவதால் ஒருவர் வழி தவறு என்றோ மற்றொருவர் வழி சரியானதென்றோ கூறல் முடியாது, காலத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப நம் பெரியோர்கள் தாம் கூறும் வழிகளை மாற்றிக் கொண்டனர். திருஞானசம்பந்தர் கூறியதற்கு எதிராக மெய்கண்டார் கூறியதனால் நால்வர் வழியை மீறிவிட்டார் என்றோ அவர் சைவத்தை எதிர்த்துப் புதுவழி கண்டார் என்றோ யாரும் குறை கூறத் துணிவதில்லை யன்றோ?

**சாத்திர தோத்திர வழிகள் :**

தோத்திரவழி (பக்திவழி), சாத்திர வழி என்ற இரண்டும் மக்கள் முன்னர் வைக்கப்பட்டன. அவரவர் பக்குவத்திற்கேற்ப அவரவர் தாம் மேற்கொள்ளும் வழியை அறிந்து ஏற்றுக்கொண்டனர். இனிப்புப் பண்டமும் காரப் பண்டமும் பசியைப் போக்க உதவு கின்றனவெனில் ஒன்றிற்கொன்று உயர்வு தாழ்வு கற்பிப்பது எங்ஙனம்? இதை நன்கு புரிந்துகொண்டால் சாத்திர வழிக்காரர்கள் தோத்திர வழிக்காரர்களை மறுத்துரைக்கவோ இவர்கள் அவர்களை மறுத்துரைப் பதற்கோ வழி இல்லாமற் போய்விடும்.

இக்கருத்து நம்முடைய நாட்டைப் பொறுத்தவரைப் புதுமையானதன்று. திருமுருகாற்றுப்படை ஆசிரியர் இதனை வலியுறுத்திக் கூறுகிறார். ‘சேவடி படரும் செம்மல் உள்ளம்’ ஒன்றுதான் தேவையானது. அது மட்டும் இருந்துவிட்டால் ‘இன்னே பெறுதி நீ முன்னிய வினையே!’ என்று கூறுகிறார். வேண்டப்படுவன ஒரு குறிக்கோளும் நெஞ்சில் உறுதியுமேயாம். அவை இருக்கு மானால் எந்தவழியை மேற்கொண்டாலும் தவறில்லை. இறுதியில் பயன் பெற முடியும்.

உலகையும் அது இருக்கும் சூழ்நிலையையும் நன்கு எடுத்துக் காட்டுகிறார் திருமூலர். நிலையற்ற உலகம் என்பதனால் அதனை அனுபவிக்கக் கூடாது என்ற கருத்தில்லை. ஆனால் இந்த அனுபவமே எல்லாம் என்று நினைக்கின்ற தவற்றை மனிதன் செய்துவிடக் கூடாது என்பதே இவருடைய நோக்கம். மனிதனுக்கு இருதயம் என்ற ஒன்று இருக்கிறது என்பதையே பிறநாட்டார் அறிந்து கூறுவதற்கு முன்னர் திருமூலர் அது இருப்பதை யும், அதுவும் இடப்பக்கத்தில் இருப்பதையும், அது தாக்கப்பட்டால் இறப்பு வெகு விரைவில் கிட்டும். என்ப

தையும் இருதய நோய் உடையார் தாக்கப்படும்போது முன் எச்சரிக்கை எதுவும் இராது என்பதையும் எத்துணை அழகாகக் கூறுகிறார்.

''அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக் கொடி யாரொடு மந்தணம் கொண்டார்
இடப்பக்கமே சிறிது இறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே!''

என்பது அவர் வாக்கு.

**இன்ப நாட்டமே குறிக்கோள் :**

வாழ்க்கை எத்துணை மென்மையானது எவ்வளவு விரைவில் முடியக் கூடியது என்பதை இவண் காட்டும் திருமூலர், மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழவும் முடியும் என்பதையும் எடுத்துக் கூறியுள்ளார். இவ்வாறு மாறுபட்ட கருத்துகளைத் திருமூலர் தேவை இல்லாமல் கூறவில்லை. அதற்கொரு ஆழமான காரண முண்டு.

ஓர் அறிவுயிராகிய அமீபா (Ameba) விலிருந்து ஆறறிவு படைத்த மனிதன் ஈறாக அனைவருக்கும் பொதுவான இயல்பாக ஏதேனும் உண்டா? உண்டு. அதுவே துன்பத்தை வெறுத்தலும் இன்பத்தை நாடலு மாம். இந்த உயிர் இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு திருமூலர் துன்பத்தை எடுத்துக் காட்டுகிறார். இதனை வெறுக்கும் உணர்ச்சியைத் தூண்டிவிட்டுஅடுத்து இன்பத்தை அடையும் வழியைக் கூறுகிறார். ஒவ்வொரு துன்பமாகக் களைந்தாலும் அது வேண்டப்படுவதே யாகும். 'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்' என்பது பொதுமறை. ஆனால்ஒவ்வொரு துன்பமாகக் கண்டு களைவதென்பது மரத்தின் ஒவ்வொரு

கிளையாக முறிப்பது போலாகும். மரத்தை அழிக்க வேண்டுமாயின் வேரைக் களைந்து வெந்நீரை விட வேண்டியதுதானே! அதுபோல எல்லாத் துன்பத்திற்கும் காரணமாயுள்ள பிறவித் துன்பத்தைப் போக்க முயல்வது தானே முறை. இவ்வாறு பிறவியைப் போக்கவேண்டும் என்று கூறும் மூலரே ஒருவன் ஐயாயிரம் ஆண்டுகள் வாழ லாம் என்றுங் கூறுகிறார். அவ்வாறானால் அவர் பிறவியை அறுக்கவேண்டும் என்று கூறுவது வெறும் உடம்பை ஒழிக்கவேண்டும் என்ற பொருளிலன்று என்பதுவிளங்கும். பிறவியில் ஏற்படும் துன்பத்தைப் போக்க வழியறியார் பிறவியையே போக்க நினைத்தனர்.

**உடம்பின் பயன் :**

உடம்பெடுத்ததன் பயனை அடையக் கூடுமானால் உடம்பையும்அதற்குரிய பிறப்பையும் யாரும்கடிவதில்லை. பின்னர் வந்த பெரியோர் ‘மனித்தப் பிறவியும் வேண்டு வதே’ என்றும் ‘மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பம்’ என்றும் கூறிப் போயினர். மூலரும் ‘உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே’ என்று கூறு கிறார். அவ்வாறானால் உடபின் பயன் என்று இவர்கள் எதனைக் கருதினார்கள்? ‘கூடும் அன்பினில் கும்பிடு வதையே பயன்’ என்று கருதினர்- இந்தப் பயன் உடம் பெடுத்தவர்கட்குக் கிடைக்கவில்லையெனில் பிறவி வீணாகி விடுகிறது; துன்பம் நிறைந்ததாகி விடுகிறது.

வாழ்க்கையில் நாம் என்ன செய்கிறோம்?ஒரு பொருள் நமக்குப் பயன்படும் என்று கண்டால் அதனைப்போற்றிப் பாதுகாக்கின்றோம். பயன்படாத பொருளைத் தூக்கி எறிந்துவிடுகிறோம். அதுபோலப் பிறவி பயன்படுமானால் அதனைப் பாதுகாக்க வேண்டும்! என்ன பயனை விளைக் கிறது எனில் வணங்குதலாகிய பயனை அளிக்கிறது. யாரை வணங்குவது என்ற வினாவிற்குச் சிவத்தை வணங்

குவது என்ற விடை வரும். 'சிவம்' என்றால் என்ன என்ற வினாவிற்கு 'அன்பே சிவம்' என்ற விடையை மூலர் தருகிறார் அப்படியானால் சிவனை வணங்குதலும் சிவத்தோடு இரண்டறக் கலக்க விழைவதும் அன்பை வணங்கலும் அன்புடன் இரண்டறக் கலத்தலும் வேண்டப் படுவன என்று கூறுவதால் தவறில்லை.

**அன்பு செய்தலே சிவ வழிபாடு :**

அன்புடன் கலத்தல் என்பது அன்பே வடிவாக ஆதல் எனப் பொருள்படும். அன்பே வடிவாக ஆகிறவர்கள் பிறர் பொருட்டாக வாழுகின்ற பெரியோர்களே யாவர். எனவே பிற உயிர்கட்குத் தொண்டு செய்வதே அன்புடன் கலத்தல் அல்லது சிவத்துடன் கலத்தல் என்று தருக்க ரீதியாகக் கூறிவிடலாம். இவ்வுண்மையை அறியாமலும், அறிய மறுததும் இறைவனை வழிபட்டு வேறு ஏதோ பயனை அடையப் போவதாக நினைப்பவர்கள் யார் என்ற வினாவை எழுப்பிக் கொண்ட மூலர் அவர்கள் சிவ தத்து வத்தை அறியாத அறிவிலிகள் என்ற கருத்தில் 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்' என்றும் கூறிப் போனார்.

சிவ வழிபாடு என்பது உயிர்கண்மாட்டு அன்பு கொண்டு தொண்டு செய்தலே என்பதை இத்துணை அழகாகவும், விளக்கமாகவும், தருக்க முறையிலும், கூறி உள்ளனர் நம் முன்னோர் என்பதை இக்காலத்துக் கேற்ப எடுத்துக் காட்டாத நாம் சைவர்களா? இல்லை சைபர்கள்.

இத்துணை உயர்ந்த நிலையிலிருந்த சைவம் அடுத்த காலத்தில் வெள்ளியில் இலிங்க வடிவம் வைத்து வழிபட்டால் என்ன பயன் தங்கத்தில் வைத்து வழிபட்டால் என்ன பயன் என்றும், வெள்ளைமலரால் அருச்சித்தால்

என்ன பயன் கிட்டும், சிவப்பு மலரால் அருச்சித்தால் என்ன பயன் கிட்டும் என்றும் சரித்திரம் வகுக்கத் தொடங்கி விட்டது. சிவபூசையை ஒரு வியாபாரமாக்கிய பெருமை பிற்கால சாத்திரங்கட்கு (அவற்றின் பெயரைக் கூற விரும்பவில்லை) உரியதாகும்.

''நல்லவும் தீயவும் அல்ல
குவிமுகிழ் எருக்கம் ஆயினும் கடவுள்
பேணேம் என்னா''

என்று பழைய புறநானூறு கூறவும் 'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்று மூலர் கூறவும் 'ஐய நின்மாட்டு யாஅம் இரப்பவை, பொன்னும் பொருளும் போகமும் அல்ல, அன்பும் அருளும் அறன் மூன்றும்மே என்று பரிபாடல் கூறவும் மிக உயர்ந்த நிலையில் இருந்த சைவ சமயம், இன்ன பூவுக்கு இன்ன பயன் என்று கூறும் இழி நிலைக்கு வந்தமையாலேயே இன்று அது கேட்பாரற்றுக் கிடக்கிறது.

**பரந்த மனப்பான்மை :**

மிகப் பழமையான நம்முடைய சமயம் எத்துணைப் பரந்த மனப்பான்மையுடன் யாவரையும் தன்னுள் அணைத்துக் கொண்டு வளர்ந்தது என்பதை நினைக்கையில் உண்மையான பரவசமும் பெருமிதமும் அடையலாம். உயர்ந்தார், தாழ்ந்தார், கற்றார், கல்லாதார், உடையார், இல்லார் என்ற வேறுபாடற்று அர்த்தமற்ற சடங்குகட்கு இடந் தாராமல் எல்லா உயிர்களிடத்தும் இறைவன் உறைகின்றானாகலின் உயிர்கட்குத் தொண்டு செய்வதே சமயத் தொண்டு என்ற மிக உயர்ந்த குறிக்கோளுடன் இருந்த சமயம் எங்கே? புறச் சமயத்திலிருந்து மீண்ட திருநாவுக்கரசர் 'பிராயச்சித்தம்' செய்து கொண்டா சைவரானார்? எத்தகைய மனநிலை உடையாருக்கும்

-ய்சுதிகாட்டுகின்ற முறையில் இருந்த சமயம், மக்கள் பாழ்க்கையில் இரண்டறக் கலந்து அவர்கள் இரத்த ஓட்டத்தோடு கலந்திருந்த சமயம் இன்று வெறும் வெளிப் பூச்சாய்ஆரவாரமுடைய சடங்குகளாய் நின்றுவிட் -மையின் உண்மைச்சமயத்தைப்பற்றிக் கவலைப்படுவார் யாரும் இல்லாமற் போய்விட்டனர்.

'அப்பாலும் அடி சார்ந்தார்' அனைவரையும் உளப் படுத்திக்கொண்டு அகில உலகத்திலும் உள்ளார், அனை வருக்கும் பொதுவாக இருந்த சமயம் இன்று இருக்கும் நிலை யாது? 'இன்று சைவ சாப்பாடு' என்று கூறுகின்ற முறையில் சாப்பாட்டுச் சைவமாகி நிற்கும் அவல நிலை ஏன்?

இறைவனுக்கு செய்யும் தொண்டைவிட உயிர்கட்குச் செய்யும் தொண்டே சிறந்தது என்றும் அதில்தான் இறை வனும் மகிழ்கிறான் என்றும் கூறிய சைவ சமயம் உண்மை யிலேயே உலக சமயங்களுள் மிக உயர்ந்தது என்பதில் ஐயமில்லை. இதனை உலகம் முழுவதற்கும் எடுத்துக் கூறிச் 'சேரவாரும் சகத்தீரே' என்று அழைக்க வேண்டிய வர்கள் தமிழர்களாகிய நாம்.

இத்தகைய சமயத்தையும் அதன் உண்மையான தத்துவத்தையும் உள்ளவாறு எடுத்துக் கூற முற்பட்டால் ஓயாத அல்லலிற் சிக்கித் தவிக்கும் இன்றைய உலகம் உடனே செவிசாய்க்கும். மனிதன் சந்திர மண்டலத்துக்குப் போனாலும் அவனுடைய மனம் அவன் கூடத்தான் போகிறது. 'மனம் அடங்கக் கற்காவிட்டால் எந்த மண் டலத்திற்குச் சென்றாலும் அமைதி கிட்டாது. எனவே மனிதன் பெறவேண்டிய அந்த ஒப்பற்ற அமைதியை உள்ளவாறு எடுத்துக் கூறும் 'திருமூலர்' போன்ற நூல் களை நம்முடைய பூசைப் பெட்டியை விட்டு வெளிக் கொணர்ந்து காலத்திற்கேற்பப் பரப்பினால் நாமும் உலகமும் உய்வோம். இக்கருத்தை முன்னரே சோழப்

பேரரசின் அமைச்சராக இருந்த சேக்கிழார் என்ற பெரியார் தீர்க்க தரிசனம் போல் சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனிவரும் காலத்தின் சிறப்பும் இன்று எழுந்தருளப் பெற்றபோது இதனால் என்றைக்கும் திருவருள் உடையோம்' என்று கூறிப்போனார். அவர் கூறியாங்கு இன்று முதல் நம்மிடையே நல்லெண்ணம் எழுவதாக.

# சைவ சமயம்

*''மருந்து அவை மந்திரம் மறுமைநல் நெறியவை*
*மற்றும் எல்லாம்*
*அருந்துயர் கெடும் அவர் நாமமே சிந்தைசெய்*
*நல்நெஞ்சமே!*
*பொருந்து தண்புறவினில் கொன்றைபொன்*
*சொரிதரத் துன்றுபைம்பூம்*
*செருந்தி செம்பொன் மலர் திருநெல்வேலி உறை*
*செல்வர்தாமே ''*

*-3-92-1*

**பெரியோர்களே ! தாய்மார்களே ! !**
**சகோதர, சகோதரிகளே ! !**

*சைவசித்தாந்த சபையின் 67-வது ஆண்டு விழாவைக் கொண்டாடத் திக்கெலாம் புகழ் உறும் திருநெல்வேலி உறைசெல்வர் திருவடியில் கூடி இருக்கும் உங்கள் அனைவருக்கும் என்னுடைய பணிவார்ந்த வணக்கங்கள் உரியனவாக. ஏறத்தாழ 35 ஆண்டுகளின் பின்னர்ச் சைவ சித்தாந்த மகா சமாசத்தில் பங்குபெறும் ஒருநிலை ஏற்பட்டது குறித்து என் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

---

*24-12-72 அன்று நடைபெற்ற திருநெல்வேலி சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் நிகழ்த்திய தலைமை உரை.*

பிறசமயத்தவர் இறைவன் இருக்குமிடத்திற்கு உயிர்கள் தேடிச் செல்லவேண்டும் என்று கூறுவர். ஆனால் நம் அரும்பெரும் சைவ சமயத்தில் வேறுவிதமாய் பேசப்படுகிறது. குற்றமும் சிற்றறிவும் உடைய உயிர்கள் அவனை நாடிச் செல்லல் இயலாது. ஆதலின் கருணைக்கடலாகிய அவன் அவர்கள் (உயிர்கள்) இருக்கும் இடம் நாடி வருகிறான் என்று பேசுகிறார் தலைமகனாகி நின்ற தமிழ் ஞானசம்பந்தர். அதுவும் அக்கருத்தை திருநெல்வேலியில் பேசுகிறார்.

''என்றும் ஓர் இயல்பினர் என நினைவு அரியவர்
ஏறுஅது ஏறிச்
சென்றுதாம் செடிச்சியர் மனைதொறும் பலிகொளும்
இயல்பு அதுவே
துன்றுதண் பொழில் நுழைந்து எழுவிய
கேதகைப்போது அளைந்து
தென்றல் வந்து உலவிய திருநெல்வேலி உறை
செல்வர் தாமே.''

-3-92-2

**பரபக்கம் பேசவேண்டா:**

உலகிலுள்ள பல்வேறு மக்களும் தத்தமக்கென்று ஒவ்வொரு சமயத்தை வகுத்துக் கொண்டு அதனைப் பின்பற்றி வருகின்றனர். ஆனால் அத்தகைய சமயங்கட்கும் சைவ சமயத்திற்கும் ஒரு பெரிய வேறுபாடு உண்டு. அப் பிற சமயங்கள் உயர்ந்தவையா தாழ்ந்தவையா என்ற தேவையற்ற வாதத்தில் புகுவது இற்றை நாளில் சரியன்று. பரபட்ச மூலம் பிறவற்றின் குறைபாடுகளைப் பற்றிக் கூறும் காலம் மலையேறிவிட்டது. இன்று ஒவ்வொரு சமயத்தின் தார தம்மியத்தை எடுத்துப் பேசுவதை விட்டுவிட்டு இப் பல்வேறு சமயங்களிடையே காணப்பெறும் ஒருமைப்பாட்டைக் காணப்புகுவது நன்று. இவ்வாறு ஒருமைப்பாட்டைக் காணப் புகுவதன்

முன்னர்ச் சைவசமயமாகிய நமது சமயத்தின் தனி இயல்பு ஏதேனும் உண்டா என அறிவது நலம்பயக்கும். புத்தம், சமணம், கிறித்துவம். இஸ்லாம் போன்ற சமயங் கள் ஒவ்வொரு தனி மனிதரால் வகுக்கப் பெற்றன.

**தனி மனிதர் வகுத்தவை:**

தனி மனிதர்கள் தீர்க்கதரிசிகளேயாயினும் அவர் களால் வகுக்கப்பட்ட சமயம் பிறரைத் தம் வழிபடுத்த வேண்டும் என்று கருதும் குறிக்கோளுடையது. தீர்க்க தரிசிகளாகிய அவர்கள் கண்டு கூறிய வழியே உண்மை வழி என்றும் பிற வழிகள் வழிக்காட்டா என்றும் நம்பும் சமயங்கள் அவை. எனவே உய்வுபெற வேண்டுமாயின் அச்சமயங்களை நிறுவிய தீர்க்கதரிசிகள் வகுத்த வழி களைப் பின்பற்றி அவர்கள் கூறியபடியே நடந்துகொள்ள வேண்டும் என்றும் இன்றேல் நரகமே கிடைக்கும் என்றும் கூறுபவை அப்பிற சமங்கள்.

**சைவத்தை ஆக்கியவர் யார்?**

இதன் எதிராக இச்சைவ சமயத்தைத் தோற்று வித்தவர் யார் என்றால் ஒருவரும் இல்லை என்றுதான் விடை கூற நேரிடும். நால்வர் முதலியோர் தோத்திரப் பாடல்கள் பாடித் தம் இறை அன்பை வெளியிடுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சைவம் இருந்து வந்தது. இவர்கள் தம் இறை அன்பை அறிவிப்பதன் மூலம் பிறருக்கு அன்பு வழியை அறிவுறுத்தினார்களே தவிர யாரையும் சைவராக மாற்ற முயலவில்லை. பிற சமயிகள் போற்றி ஏற்றுக்கொள்ளும் சமயமாற்றம் (Convertion) இவர்கள் விரும்பாத ஒன்று. காரணம் அவர்கள் மனநிலைக்கு ஏற்ப ஒவ்வொருவரும் சைவராக வாழமுடியும்.

**சைவன் ஆதல் எவ்வாறு:**

பிறப்பால் சைவர் என்று யாரும் இலர். சைவம் என்பது ஒரு குறிக்கோளும் மன நிலையுமே தவிரச் சில சடங்குகள் அன்று. சிவனின் இயல்பையும் ஒருவாறு அறிந்துகொண்ட பிறகு இச்சீவனுக்கு சிவனை அடைவது தவிர வேறு கதி இல்லை என்பதையும் அறியும் பொழுது ஒருவன் சைவனாக ஆகிறான். இறைவனின் பெருமையும் உயிர்களின் சிறுமையும் அறிவதற்குமட்டும் சீவனின் சிற்றறிவு பயன்படுகிறது. எத்தனை பிறவிகளில் அவன் பெருமையை நினைத்துக்கூற முயன்றாலும் அது அளவில் அடங்காது என்பதைச் சீவன் உணர ஆரம்பிக்கிறது.

''நின் அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்
நின் அடி உள்ளி வந்தனென் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமையோய்!''

-முருகு 279 81

என்ற உணர்வு வரும்பொழுதுதான் ஒருவன் சைவனாக மாறுகிறான். எந்தக்குயில் பிறந்தாலும் இந்த உணர்வு வருகின்றவரை அவனைச் சைவன் என்று கூறல் முடியாது

**இரண்டாவது நிலை:**

இத்தகைய உணர்வு வந்தவுடன் அவன் அருள் கிடைத்தாலொழியத் தனக்கு உய்கதி இல்லை என்ற உணர்வு தோன்றுகிறது.

''என்னை அப்பா! அஞ்சல் என்பவர்
இன்றி எய்த்து அலைந்தேன்'' - திருவா. 120

''மற்று அடியேன் தன்னைத் தாங்குநர்
இல்லைஎன் வாழ்முதலே'' - திருவா. 128

என்று வருந்தும் பொழுது ''கனவேயும் தேவர்கள் காண பரிய கனைகழலோனாகிய'' அவன் தனது பரம கருணையின் காரணமாக 'வான்இழிந்து இம் மணபுகுந்து

மனிதரை ஆட்கொள்ள' (திருவா-349) வருகிறான் என்ற உணர்வு பிறக்கிறது. உடனடியாகத் தான் செய்யும் பிழைகளை நினைத்து வருந்தும் உணர்வு பிறக்கிறது. 'என் பிழைக்கே குழைந்து, வேசறுவேனை விடுதி கண்டாய்' (திருவா.154) என அழுதும் 'குன்றே அனைய குற்றங்கள் குணமாம் என்றே நீ கொண்டால் என்தான் கெட்டது இரங்கிடாய்!' (திருவா496) என அவன் பால் முறையிடவும் தோன்றுகிறது. இவ்வாறு ஒருவன் ஆகும் பொழுதுதான் அவன் சைவன் ஆகிறான்.

**உயிர்கள் செய்ய வேண்டியது யாது?**

சைவர்களைப் பொறுத்தமட்டில் கிரியைகளில் அதிகம் நம்பிக்கை வைக்கப் பெற்றதாகத் தெரியவில்லை. சங்க காலத்திற்கூட இதுபற்றிப் பேசப்படுகிறது. இறப்ப உயர்ந்தவனாகிய இறைவனிடம் செல்லவேண்டும் என்று உறுதி கொண்டவன் செய்யவேண்டியவை யாவை என்ற வினாவை எழுப்பிக்கொண்டு திருமுருகாற்றுப்படை விடை கூறுகிறது.

திருவடிநோக்கிச் செல்ல வேண்டும் என்ற உறுதியும் அந்த உறுதியின் அடிப்படையாகப் பிறக்கும் புறப்பாடுமே தேவையாம். புறப்பட்டுவிட்டால் அவன் நினைத்தது உடனே கைகூடும் என்று பேசப்படுகிறது.

'' சேவடி படரும் செம்மல் உள்ளமொடு,
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்,
செலவு நீ நயந்தனை ஆயின், பலவுடன்,
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதி, நீ முன்னிய வினையே''

—முருகு 62 - 66

இத்துணைத் துணிவும் நம்பிக்கையும் கொண்டிருக்கும் மனநிலை பெறுபவனே சைவன் ஆகிறான். சைவ சமயத்

திற்கும் ஏனைய சமயங்கட்கும் உள்ள வேறுபாடு இதுவே யாகும்.

**சைவனின் தனி நிலை :**

இயேசுவை ஏற்றுக்கொண்டாலொழிய கிறித்துவ னாகவும், நபிகளை ஏற்றுக்கொண்டாலொழிய இஸ் லாமியனாகவும், புத்தனை ஏற்றுக்கொண்டாலொழிய பௌத்தனாகவும் ஒருவன் மாறமுடியாது. ஆனால் நால் வரையோ சிவஞானபோதத்தையோ ஏற்காமல் ஒரு பரம் பொருளினிடம் நம்பிக்கை கொண்டு வாழ்ந்தே ஒருவன் சைவனாக இருத்தல் கூடும். இது இவ்வாறு இல்லை எனில் சாக்கிய நாயனார் வரலாற்றுக்குப் பெரியபுராணத் தில் இடம் ஏது? நால்வரும் மெய்கண்டாரும் தோன்று முன்னர்ச் சைவமும் சைவரும் இல்லையா?

**வேதம் இன்றியும் சைவம்:**

வேதத்தை நம்பாதவர் சாக்கியர்கள். எனவே அதிற் கூறப்பட்ட ஞானபாதம் கிரியாபாதம் என்பவற்றை ஏற்காமலும் சாக்கிய நாயனார் போன்ற ஒருவர் சைவ ராக வாழமுடியும். வேதத்தை ஏற்றுக் கொண்டவர்கள் அனைவரும் சைவராக வாழ்ந்ததும் இல்லையே! தாருக வனத்து முனிவர்கள் அனைவரும் வேதத்தில் கிரியா பாதத்தை (கர்ம காண்டம்) ஏற்றுக்கொண்டவர்கள் தாமே! அவர்கள் சைவர்களா?

எனவே சைவத்தின் தனிச் சிறப்பு யாதெனில் வேதத்தை ஏற்காத சாக்கியர் சைவராகிறார்; அதனை ஏற்கும் தாருகவனத்து முனிவர்கள் சைவராக இல்லை. இன்னும் ஒருபடி சென்று இந்த நுணுக்கத்தைக் காணல் வேண்டும்.

**சைவத்தின் புதுமை :**

திருநாவுக்கரசுப் பெருமான் 'கொல்லாமை மறைந் துறையும் அமண்சமயம் குறுகி' (திருநாவு. 37) அங்கு

உண்மை காணப்படாமல் மீண்டும் சைவ சமயத்திற்கு வந்தாரே! அப்பொழுது யாது நிகழ்ந்தது? ஞானஸ்நானமோ, பிராயச்சித்தமோ நடைபெறவில்லையே! சைவ சமயத்தில் ஊறித் திளைத்திருந்த அவருடைய தமக்கையார் திலகவதியார் யாது செய்தார்? திருநீற்றை அளித்துத் தம்பியைப் பூசிக் கொள்ளச் செய்து திருக்கோயிலுக்குச் செல்லுமாறு பணித்தார். 'திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்ததென' (திருநாவு67) பூசிக்கொண்டு நாவசரர் திருக்கோயிலுக்குச் சென்று விட்டார்.

**சைவத்தின் தனித்துவம் :**

குறிப்பிட்ட ஒழுங்குமுறைகள் நடைமுறைகள் என்பவற்றிற்கு முக்கியத்துவம் தரும் சமயத்தில் இது இயலாத காரியம். ஆனாலும் யாராலும் தோற்றுவிக்கப் படாமல் மனிதனுடைய வளர்ச்சிக்கேற்ப வளர்ந்துள்ள சைவ சமயத்தில் மட்டுமே இது ஏற்கப்படுவதாகும்.

பிற சமயத்தார்களும் அன்பின் சிறப்பைக் கூறியதுண்டு. அன்பு செய்தால் கடவுளை அடையலாம் என்று கூறும் சமயங்கள் உண்டு. ஆனால் 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிவிலார், அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின், அன்பே சிவமாய் அமர்ந்து இருப்பாரே' (திருமந்திரம் 270) என்று கூறும் சமயம் சைவம் ஒன்று மட்டுமேயாம். இதே கருத்தைப் பரிபாடலும் பேசுகிறது.

"............யாஅம் இரப்பவை
பொருளும், பொன்னும் போகமும் அல்ல; நின்பால்
அருளும் அன்பும், அறனும் மூன்றும்
உருள் இணர்க் கடம்பின் ஒலிதாரோயே"

—பரி-5 (78 - 81)

ஏனைய சமயங்கள் மக்களுக்குத் தொண்டு செய்தால் அது இறைவனுக்கு உகப்பாகும் என்று கூறுகையில் **சைவ சமயம் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு** என்று கூறுகிறது.

'படமாடக் கோயில் பரமற்கொன்று ஈயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்குஒன்று ஈயின்
படமாடக் கோயில் பகவதற்குஅது ஆமே'

—திருமந்திரம்-1857.

மக்களுக்கு நேரிடையாகச் செய்யப்படும் தொண்டு இறைவனுக்குச் செய்யப்பட்டதாகும் என்று கூறுவதோடு அமையாமல் மகேசனுக்கு நேரிடையாகச் செய்யப் பெறும் தொண்டு மக்களுக்குப் **பயன்படாது என்றுங் கூறக் கூடிய வீறு படைத்தது சைவம்.** பெரிய புராணத்தில் வரும் அடியார்கள் பலரும் மக்கள் தொண்டு செய்தே மகேசன் பதம் அடைந்தனர்.

திருஞானசம்பந்தர் போன்ற தலைமகனாகி நின்றவர் களும் மக்கள் பசியால் வாடியதைக் காணச் சகியாமல் (திருவீழிமிழலையில்) மடம் வைத்தும் பஞ்சம் தீர்கின்ற வரை உணவு இட்டனர். யாரோ ஒரு பெண் கணவனைப் பறிகொடுத்து வருந்தி அழுதாள் என்றால் அது அவள் விதி என்று கூறிவிட்டுச் செல்லாமல் அவள் துயர் துடைக்க முன்வந்து கணவன் உயிரை எழுப்பித்தரப் **பாடுபடும் கருணை உடையவர்கள்.**

நஞ்சூட்டியும் நீற்றறையில் இட்டும் அமையாமல் இறுதியாகக் கல்லொடு பூட்டிக் கடலில் எறிந்தவர் களிடமும் ஒரு சிறிதும் மனத்தில் காழ்ப்புக் கொள்ளாமல் 'வழக்கிலா அமணர்' (Unconventional jains) என்று மட்டுமே கூறும் **மாபெரும் வீரர்களைப்** பெற்றது சைவம்.

**சைவத்தின் நுண்மை :**

செய்கின்ற செயலுக்கு முக்கியத்துவம் தாராமல் செயலின் பின்னேயுள்ள மனநிலைக்கு மட்டுமே முக்கியத் துவம் தருவது சைவம். இதன் பயனாகக் கரும்பை எடுத்து வளைத்து மலர்களை அம்புபோலப் போட்டவன் (மன்மதன்) எரிக்கப்படவும், கோடரியை எடுத்துத் தந்தையின் காலைச் சேதித்தவன் (சண்டேசர்) வீடு பேற்றைப் பெறவும் முடியும் என்பதை நிரூபித்தது சைவம்.

"கரும்பு பிடித்தவர்க் காயப்பட்டார் அங்கோர் கோடரியால்
இரும்பு பிடித்தவர் இன்புறப்பட்டார்..."

—4-102-5

என்பது நாவரசர் வாக்கு, எத்துணைச் சிறந்த செயலைச் செய்தாலும் அச்செயலின் பின்னேயுள்ள மனம் தூய்மையாக இல்லையெனில் நேர்மாறான பயனையே தரும் என்ற **உலகங் கண்டு வியக்கும் கொள்கை உடையது சைவம்.**

**பூசலார் வரலாறு :**

மனத்தூய்மையோடு திருக்கோயில் கட்ட முயன்று அது இயலாமற்போகவே மனத்தில் தோன்றும் நினைவு ஒன்றையே துணையாகக் கொண்டு இறைவனுக்குக் கோயில் கட்டிய பெருமை உடைய **பூசலன்பரைப் பெற்றிருப்பது சைவம்.** இத்தகைய வரலாற்றை உலக இலக்கியம் முழுவதும் தேடினாலும், கிடைப்பது அரிது.

**எது சைவம்?**

இதன் எதிராக இமயத்தில் கைலாயத்தில் உறையும் இறைவன் வந்து விரும்பி உறையத் தகுந்த கோயிலைக் கட்டிவிட்டதாக நினைத்து இறுமாந்திருந்த பல்லவனின்

கைலாயநாதர் கோயிலில் அவன் குறிப்பிட்ட நாளன்று நுழையவும் முடியாது என்று கூறிவிட்ட இறைவனைத் தலைவனாக உடையது சைவம். இறைவனே விரும்பி உறையத் தகுந்த இடத்தைத் **தான்** கட்டிவிட்டதாக நினைந்த ஒரே காரணத்திற்காக இறைவன் அக்கோயிலில் நுழைய மறுத்த வரலாறு எங்கே? இறைவனுக்கும் அத் திருக்கோயிலுக்கும் பெரும் பொருளைச் செலவழித்து விட்டதாகக் கருதிக் கொண்டு 'பக்தர் பட்டம்' பெறும் இற்றைநாட் சைவர் எங்கே?

தொட்டதற்கெல்லாம் அஞ்சி அஞ்சிச் சாகின்ற இற்றை நாட் சமுதாயத்திற்குத் தைரியம் ஊட்டி வாழ வைக்க முனைவதுபோல 'அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை' (4-2-1) 'என்றும்' 'மலையே வந்து வீழினும் மனிதர்கள், நிலையில் நின்று கலங்கப் பெறுதிரேல்' (5-91-5) என்றும் நாவரசர் பாடியது சைவம். யாரைக்கண்டும் சைவன் அஞ்சத் தேவை இல்லை என்று கூறுவார் போன்று சிறிய பெருந் தகையாராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் 'ஈனர் கட்கு எளியேன் அலேன் திரு ஆலாய் அரன் நிற்கவே'' (3-39-1) என்று பாடியது சைவம். உடலுக்குத் துயர் வந்தாற்கூட அதனைப் போக்க முனையாமல் விதி என்று கூறும் பைத்தியக்காரர்களைப் பார்த்து இவ்வாறு நீங்கள் கூறிக் கொண்டிருந்தால் இறைவன் ஏன் இருக்கிறான்; அவன் அருளை நாடி நம் குறையை முடித்துக் கொள்வதே நாம் செய்யவேண்டிய கடமை என்ற கருத்தில் 'அவ் வினைக்கு இவ்வினையாம் என்று சொல்லும் அஃது அறிவீர் உய்வினை நாடாது இருப்பதும் உந்தமக்கு ஊனமன்றே?......

செய்வினை வந்து எம்மைத் தீண்டப் பெறா! திருநீல கண்டம்! (1-166-1) என்று பிள்ளையார் பாடியது சைவம்.

நாளையும் கோளையும் கண்டு நடுங்குகின்ற இற்றைய நாள் சமுதாயத்தாரைக் கண்டு எள்ளி நகையாடுபவர்போல

> ''தான் அமர் கோளும் நாளும் அடியாரை வந்து
> நலியாத வண்ணம் உரைசெய்
> ஆன சொல் மாலை ஓதும் அடியார்கள் வானில்
> அரசாள்வர் ஆணை நமதே'' —2-85-11

என்று பிள்ளையார் பாடியது சைவம்.

நம் தேவைகள் எவையாயினும் உள்ளங் கலந்து இறைவனிடம் கேட்டால் அனைத்துங் கிடைக்கும் என்ற கருத்தை 'இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம் அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே' (7-34-1) என்று சுந்தரர் பாடியது சைவம்.

வயது முதிர்ந்த காலத்தில் இறப்பைக் கண்டு அஞ்சுவது கூட அறியாமை என்பதற்குத் தம் முதிர்ந்த வயதில் அனுபவத்தால் கண்டு நாவரசர்.

> ''கற்றுக் கொள்வன வாய்உள நாஉள
> இட்டுக் கொள்வன பூஉள நீர்உள
> கற்றைச் செஞ்சடையான் உளன் நாம்உளோம்
> எற்றுக்கோ நமனால் முனிவு உண்பதே?''
>
> — 5-91-6

என்று பாடியது சைவம்.

போலிப் பூசை செய்பவர்கள் அன்றும் இருந்தமையின் அவர்களை நோக்கி அனுபவப் பழமாகிய நாவரசர் 'பொக்கம் மிக்கவர் பூவும் நீருங் கண்டு, நக்கு நிற்பன் அவர் தமை நாணியே' (5-90-9) என்று சாட்டையடி கொடுத்தது சைவம்.

**சாதியற்ற சைவம் :**

இறைவன் படைப்பாகிய மக்களுக்குள் சாதி வேறு பாடு பாராட்டும் போலிச் சைவர்கள் எங்கே? அரிசன ராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தம்முடன் வைத்துக் கொண்ட அந்தணராகிய ஞானசம்பந்தர் எங்கே? அதுவே சைவம். பெரியபுராணம் முழுவதிலும் ஐயர் என்ற பட்டத்தை ஒன்பது இடங்களில் மட்டுமே வழங்கிச் சேக்கிழார் நான்கு இடங்களில் அச்சொல்லை இறைவனைக் குறிப்பதற்கும் நான்கு இடங்களில் மனிதரை மட்டும் குறிக்கவும் வழங்கிய சேக்கிழார் அல்லவோ சைவர்! அந்த மூவரில் திருநாளைப்போவாரும், யாழ்ப்பாணரும் அரிசனர், கண்ணப்பர் வேடர், அரிசனர்களாகிய நாளைப்போவாரையும், யாழ்ப்பணரையும் ஐயரே! என்று அழைத்தவர்கள் யார் தெரியுமா? சாதி ஐயர்களாகப் பிறந்த தில்லைவாழ் அந்தணர்களும், திருஞானசம்பந்தருமேயாவார்கள். (திருநாளை. 30—திருஞான. 133, 179, 450) கண்ணப்பரை ஐயர் என்று அழைத்தவர் சேக்கிழார் (கண்.புரா. 103) இத்தகைய **ஒருமைப்பாட்டை அன்றே கண்டிருந்தது சைவம்.**

பிறருக்கு, அதிலும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முடியாத வயது முதிர்ந்தவர்கட்குத் தீங்கிழைத்தால், இழைத்தவர் அரசனாயினும் அவனுடைய அதிகாரிகள் ஆயினும் அதற்காக அஞ்சாமல் அரசன் யானையைப் பாகரோடும் கொல்லும் ஆற்றலும்நெஞ்சுரமும் கொண்ட எறிபத்தர் வாழ்ந்து புகழ் பெற்றது சைவம்.

தாம் மேற்கொண்ட குறிக்கோளுக்கு எத்தகைய இடையூறு வருவதாயினும் உயிரைக் கொடுத்தேனும் கொள்கையை நிலைநாட்டும் அடியார்கள் பலர் வாழ்ந்தது சைவம்.

தம் எதிரே நிற்பவர் வயதால் முதிர்ந்தவராக இருப்பினும் தம் தந்தையாரின் குருவாகவே இருப்பினும் ஆணவம் நிறைந்த மனத்துடன் 'ஆணவ மலத்தின் இலக்கணம் என்னை?' என்று கேட்டால் கேட்பவரைச் சுட்டித் தம் ஆள்காட்டி விரலால் சுட்டும் இளைய பெருந் தகையாகிய மெய்கண்டதேவர் வாழ்ந்தது சைவம்.

இவ்வாறு காட்டியவர் ஐந்து வயது நிரம்பாத பாலகர் என்று அறிந்திருந்தும் அந்த ஆள்காட்டி விரல் தம் அஞ்ஞானத்தைச் சுட்டெரித்ததை உணர்ந்துகொண்டு உடனே இளைய பெருந்தகையின் திருவடிகளில் வீழ்ந்து சீடனாகும் மனப்பக்குவம் உடைய அருள்நந்தி சிவத்தைப் பெற்றிருப்பது சைவம்.

வாணாள் முழுவதும் விதிமுறை பிறழாமல் காளத்தி நாதனைப் பூசித்தும் அவனைக் கனவிலன்றி நனவிற்காண முடியாத சிவகோசரியாரையும், அவர் எதிரேயே வாழ்ந்தும் 'தன்பரிசும் வினை இரண்டும் சாரும் மலம் மூன்றும் அற, அன்பு பிழம்பாய்த் திரிந்தமையின் (கண்— 154) ஆறு நாட்களில் இறைவனே வெளிப்பட்டுத் தம் கையைப் பற்றிக் கொள்ளுமளவில் வளர்ந்து விட்ட கண்ணப்பரைப் பெற்றிருப்பது சைவம்.

உலகமுழுதும் தேடினாலும் இத்தகைய பரந்துபட்ட கொள்கைகளையும், சகிப்புத்தன்மையையும் கொண்ட சமயத்தைக் காண்பது அரிது. அத்தகைய சைவசமயத்தின் உரிமையாளராகிய நாம் நம்முடைய பரம்பரைச் சொத்து எத்தகையது என்பதை அறிந்துகொள்ளாமலும், அறிய முயலாமலும் குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டிக்கொண்டு இருக்கிறோம். சைவத்தையும் அதன் உயிர் நாடியையும் அறிய முற்பட்டவர்களின் ஆன்மா 'ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தது' (சிவஞா. போ. சூ. 8) என்று நம் பெரியோர் கூறிப்போயினர். ஆனால் இன்று சைவர்கள் என்று தம்மைக் கூறிக்கொள்பவர்கள் ஐம்புல வேடரில்

மட்டுமல்லாமல் போலிச் சமயம், போலிக் கொள்கை, போலி கிரியைகள், போலி நம்பிக்கைகள் என்ற நூற்றுக் கணக்கான வேடரின் அயர்ந்து மயங்கி நிற்கின்றனர்.

இந்த இருபதாம் நூற்றாண்டில் இறுதியில் மனிதன் சந்திர மண்டலத்திற்கும் பலமுறை சென்று வந்துவிட்ட நிலைமையில்,சமயம் என்ற ஒன்று தேவையா என்றுபலரும் கேட்கின்ற இந்த நேரத்தில், உண்மைச் சமய தத்துவங் களை அறிந்துகொண்டு போலி வேடங்களை ஒதுக்கி எறிய முன் வந்தால் ஒழியச் சமயம் நிற்க வழி இல்லை.

செத்து மடிந்து வெறும் சடங்குகளால் நிறைந்துள்ள பல சமயங்களைப் போன்றதன்று சைவம். அது உயிருடன் ஊட்டம் பெற்று வளர்ந்து வருகின்ற ஒன்றாகும். (It is a dynamic living religion and not a fassilized religion) முப்பதாம் நூற்றாண்டிற் கூட அதன் தேவை இருந்தே தீரும் அது எத்துணை முற்போக்கான கருத்துகளைக் கொண்டது என்பதைத்தான் முதலிற் குறிப்பிட்டேன். இந்த முற்போக்குக் கருத்து அதனிடை இருந்தமையால் தான் சமணம், கிறிஸ்தவம், இஸ்லாம் முதலிய பல காற்றுகள் அடித்தும் அது இன்னும் வாழ்கிறது.

காலந்தோறும் ஏற்பட்ட மாறுதல்களை ஆராய்ந்து அவற்றில் சிறந்தவற்றைச் சைவம் விரும்பி ஏற்றுக் கொண்டு,அம்மாறுதல்களைச் சீரணம் செய்து தனதாக்கிக் கொண்டமையின் புதிய ஊட்டம் பெற்று வளர்ந்தது. ஒரே ஓர் உதாரணத்தின் மூலம் இதனை விளக்கிக் கொள்ளலாம்.

ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தப் பெருமான் 'அளவு மீறிய அறிவு வாதத்தால் இறைவனை அறிந்து கொள்ள முடியாது. எனவே அளவு மீறிச் சோதிக்க வேண்டா' என்ற கருத்தில்,

"''ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்கவேண்டா சுடர்விட்டு நின்றுளன்
எங்கள் சோதி''

— 3-54-5.

என்று கூறிப்போனார். ஏழாம் நூற்றாண்டுச் சைவம் இக் கூற்றையும் பொன்னேபோல் போற்றி ஏற்றுக் கொண்டது ஆனால் 13ஆம் நூற்றாண்டில் இதற்கு நேர் மாறாக அறிவு வாதத்தால் பதியுண்மையை நிலைநாட்ட முயன்றனர். எந்த ஏதுக்களும், எடுத்த மொழியும் (பிரமாணங்கள்) பிள்ளையாரால் ஒதுக்கப் பெற்றனவோ அவற்றையே அடிப்படையாகக் கொண்டு சிவஞான போதம் பதியுண்மையை நிலைநாட்ட முயன்றது.

**கால மாற்றமும் அதற்கு ஏற்ப மாறுதலும் :**

ஆனால் பதின்மூன்றாம் நூற்றாண்டுச் சைவம் இம் மாற்றத்தை அன்புடன் எடுத்துக் கொண்டதே தவிர இது திருஞானசம்பந்தர் கூற்றுக்கு விரோதம் என யாரும் அதனை எதிர்க்கவில்லை. இதுவே வளர்கின்ற சமயம், உயிருள்ள சமயம் என்பதற்கு எடுத்துக்காட்டாகும்.

காலம் மாறும்போது ஏற்படும் மாறுதல்களை ஏற்றுக் கொள்ளாத எதுவும் காலாந்தரத்தில் வீழ்ந்து படுதல் இயல்பேயாகும். இன்றேல் உயிரற்ற சடங்காக அது நிற்றல் கூடும். ஒரே இயேசுவும், முகம்மதுவும், புத்தனும் தத்தம் மதங்களை நிறுவி இருந்தும் அவை ஒவ்வொன்றின் இடையே பற்பல கிளைச் சமயங்கள் தோன்றியமை ஏன்? காலாந்தர வளர்ச்சியை அப்பழைய சமயங்களில் ஏற்றி அதுவரை அதிற்படிந்திருந்த சடங்குக் குப்பைகளை அகற்றிப் புது ஊட்டம் தந்தமையாலே அக்கிளைச் சமயங்கள் இன்று வளர்ந்து உள்ளன.

சைவத்திலும் பாஷாண்ட சைவம், சுத்தாத்துவித சைவம் போன்ற பல கிளைகள் தோன்றினாலும் அவை

